# தேவசகாயம்பிள்ளை

(நாட்டுக்கூத்து)

புலவர் :

ஸ்ரீ. முத்துக்குமாரு

அராலி

விலை ரூபா : 5-00

# தேவசகாயம்பிள்ளை

## (நாட்டுக்கூத்து)


பாடியவர் :

புலவர் ஸ்ரீ முத்துக்குமாரு அவர்கள்

அராலி



இரண்டாவது பதிப்பு பதிப்பித்தவர் :

சமாதான நீதவானும்

ஓய்வுபெற்ற ஆசிரியரும்

ஆசீர்வாதம் அச்சகம்—புத்தகசாலை உரிமையாளருமாகிய

திரு. மு. வி. ஆசீர்வாதம் அவர்கள்

அச்சுப் பதிவு :

ஆசீர்வாதம் அச்சகம்

யாழ்ப்பாணம்

புரட்டாதி 1974] [விலை ரூபா 5-00




# தேவசகாயம்பிள்ளை நாட்டுக்கூத்து

## முதற்பதிப்பு

இற்றைக்கு 150 வருடங்களின் முன் அராலியூர் ஸ்ரீ முத்துக்குமாருப் புலவர் அவர்களால் இயற்றப்பட்டு, நாளடைவிற் பிறரது பாக்களும் சேர்க்கப்பெற்று, கரலிகதவழுவுற எழுதப் பட்டிருந்த பல பிரதிகளை ஆராய்ந்து கூடிய வரையில் திருத்தியும் சில புதிய பாக்களைச் சேர்த்தும் அச்சுவேலி, ஞானப் பிரகாச அச்சியந்திரசாலையில் 1926ஆம் ஆண்டு அச்சேற்றப் பட்டது.

## இரண்டாம் பதிப்பு

1926ஆம் ஆண்டு பதிக்கப்பெற்ற இந்த நாட்டுக்கூத்து நூல் கிட்டத்தட்ட 50 வருடங்களாகியும் மறுமதிப்புச் செய்யப் படாமையினுல், நூற்றுக்கணக்கான நாட்டுக்கூத்துப் பிரியர் களின் சார்பில் நாட்டுக்கூத்துக் கலாநிதி திரு. ம. யோசேப்பு அவர்களின் வேண்டுகோளுக்கு இணங்க, திரு. மு. வி, ஆசீர்வாதம் ஜே. பி. அவர்களால் தமது அச்சகத்தில் 1974ஆம் ஆண்டு புரட்டாதி மாதம் மறுபதிப்புச் செய்யப்பெற்றது.

---

முதற் பதிப்பின்

# முகவுரை

தற்பரனருளிய சத்திய மறைக்காய் பற்பல வருத்தம் பாரினிலடைந்து வெற்பினில்வீந்து நற்கதிசேர்ந்த சற்குணன் தேவசகாயம்பிள்ளை விற்பனன்றனது அற்புதச் சரிதை அராலியைச் செனன ஸ்தானமாயும் அனலைதீவை விவாக ஸ்தான மாயுமுடைய ஸ்ரீ முத்துக்குமாருப் புலவரவர்களால் 1827-ம் வருஷம் வரையில் நாடகமாக இயற்றப்பட்டது.

இப்புலவர் ஊர்காவற்றுறையில் ஒரு வித்தியாசாலை ஸ்தாபித்து அதில் ஆசிரியராயிருந்தவர். அக்காலத்திலேயே வேத சத்தியங்களையறிந்து அதற்கிசைவாய் இந்நாடகத்தை இயற்றினர். இஃதன்றி சீமந்தனிநாடகம், பதுமாபதி நாடகம், குறவஞ்சி, பதிகங்களாதிய பல நூல்களின் ஆக்கியோனுமாயிருந்தார். இவர் கேட்டவுடனேயே பாட்டியற்றும் வல்லமையுடையராம். பாடல்களும் மிகச் சிறந்தன. இவரது புலமைத் திறத்தைக் கண்டு ''முத்துக்குமாரன் தமிழ்ப்பாவலர்க்கு முதற்சிங்கமே'' என விசுவநாத சாஸ்திரியாரவர்களால் துதிகவி கூறப் பெற்றவர்.

இந்நாடகத்தில் சிகாமணிமாலையிலுள்ள சில விருத்தங்களுஞ் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அவ்விதம் சேர்த்த பாக்கள் பெரும்பாலும் பிற்பாகத்துள்ளன. இது பழைய நாடகமெட்டாயினும் பாடல் நயத்தாலும் இந்திய வேதசாட்சியின் சரித்திரமாதலாலும் புதிய மெட்டுகளிலும் பாடக்கூடுமாதலாலும் புராதன புலவரின் பாடல் சிதைவுறக்கூடாதென்பதைப் பற்றியும் அவர் ஓர் புறச்சமயியாயினும் பாடல்மட்டில் நம் மெய்ம் மறையில் அவர்க்கிருந்த அறிவும் அவாவும் விளங்குவதனுலும் இதை அச்சிட முயன்றோம்.

இந்நாடகம் முன்பின் 90 வருடங்களாய் ஏட்டுப்பிரதிகளிற் கிடந்தமையால் இதைப் பெயர்த்தெழுதினவர்களின் அட்சர வித்தியாசத்தாலும் கருத்துத் தெரியாத இடங்களில் தங்கருத்துக்கிசையத் திருத்தி எழுதினதாலும் சுத்தப்பிரதியாக்கப் பல பிரதிகளையழைப்பித்து ஆராய வேண்டி நேர்ந்தது. அப்படி ஆராய்ந்து பெரும்பாலும் ஒத்துப்போன பிரதிகளின் படியே திருத்தியிருக்கிறோம். நாம் திருத்தியதற் காதாரமாக அரும்பத விளக்கமுந் தந்திருக்கிறோம். சில இடங்களில் சன்மார்க்கத்துக்கு விரோதமான அல்லது சிற்றின்பாசாரமுள்ள

பாக்கள் இருந்ததனுல் மாற்ற அல்லது ஓரடியை விட்டுவிட நேர்ந்தது. இதில் கொச்சகமென்றிருப்பதை இன்னிசையென்றும் விருத்தத்தைக் கவியென்றும் சில தருக்களைச் சிந்து என்றும் கொள்ளினும் கொள்ளலாம். இது உண்மைச் சரித்திரமாயினும் இதிலிடப்பட்டிருக்கும் நாமங்களில் வித்தியாசமிருக்கிறது. உதாரணமாய், சேனுபதியை இந்நாடகத்தில் ''எஸ்தாக்கியார்'' என்று சொல்லப்பட்டிருக்க, சரித்திரத்தில் ''பெனடிற்'' என்று சொல்லப்படுகிறது. ஆகையால் நாடகக்காரர் தமக்கு இசைவான பேர்களை யிட்டிருக்கலாமென்று நம்புகிரேம்.

இந்நாடக கர்த்தாவான தேவசகாயம்பிள்ளை தாம் ஞானஸ்நானம் பெற்று ஏழாம் வருடத்தில் கால் விலங்குபூண்டு நாற்பது நாட்குறைய மூன்ரும் வருடத்தில் தமது நாற்பதாம் வயதில் *1752*-ம் வருஷம் தை மாதம் *14*-ந் திகதி வெள்ளிக்கிழமை திருவாங்கூர் மகாராசாவினுற் கொலைசெய்யப்பட்டார். அவரது உடலை குருமாராதியரின் பிரயாசத்தால் தேடியெடுத்துக் கோட்டாற்றில் இந்து தேச அப்போஸ்தலரான சம் பிராான்சீஸ்கு சவேரியார் பேரால் கட்டிய ஆலயத்தில் அடக்கம்செய்யப்பட்டது. அவர்க்கிட்டிருந்த கால்விலங்கையும் அவரது உதிரந் தோய்ந்த மண்ணையும் பூச்சியமாய்க் காப்பாற்றப்பட்டது. அவைகளால் அனேக அற்புதங்கள் நடந்ததாயுஞ் சொல்லப்படுகிறது. அவரது மனைவி இனசனர்நெருக்கத்தாலும் இராசாங்கத்திற்கஞ்சியும் தம்நிலை பிறழ்ந்ததுபோலக் காணப்பட்டாலும் அந்த அரசனுக்கு நேர்ந்த ஆபத்தைக்கண்டும் தேவஏவுதலாலும் மனந்திரும்பித் திருச்சபைக்கு இடையூறில்லாதிருந்த தென்பாண்டிநாட்டில் வடக்கன்குளத்தில் குருமாராதரவிலுள்ள மடத்தில் சேர்ந்து நித்திய இளைப்பாற்றிக்குள்ளானுளென்று தெரிகிறது. இச்சரித்திரத்தினுல் யாவரும் நற்பலனடைய வேண்டுமென்பதே நம்பேரவா.

திருச்சபை இவருக்கின்னும் வேதசாட்சிப்பட்டம் சூட்டாமையால் 8-ம் ஊர்பான் என்னும் பாப்பானவரின் கட்டளைக்கிசைய அவரால் நடந்ததாய்ச் சொல்லப்படும் அற்புதங்களைத் திருச்சபை அதிகாரத்திற்கமைந்த மனதுடனே உலகசம்பவங்களைப் போலவே சொல்லப்பட்டிருக்கிறதெனக் கொள்க.

---

இரண்டாம் பதிப்பின்

# முகவுரை

அராலியைச் சேர்ந்த ஸ்ரீ. முத்துக்குமாருப்புலவர் அவர்களால் 1827-ஆம் ஆண்டில் பாடப் பெற்ற தேவசகாயம் பிள்ளை நாட்டுக்கூத்து, இற்றைக்கு நாற்பத் தெட்டு வருடங்களுக்கு முன். அஃதாவது 1926ஆம் ஆண்டில் அச்சுவேலி ஞானப் பிரகாச அச்சியந்திரசாலையில் நூல்வடிவில் அச்சேற்றப்பட்டது.

நாற்பத்தெட்டு வருடங்கள் கடந்தமையினாலும் சொற்ப பிரதிகளே அச்சிடப்பட்டதினாலும் இன்று அந்நூல் எங்காவது எவரிடமாவது கிடைக்கக் கூடியதாக இல்லை.

நாட்டுக் கூத்துப் பிரியர்களின் சார்பில் நாட்டுக் கூத்துக் கலாநிதி திரு. ம. யேசேப்பு அவர்கள் என்னிடம் இக் குறையைக் கூறி இந்நூலைப் பதிப்பித்து உதவுமாறு வேண்டுகோள் செய்தார்.

முன்னரே மூன்று நாட்டுக் கூத்து நூல்களை அச்சேற்றிய நான் அவரது வேண்டுகோளுக்கு இணங்கி இந்தத் தேவ சகாயம்பிள்ளை நாட்டுக்கூத்தை நான்காவது நாட்டுக்கூத்து நூலாக அச்சேற்றி வெளியிட்டுள்ளேன்.

நாட்டுக்கூத்து இரசிகர்களின் ஆதிரவு கிடைப்பின், அச்சேருது இருக்கும் ஏனைய நாட்டுக்கூத்துகளையும் அச்சேற்றி அவை சிதைந்து அழிந்து போகாது காப்பாற்றலாம் என எண்ணுகிறேன்.

இந்த நாட்டுக்கூத்து முன்னர் அச்சேறியிருப்பினும், இராகதாளாத்துக்கு ஏற்பப் பிரித்து, படிப்பதற்கு இலகுவான முறையில் அச்சிடுவதற்கு முழுப்பாடல்களையும் என்னுடனிருந்து இராகத்துடன் பாடிக்காட்டி உதவி செய்த நாட்டுக்கூத்துக் கலாநிதி திரு ம. யோசேப்பு அவர்கள் சேவை மறக்கப்படத் தக்கதன்று.

எஸ்தாக்கியார், விசய மனேகரன், மரியதாசன் என்னும் நாட்டுக்கூத்துகளுடன் தேவசகாயம்பிள்ளை நாட்டுக்கூத்தையும் அச்சேற்றி நூலுருவில் வெளிப்படுத்தத் துணை செய்த எல்லாம் வல்ல இறைவனுக்கு நெஞ்சார அஞ்சலி செய்கின்றேன்.

வளர்க நாட்டுக்கூத்து

இங்ஙனம்
மு. வி. ஆசிர்வாதம், ஜே. பி.

''ஆசீர் அகம்''
29, கண்டி வீதி,
யாழ்ப்பாணம்
30-9-1974

பதிப்பாசிரியர்



ஓய்வுபெற்ற ஆசிரியரும்
ஆசீர்வாதம் அச்சகம் புத்தகசாலை அதிபருமாகிய
**திரு. மு. வி. ஆசீர்வாதம், ஜே. பி. அவர்கள்**

# பதிப்புரை

**நாட்டுக்கூத்து** வேறு; நாடகம் வேறு; சினிமா வேறு அவற்றின் பண்புகளும் வெவ்வேறனவையே. **நாட்டுக்கூத்து** என்பது இயலுக்கும் இசைக்கும் முக்கியத்துவம் கொடுத்து பழைய பண்பில் ஊறி, நாட்டிற்கும் சமூகத்திற்கும் நல்லனவற்றைக் கதைகள் மூலம் கூத்தாடிக் காட்டும் ஒருவகைக் கலை; அறம் நிலைக்க மறம் அழியும் நல்ல பண்பினைச் சுட்டிக்காட்டும் கலை அது. **நாடகம்** என்பது வசனத்திற்கும் சம்பவங்களுக்கும் முக்கியத்துவம் கொடுத்து புதிய பண்பில் ஊறி, விறுவிறுப்பான காட்சியமைப்புகளோடு பார்ப் போரை ஒரு கணம் மறக்கச் செய்யும் ஒருவகைக் கலை. **சினிமா என்பது** மேடையில் காட்டமுடியாத அற்புதக் காட்சிகளை தத்ரூப மாகச் சித்தரித்துக் காட்டும் ஒப்பற்ற ஒருவகைக் கலை; மேலை நாட்டுக்கே உரிய கலை அது.

நாட்டுற்கூத்தை அடக்கமான, அழகான ஒரு கிராமப் பெண் என்றால், நாடகத்தை கிராமமுமல்லாத நகரமுமல்லாத— பழமையும் புதுமையும் கலந்த — பெண் எனலாம். சினிமாவோ நாகரிக நங்கை. சினிமாவின் தாக்கம் முன்னிரு கலைகளையும் பெருமளவில் தாக்கியுள்ளது. கூத்தும் நாடகமும் சினிமாவின் வருகையினால் தமது தனிச்சிறப்பை இழந்தன. நாட்டுக் கூத்துக்கள் வழக்கொழிந்து வருகின்றன; நாடகங்கள் சினிமா உத்திகளோடு சேர்ந்து ''நாடகச் சினிமா'க்களாக மாறி வருகின்றன. பேசும்படக் காட்சிகள் வந்து புதிய திருப்பம் ஒன்றை ஏற்படுத்தியதினால் நாட் டுக்கூத்து, வசனம்வாசாப்பு என்பவற்றுக்கும் படக்காட்சிக்கும் இடைப்பட்டதான ஒரு நிலையில் நாடகங்கள் வளர்ச்சியடைந்துள்ளன.

இன்று நாடகங்களுக்குப் புத்துயிர் அளிக்கப்பட்டு வருகின்றது. கிராமங்கள், பட்டினங்கள் தோறும் அடிக்கடி நாடகங்கள் அரங்கேற் றப்பட்டு வருகின்றன, பல நாடகமன்றங்கள் ஆங்காங்கே தோன்றி நாடகங்களை நடத்தி வருகின்றன; அரசாங்கக் கலைக்கழகத்தினரும் நாடகங்கள் நடிக்கப்படுவதை ஊக்கப்படுத்துமுகமாக, போட்டிகள் நடாத்திப் பரிசில்கள் வழங்கி வருகின்றனர். இவ்வாறு பல்வேறு நிலைமைகள் இன்று நாடகங்களின் வளர்ச்சிக்குத் தூண்டுகோலாக உள்ளன. ஆனால், நாட்டுக்கூத்துக்களின் வளர்ச்சிக்கு (வளர்ச்சி வேண்டாம்; உள்ள நிலையைப் பேணவாவது) எந்த ஒரு தூண்டுதலும் இன்று இருப்பதாகத் தெரியவில்லை. பழமை பேணும் சில கலைஞர்கள் ஆங்காங்கே சிதறலாக நாட்டுக்கூத்துக்களை அரங்கேற்றி வருகின் றனர். அக்கலைஞர்களின் தலைமுறையுடன் நாட்டுக்கூத்துக்களும் அழிந்துவிடலாம் என்று பயப்படுவதில் அர்த்தமில்லாமலுமில்லை.

பாடலும் ஆடலும் ஒருங்கே ஒருவரால் நிகழ்த்தப்பட்ட காலம் மாறி, பாடல் ஒருவராலும் ஆடல் வேறொருவராலும் நிகழ்த்தப்படும் காலம் வந்து நாட்டுக்கூத்தின் முன்னைய அமைப்பு முறையையும் சிறப்பையும் சிதைத்துவிட்டது.

நமது பாரம்பரியம் மகத்தானது. பழமையைப் பேணாது புதுமையில் நாட்டம் கொள்வது நன்மையன்று. புதுமை வரவேற்கப்படுவதற்குரியதே. அதனால் பழமை ஒதுக்கப்படவேண்டியதுமன்று.

யாழ்ப்பாணப் பகுதியில் இற்றைக்கு முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் நாட்டுக்கூத்துக்கள் பாடப்பெற்று ஆடப்பட்டு வந்தன. நாட்டுக் கூத்து முறையில் வசனம் குறைவாகவும் பாடல்கள் அதிகமாவும் இருப்பதும், நாட்டுக்கூத்துக்குரிய பாடல்கள் பாடுவதற்குச் சிரமமானவைகளாய் இருப்பதும் பிற்காலத்தவருக்கு வெறுப்பைக் கொடுத்திருக்கிறது எனலாம். இதனால் வசனங்கள் அதிகமாகவும் பாட்டுகள் குறைவாகவும் உள்ள முறையில் நாடகங்கள் திருப்பமடைந்துவிட்டன.

நாட்டுக்கூத்து நடக்கும் நிலை உச்சமடைந்த காலத்தில், தேவசகாயம்பிள்ளை நாட்டுக்கூத்து, பூதத்தம்பி நாட்டுக்கூத்து, அலங்கார ரூபன் நாட்டுக்கூத்து, நொண்டி நாட்டுக்கூத்து, மத்தேசு மாகிறேற் நாட்டுக்கூத்து, சஞ்சுவாம் நாட்டுக்கூத்து, உடைபடா முத்திரை நாட்டுக்கூத்து, எஸ்தாக்கியார் நாட்டுக்கூத்து, மரியதாசன் நாட்டுக்கூத்து, பூதகுமாரன் நாட்டுக்கூத்து, கனகசபை நாட்டுக்கூத்து, அந்தோனியார் நாட்டுக்கூத்து, தீத்தூஸ் நாட்டுக் கூத்து, கருங்குயிற் குன்றத்துக் கொலை நாட்டுக்கூத்து முதலிய நாட்டுக் கூத்துக்கள் நாட்டின் பல பாகங்களிலும் தக்க கலைஞர்களால் சிறப்பாக அரங்கேற்றப்பட்டுள்ளன.

இந் நாட்டுக்கூத்துக்களில் உள்ள சில பாடல்களை இராக தாளத்துடன் எடுப்பாகப் பாடக்கூடியவர்கள் இப்போது மிகச் சிலரேயுளர்; அதற்கு ஒரு தனித்திறமையும் வேண்டும். இக்கூத்துப் பாடல்கள் பழந்தமிழைப் பக்குவமாகப் பேணிக்காக்கும் கருவூலங்கள் என்று கூறுவது மிகையாகாது. அவற்றை ஆழ்ந்த கருத்துடன் நோக்கில் அருமையான சொற்கள் கையாளப்பட்டிருப்பதையும், உவமைகள், வர்ணனைகள், எதுகை மோனைச் சிறப்புக்கள், அணிகள் என்பன பரக்கச் செறிந்திருப்பதையும் காணலாம்.

இவ்விதச் சிறப்புகளையுடைய நாட்டுக்கூத்துப் பாடல்கள் பல ஏட்டுச் சுவடிகளிலிருந்து அழிந்து மறைந்து கொண்டிருக்கின்றன. ஐம்பது வருடங்களுக்குமுன் தேவசகாயம்பிள்ளை நாட்டுக்கூத்து அச்சேற்றபபட்டதாயினும் அதன் பிரதிகள் இப்போது கிடைக்கத் தக்கனவாக இல்லை.

மதுரகவிப்புலவர் சூசைப்பிள்ளை அவர்கள் பாடிய எஸ்தாக்கியார் நாட்டுக்கூத்தை, நாட்டுக்கூத்துக் கலாநிதி திரு. ம. யோசேப்பு அவர்களின் தூண்டுதலாலும், துணையினாலும் 1962ஆம் ஆண்டு அச்சேற்றி அஃது அழிந்தொழிந்து போகாது காத்துள்ளோம்.

புலவர் வெ. மரியாம்பிள்ளை அவர்கள் பாடிய விசய மனோகரன் என்னும் நாட்டுக்கூத்தை 1968ஆம் ஆண்டிலும், இப்புலவரே பாடிய மரியதாசன் நாட்டுக்கூத்தை 1972ஆம் ஆண்டிலும் அச்சேற்றி அவை அழிந்தொழிந்து போகாது காத்துள்ளோம்.

இவைபோலவே அராலியைச் சேர்ந்த ஸ்ரீ முத்துக்குமாருப் புலவர் பாடிய தேவசகாயம்பிள்ளை நாட்டுக் கூத்தையும் இந்த 1974ஆம் ஆண்டில் அச்சேற்றியுள்ளோம்.

தேவசகாயம்பிள்ளை நாட்டுக்கூத்தே முதல் முதல் அச்சேறியதும், ஏனைய நாட்டுக்கூத்துகளுக்கு இராக, தாள, மெட்டுக்களின் வழிகாட்டியும் என்று கூறப்படுகின்றது.

அந்தோனிக்குட்டி அண்ணாவியார் இயற்றிய சிகாமணி மாலையில் உள்ள சில பாட்டுக்களை உள்ளடக்கி, தேவசகாயம்பிள்ளை நாடகம் இயற்றப்பட்டுள்ளதாயினும் உயர்ந்த கருத்துடைய சொற்களைக் கொண்டு பாட்டுக்கள் யாக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

கத்தோலிக்கர் அல்லாத ஒருவர் கத்தோலிக்க சமயக் கருத்துக்களையும் வரலாறுகளையும் மிகவும் பொருத்தமாகவும், உண்மைக்குப் பிறழ்ந்து செல்லாமலும் மிக இலாவகமாகப் பாடியுள்ளதை ஓர் அசாதாரண திறமை என்றே கூறவேண்டும்.

எதுகை மோனைச் சிறப்புகள், உவமைச் சிறப்புகள், அணிகள் என்பன பலவிடத்தும் படித்தின்புறக் கூடிய வகையில் அமைந்துள்ளன.

வம்பெனு நரகை யாள வந்திடு மனந்தம் பேயைக்
கும்பிடேன் வணங்கேன் போற்றேன் குலவு பன்னிருவர் வங்கிஷ
அம்புலி யரசாள் கன்னி அன்னைகைக் குழந்தை தன்னை
நம்பியே துதிப்ப தல்லால் நானென்றைத் துதித்தி டேனே.

(பக்கம் 39)

இந்த அறுசீர்விருத்தத்தில், அடிதோறும் இரண்டாம் எழுத்துக்கள் ஒரே எதுகையாகவும், அடிதோறும் முதற் சீரின் முதல் எழுத்துக்கு நான்காம் எழுத்து மோனையாகவும் இயைந்து சிறப்பைக் கொடுப்பதைக் காணலாம்.

மூண்டெழு மக்கினிநரகில் முதன்மைபெறு மலகைகையிற்
பூண்டெமை மீண்டாளப் புவியில்மனு வாய்ப்பிறந்தே
ஆண்டருளு மாளாயை யாயிரத்துச் சின்னமென்னும்
நீண்டகசை யடியென் நெஞ்சைவிட்டு நீங்காதே.

(பக்கம் 75)

இந்தக் கொச்சகப்பாவில் எதுகை மோனைச் சிறப்புகள் அமைந்திருப்பது மட்டுமன்றி, கத்தோலிக்க சமய வரலாற்றை - யேசுவின் பிறப்பு, பாடுகள் என்பவற்றை கச்சிதமாகக் கூறியிருக்கும் வகை புலவர் தாஞெரு வேற்றுச் சமயத்தவராயினும், ஒரு கத்தோலிக்கஞகவே நின்று யேசு மனிதனுய்ப் பிறந்ததையும், உலக இரட்சிப்புக்காக ''ஐயாயிரத்துச் சின்னமெனும்'' கசையடிகள் பட்டதையும் வெகு உருக்கத்துடன் விளக்கியுள்ளார்.

1. சாகாவரம் பெற்ருே ராரிப்புவிதனி லையா — இத்
   தரையைவிடிற் கதி தன்னிலுறுவேன் நான்மெய்யாய்
2. ஈற்றிற் செய்வதென்ன ஆத்மாவையும் வதைப்பாயோ—உன
   தெண்ணப்படிசெய்ய மண்ணில்நாஞெரு நாயோ?
3. என்னிறுதிகாண உன்னியிருந்திட்டாய்போலும் — வேறு
   புன்மைகளென்ன புரியவுன்ஞலியலும்?

(பக்கம் 127)

இந்தத் தருக்களிலே உலக நிலையாமையையும், ஒருவனுடைய சரீரத்துக்கன்றி, ஆத்துமத்துக்கு எவ்வித தீங்குகளும் செய்யமுடியாதென்றும், நான் சாவதை நீ விரும்பியிருக்கிருய் போலும் என்ற கூற்றிஞல் மற்றவர்களுடைய தாழ்வில் மகிழ்பவன் நீ என்று குத்திக் காட்டிக் கூறுவதும் புலவரின் பரந்த உலகறிவை விளக்குவனவாகும்.

புலவர் அவர்கள் இடையிடையே உயர்ந்த சொற்களைப் புகுத்திப் பாக்களை ஆக்கியிருந்தாலும் அவை இலக்கியச் சுவை கெடாவண்ணம் அமைந்திருப்பதிஞல் புலவரின் பாக்கள் பண்டைத் தமிழ் நிலைமையை எமக்கு எடுத்துக் காட்டுகின்றன.

இவ்வித நாட்டுக்கூத்துக்களைப் பாடிய பல புலவர்களும், பல நாட்டுக் கூத்துகளும் தமிழ் மக்களால் மறக்கப்படாதபடி கையெழுத்துப் பிரதிகளில் உள்ள நாட்டுக் கூத்துக்களை அச்சேற்றி அவை அழிந்தொழியாதபடி காப்பாற்ற நாட்டுக்கூத்துப் பிரியர்களும், தமிழ் அபிமானிகளும் முன்வருவார்களாக.

**மு. வி. ஆசீர்வாதம் ஜே. பி.**

29, கண்டி வீதி,
யாழ்ப்பாணம்.
30-9-74



நாட்டுக்கூத்துக் கலாநிதி

## திரு. ம. யோசேப்பு அவர்கள் அளித்த

# அணிந்துரை

ஈழவள நாட்டின் பாரம்பரியச் சொத்தாகிய கலை கலாச்சாரங்களில் முன்னணியில் நின்று வளர்ந்து செழித்தோங்கியவை நாட்டுக்கூத்தும் நாட்டுப்பாடல்களுமாகும்.

இற்றைக்கு ஐந்நூறு வருடங்களின் முன் நம் மூதாதையர்களால் இக்கலை பேணிப்பாதுகாத்து வரப்பட்டதாயினும் இருபதாம் நூற்றுண்டின் முற்பகுதியில் இருந்து அஃது அழிந்து ஒழிந்து போகும் நிலைமைக்குத் தள்ளப்பட்டுக் கொண்டிருந்தது.

அக்காலத்தில், பாடக்கூடிய குரலோசை, தாளவரிசை தெரிந்தவர்களை ஒன்றுசேர்த்து, ஆட்ட அசைவுகளுடனும் அலங்கார நடையுடை பாவனைகளுடனும் வட்டவடிவமான கொட்டகையில், பந்த விளக்குகள் ஒளிவீச தாள மத்தள வரிசையுடனும் பின்னணி இசையுடனும் கூத்துக்களை நடத்திவந்தனர்.

ஆனால் இன்று, நாட்டுக்கூத்துப் படிக்கக்கூடிய இராகம், தாளம் என்பன தெரிந்த வாலிபர்களைத் தேடிப்பிடிப்பது மிகமிக வசதியற்றதாகிவிட்டது. பாட்டுக்களைத்தானும் மனனம் செய்யக்கூடியவர்களைக் காண்பதரிதாகிவிட்டது. இப்படிப்பட்ட பல வசதியீனங்கள் இருந்தும் கடந்த ஐம்பது வருடங்களில் யாழ்ப்பாணப்பகுதியில் மட்டும் ஆயிரந்தடவைகளுக்கு மேல் நாட்டுக்கூத்துக்கள் மேடையேற்றப்பட்டுள்ளன.

இப்படி மேடையேற்றப்பட்டுள்ள நூற்றுக்கு மேற்பட்ட நாட்டுக் கூத்துகளில் தேவசகாயம்பிள்ளை நாட்டுக்கூத்து மட்டும் 1926ஆம் ஆண்டில் அச்சு உருவத்தில் நூலாக வெளிவந்திருந்தது. அதுவும் கடந்த ஐம்பது வருடங்களில், ஒரு பிரதிகூட எடுக்கமுடியாத நிலைக்கு வந்துவிட்டது.

நாட்டுக் கூத்துக்கள் கையெழுத்துப் பிரதிகளில் இருந்து அழிந்து ஒழிந்து போகாமலும், பாட்டுக்கள் சிதைந்து உருமாறாமலும் இருப்பதற்கு அவைகளை அச்சேற்றி நூலுருவில் வைப்பதுதான் சிறந்ததாகும்.

இதனை நன்கு உணர்ந்த நாட்டுக்கூத்துப் பிரியரும், ஓய்வு பெற்ற ஆசிரியரும், சமாதான நீதவானும், 'ஆசீர்வாத அச்சக' உரிமையாளருமான திரு. மு. வி. ஆசீர்வாதம் அவர்கள், 1962இல் வ. ம. சூசைப்பிள்ளைப் புலவர் இயற்றிய எஸ்தாக்கியார் நாட்டுக்கூத்தையும், தனது தாய்மாமனார் வெ. மரியாம்பிள்ளைப் புலவர் இயற்றிய விசயமனோகரன், மரியதாசன் என்னும் இரு நாட்டுக்கூத்துக்களையும் முறையே 1968இலும் 1972இலும் அச்சேற்றி உதவினார்.

இப்பொழுது எமது வேண்டுகோளுக்கிணங்கி ஐம்பது வருடங்களுக்குமேல் அச்சேறாது இருந்ததும் அராலியூர் ஸ்ரீ முத்துக்குமாருப் புலவர் இயற்றியதுமான தேவசகாயம்பிள்ளை நாட்டுக் கூத்தை (1974இல்) தமது செலவில் அச்சேற்றி உதவியுள்ளார். இவர் இன்னும் பல கையெழுத்துப் பிரதியாகவுள்ள நாட்டுக் கூத்துக்களை அச்சேற்றி உதவுவார் என எதிர்பார்க்கிறேன்.

தேவசகாயம்பிள்ளை நாட்டுக்கூத்து, இக்காலத்து நாட்டுக் கூத்துக் கலைஞர்களுக்கு ஓர் ஆசிரியன் போன்றதாகும். தேவசகாயம்பிள்ளை நாட்டுக்கூத்தில் உள்ள பாடல்களின் மெட்டு, இராக தாளம் என்பவற்றை அனுசரித்தே பிற்கால நாட்டுக் கூத்துக்கள் பாடப்பட்டன.

கிறீஸ்து சமயத்தைச் சேராத புலவர் ஸ்ரீ முத்துக்குமாரு அவர்கள் சமய உண்மைகளை அடக்கி, இந்தியாவில் நடைபெற்ற ஒரு சம்பவத்தை அழகு தமிழில் இலக்கியச் சிறப்புடன் பாடி நாட்டுக் கூத்துக் கலைக்கு ஒரு மேல்வரிச் சட்டமாக்கிவைத்திருப்பது அவரை நாம் என்றும் நினைவுகூரத் தக்கதாக இருக்கின்றது.

இப்படிப்பட்ட நாட்டுக் கூத்துக்களை இக்காலக் கவிஞர்களும் பாடித் தமிழ்த்தாய்க்கு அணிசெய்ய வேண்டுமென்று ஆசிக்கிறேன்.

நாட்டுக் கூத்துக் கலைஞர்களும், நாட்டுக் கூத்தின் தரம், மரபு குறையாமல், தக்க கவனமெடுத்து அடிக்கடி நாட்டுக் கூத்துக்களை மேடையேற்ற வேண்டும் என்று விரும்புகிறேன்.

ஈற்றில், திரு. மு. வி. ஆசீர்வாதம் ஜே. பி. அவர்கள் நீண்ட காலம் சீவித்து கையெழுத்துப் பிரதிகளாகவுள்ள நாட்டுக்கூத்துக் களை அச்சேற்றி நூல்வடிவாக்கவும், அவருக்கு வேண்டிய ஒத் துழைப்பை நாட்டுக்கூத்துக் கலைஞர்கள் இரசிகப் பெருமக்கள் கொடுத்துதவவும் இறைவன் அருள்புரிய வேண்டும் என்று விரும்பி எனது அணிந்துரையை முடிக்கிறேன்.

**ம. யோசேப்பு**

54, ஈச்சமோட்டை வீதி,
யாழ்ப்பாணம்
25-9-1974

# தேவசகாயம்பிள்ளை

**(நாட்டுக்கூத்து)**

**இரண்டாம் பதிப்பு**

**நூல் வெளியீட்டு விழா**

**இடம்:** யாழ். புனிதர் சாள்ஸ் சாதனா பாடசாலை
**காலம்:** 30-9-74 திங்கட்கிழமை
**நேரம்:** மாலை 6-00 மணி
**தலைவர்:** மகா வந்தனைக்குரிய
யாழ். ஆயர் B. தியோகுப்பிள்ளை அவர்கள்

**நூல் விலை ரூபா 5-00**

## நாட்டுக்கூத்துக்கு ஐம்பதுவருட சேவை செய்த
## கலைஞர் ம. யோசேப்பு அவர்களுக்கு

# வாழ்த்துரை

நாட்டுக்கூத்து கலை அழிந்து ஒழிந்து போகுமோ என்று அஞ்சியகாலத்தில் அதனைப் பாதுகாத்து, வளர்த்துவந்த கலைஞர்களின் முன்னணியில் நிற்பவர் யாழ்ப்பாணத்துச் சுண்டிக்குழியைச் சேர்ந்த திரு. ம. யோசேப்பு அவர்கள் என்பதை நாடறியும்.

1926 ஆம் ஆண்டு தொடக்கம் தொடர்ந்து 50 வருடங்கள் வரை நாட்டுக்கூத்துக்குப் பலவழிகளிலும் உழைத்து வந்த இவரை இக்காலத்தில் உள்ளவர் போற்றிப்பாராட்டி பட்டங்கள் வழங்கியுள்ளார்கள். நாட்டுக்கூத்துக் கலா நிதி திரு. ம. யோசேப்பு அவர்களுக்கு எமது வாழ்த்துக்கள் உரியதாகும். அவருக்கு அளிக்கப்பட்ட நவ பட்டங்கள் அவரது அயராத சேவைக்குச் சான்றுகும்.

அவருக்கு அளிக்கப்பட்ட பட்டங்கள் பின்வருமாறு :

1. இடம் : யாழ். மத்திய கல்லூரி மைதானம்
   தலைமை : யாழ். அரசாங்க அதிபர்
   எம். சிறிகாந்தா அவர்கள்
   காலம் : 1961
   பட்டம் : நாட்டுக்கூத்துக் கலைஞர்

2. இடம் : யாழ். திறந்தவெளியரங்கு
   தலைமை : யாழ். அரசாங்க அதிபர்
   நெவில் ஜெயவீரா அவர்கள்
   காலம்: 1963
   பட்டம் : நாடக சிரோமணி

3. இடம் : யாழ் நகர மண்டபம்
   தலைமை : யாழ். மாவட்ட நீதிபதி
   செ. தனபாலசிங்கம் அவர்கள்
   காலம் : 1965
   பட்டம் : நாடகக் கலாநிதி

நாட்டுக்கூத்துக்கு

ஐம்பது வருடசேவை புரிந்த

நாட்டுக்கூத்துக் கலாநிதி



திரு. ம. யோசேப்பு அவர்கள்

(1974ஆம் ஆண்டு ஆவணி மாதம்
சுண்டிக்குளியில் நடந்த சஞ்சுவாம் நாட்டுக்கூத்தில்
ஏரோது மன்னனாகத் தோன்றும் காட்சி)

4. இடம் : கொய்யாத்தோட்டம்
கிறிஸ்துராசா கோவில் வளவு
தலைமை : கட்டளைக்குரவர் வண. எவ். குலாஸ் அடிகளார்
காலம் : 1965
பட்டம் : நாட்டுக்கூத்துச் சக்கரவர்த்தி

---

5. இடம் : ஈச்சமோட்டை மைதானம்
தலைமை: யாழ். சமாதான நீதிபதி
எம். வி. ஆசீர்வாதம் அவர்கள்
காலம்: 1969
பட்டம் : நாடகப் பேரொளி

---

6. இடம் : சுண்டிக்குளி புனிதர்
யுவானியார் கோவில் வளவு
தலைமை : ஆசனக்கோவிற் கட்டளைக் குரவர்
வண. கிறிஸ்தோத்தோம் ஜோய் அடிகளார்
காலம் : 1973
பட்டம் : கலை வேந்தன்

---

7. இடம் : யாழ். வீரசிங்கம் மண்டபம்
தலைமை : யாழ். ஆயர் மகாவந்தனைக்குரிய
பி. தீயோகுப்பிள்ளை அவர்கள்
காலம் : 1973
பட்டம் : கலைஞான பூபதி

---

8. இடம் : அச்சுவேலி சஞ் சூசையப்பர் ஆலய வளவு
தலைமை : கட்டளைக்குரவர்
வண. நீ. ம. சவிரிமுத்து அடிகளார்
காலம் : 1973
பட்டம் : இசைப் புலவர்

---

9. இடம் : கொழும்பு சரஸ்வதி மண்டபம்
தலைமை : இலங்கை முத்தமிழ்க் கலாமன்றத் தலைவர்
— வைத்தியகலாநிதி
சோ. ஆனந்தராசன் அவர்கள்
காலம் : 1974
பட்டம் : நாடக மா மன்னன்

---

# தேவசகாயம்பிள்ளை

## சரித்திரச் சுருக்கம்

இந்திய தேசத்தின் திருவாங்கூர் என்னும் இராச்சியத்தின் மகா இராசனுன வஞ்சிமார்த்தாண்ட வரேந்திரவர்மன் பத்மநாதபுரத்தை இராசதானியாகக் கொண்டு அரசுபுரிந்துவந்தான். 1750 ஆம் ஆண்டளவில் வன்மேந்திர மன்னனிடம் பிராமண குலத்தில் உதித்த நம்பூதிரி பாத் ஐயர் என்பவன் முதன் மந்திரியாகவும், வேளாண் மரபில் உதித்த நீலகண்டம்பிள்ளை என்பவன் இரண்டாம் மந்திரியாகவும் சேவைசெய்து வந்தனர்.

மந்திரி நீலகண்டம்பிள்ளையும் மனைவியும் சந்தோஷமாக வாழ்ந்துவரும்பொழுது இறைவன் அவர்களைச் சோதிக்க விரும்பி, அவர்களுக்குப் பல துன்பங்களை வருவித்து, அவர்கள் செல்வங்கள் யாவற்றையும் அழியச்செய்தார். இதனுல் மனமுடைந்த நீலகண்டன் தனது மனத் துயரை ஆற்ற வீரும்பி அக்காலத்துப் பத்மநாதபுரச் சேனுதிபதியும் தனது நண்பனும், ஐரோப்பியனுமான பெனடிக்ற் தொலானே என்பவரிடம் சென்று தனது மனத் துயரத்தைக் கூறினுன்.

தளபதி பெனடிக்ற் தொலானே ஒரு கத்தோலிக்கனுதலினுல், பல ஆறுதல் மொழிகள் கூறி கத்தோலிக்க மறையிற் சேர்ந்து கடவுளைப் பிரார்த்திக்குமாறு புத்திகூறினுர். தொலானே கூறிய புத்திமதிகளில் 'யோபு' என்பவரின் சரித்திரம் நீலகண்டனைக் கவர்ந்ததினுல், கத்தோலிக்க மறையிற் சேர ஆசைப்பட்டான். அதனுல், தொலானேவின் வழிகாட்டுதற்கிணங்க கோட்டாற்றில் உள்ள வடக்கன் குளத்துக்குச் சென்று குருவானவரிடம் தன் மனக்கருத்தை வெளியிட்டு, ஞானத்தீட்சைபெற்று, தேவசகாயம்பிள்ளை என்னும் நாமகரணம் பூண்டு கிறீஸ்தவனுகி மனமகிழ்வுடன் தன் மனைக்குச் சென்ருன்.

பலநாள்களாகத் தனது கணவனைக்காணுது கவலைப்பட்டுக் கொண்டிருந்த நீலகண்டனின் மனைவி, கணவனைக்கண்டதும் தன்னை விட்டுப்பீரிந்து இத்தனை நாளும் எங்கிருந்தீர் என்று வினுவியதற்கு தான் தளபதி தொலானேவின் புத்திமதிப்படி வடக்கன் குளம் சென்று கத்தோலிக்கனுக மதம் மாறிய கதையை விபரமாகக் கூறினுன்.

கணவன் கூறியவற்றைக் கேட்ட மனைவி, நாம் பண்டு பரவணியாகத் தொழுது வந்த சமயத்தை விட்டு நீசர் தொழும் கத்தோலிக்க மறையிற் சேர்ந்தது புத்தியல்ல என்று வாதிட்டதற்கு, தேவசகாயம்பிள்ளை தக்கபதில்கள் அளித்ததினுல், மனைவியும் கணவனின் வழியே கத்தோலிக்க மறையில் சேர மனமிசைந்தான்.

இதனையறிந்த தேவசகாயம்பிள்ளையின் மனைவியின் தாய், தன் மகளுக்கும், மருமகனுக்கும் எவ்வளவோ புத்திமதிகள் கூறியும் அவர்கள் அவள் சொல்லுக்குக் கட்டுப்படாது வடக்கன் குளத்துக்குச் சென்றனர், அங்கு தேவசகாயம்பிள்ளையின் மனைவி ஞானத்தீட்சை பெற்று ஞானப்பூ என்னும் பெயருடன் கத்தோலிக்க மறையிற் சேர்ந்து, குருவின் ஆசிபெற்று மனமகிழ்வுடன் தமது இல்லம் சென்றனர்.

வளமைப் பிரகாரம் ஒருநாள் தேவசகாயம்பிள்ளையின் வீட்டிற்கு இரு பிராமணர் வந்தபோது அவர்களை வழமைபோல முறைப்படி வரவேற்காததைத் தொடர்ந்து நடந்த பேச்சுவார்த்தைகளில் நீலகண்டம்பிள்ளை கத்தோலிக்க மறையில் சேர்ந்துள்ளதையும், தங்களையும் தங்கள் தெய்வங்களையும் மதியாததையும் புரிந்துகொண்டு கோபம்மேலிட்டவர்களாய், தமதினத்தவனான முதலாம் மந்திரி நம்பூதிரிபாத் ஐயரிடம் போய் நடந்த கருமங்களை ஒன்றுக்கு இரண்டாய்க்கூறி நீலகண்டம்பிள்ளையை தண்டித்து அடக்கும்படி கேட்டனர்.

இஃது இவ்வாறிருக்கக் கோட்டாற்றில் மரியன்னை பெயரால் கோவில் ஒன்று கட்டுவதற்குத் தேவையான மரங்கள் உதவும்படி குரு பரஞ்சோதியவர்கள் மந்திரி தேவசகாயம்பிள்ளைக்கு வேண்டுகோள் விடுத்ததினால், அவர் அரசனிடம் உத்தரவு பெறச் செல்லும்வழியில் முதல்மந்திரி அவரைக்கண்டு பிராமணர் கூறியவற்றைப்பற்றி விசாரித்தான். தேவசகாயம்பிள்ளை தாம் மதம்மாறியதைக் கூறி, தமிழ் மறையையும் தெய்வங்களையும் இகழ்ந்துரைக்கவே இருவருக்கும் தர்க்கம் ஏற்பட்டு அதனால் கோபமடைந்த மந்திரி அவ்விடம் விட்டுச் சென்றான்.

தனக்கும் நீலகண்டனுக்கும் இடையிலுள்ள பகைமையைத் தீர்த்துக் கொள்ள இதுவே தருணமென்று தீர்மானித்த மந்திரி, தாமதமின்றி அரசனிடம் சென்று நீலகண்டம்பிள்ளை மதம் மாறியதையும், தேவர்களை இகழ்த்துரைத்ததையும், அந்தணரை நிந்தித்ததையும் அரசன் கோபங்கொள்ளும் வகையில் விபரமாகக் கூறினான்.

மந்திரி கூறியவற்றைக் கேட்ட அரசன் சேவகர்களை விளித்து நீலகண்டனை உடனே அழைத்துவரக் கட்டளையிட்டான்.

சேவகர் தேவசகாயம்பிள்ளை வீட்டிற்குச்சென்று அரசனின் கட்டளையைக் கூறினர். தேவசகாயம்பிள்ளை அவர்களிடம் சற்றுநேரம் ஓய்ந்திருக்கும்படி கூறி, தனது நண்பனான தளபதி தொலானேவிடம் போய் அரசகட்டளையைத் தெரிவித்துவிட்டு, குருவானவரிடம் ஏகி தேவதிரவிய அனுமானங்கள் பெற்றுத் திரும்பிவந்து மனைவியிடம் விடைபெற்றுச் சேவகர்களுடன் அரசனிடம் சென்றார்.

அரசன் தேவசகாயம்பிள்ளையிடம் நடந்தவற்றை விசாரித்து அவர் மதம் மாறியமை உண்மை எனத் தெளிந்து அவருக்கு வேண்டிய புத்திமதிகள் கூறியும் அவர் தன் புதியமறையை மெச்சி தமிழ்மறையை இகழ்ந்ததினால் கோபங்கொண்ட அரசன் ஊரதிகாரிகளிடம் அவரை அழைத்துச் சென்று அவர்கள் விதிக்கும் தண்டனைகளை நிறைவேற்றும் படி சேவகர்களுக்குக் கட்டளையிட்டான்.

முதலாம் அதிகாரி தன் நயபயத்துக்கு அஞ்சாததைக் கண்டு சினந்து, கழுத்தில் எருக்கலம் பூமாலை சூட்டி, எருமைக் கடாவில் ஏற்றி, சூரை முட்கொப்புகள் கொண்டடித்து, மிளகுதூளிட்டு ,உபா தித்துப் பிரசித்த வீதி வழியே நடத்தித் திரும்பத் தன்னிடம் அழைத்துவரும்படி கட்டளையிட்டான். சேவகர்கள் அப்படியே ஆக் கினைகள் செய்து தேவசகாயம்பிள்ளையைத் திரும்பவும் முதலாம் அதி காரியிடம் அழைத்து வந்தனர். சற்றும் மனம்மாறாததைக் கண்ட முதலாம் அதிகாரி அவரை இரண்டாம் அதிகாரியிடம் கொண்டு செல்லும்படி கட்டளையிட்டான்.

இரண்டாம் அதிகாரியும் தக்க புத்திமதிகள் கூறி மனதை மாற்றமுடியாததுகண்டு, திரும்பவும் சூரைமுட்கொப்புகளால் அடித்து மிளகுதூளிட்டு வருத்தி தேவசகாயம்பிள்ளையின் மனநிலையை அறிந்து வரும்படி சேவகருக்குப் பணித்தான். சேவகர் மிகுந்த ஆக்கினைகள் செய்தும் அவர் மனம் மாறாததால் இரண்டாம் அதிகாரியின் கட் டளைப்படி மூன்றாம் அதிகாரியிடமும், மூன்றாம் அதிகாரியின் கட்டளைப் படி நாலாம் அதிகாரியிடமும் அழைத்துச் சென்றனர்.

நான்காம் அதிகாரி எவ்வளவோ புத்திமதிகள் கூறியும் தேவ சகாயம்பிள்ளை தனது எண்ணத்தை மாற்றாதது கண்டு, சினந்து நிழல் கண்ட இடமெல்லாம் நடத்தி, வெயில் கண்ட இடமெல்லாம் இருத்தி நன்றாய் அடித்துக் கூட்டிச்சென்று, பட்ட வேப்ப மரத்திற் கட்டி, காலில் விலங்கிட்டு ஆக்கினை செய்த பின்னும் மனம் மாறாவிட்டால் அரசனுக்கு அறிவிக்கும்படி சேவகருக்குப் பணித்தான்.

பட்ட வேப்பமரத்திற் கட்டியடித்துஆக்கினைகள் செய்யும்போது, தனது கணவனைத் தேடிச் சென்ற ஞானப்பூ அவரைக்கண்டு கலங் கித் துக்கித்து அழ, தேவசகாயம்பிள்ளை அவளுக்கு ஆறுதல் சொல்லி திடமனதுடன் கடவுளை வணங்கியிருக்கும்படி கூறி அனுப்பினார்.

இந்நிலையில் பசாசானது மனித உருக் கொண்டு தேவசகாயம் பிள்ளையிடம் சென்று புத்திமதிகூறி, அரி அயன் சிவன் என்ற கடவு ளரடங்கிய மெய்யான வேதத்தை அனுசரிக்கச் சம்மதித்தால், இழந்த அரச உத்தியோகம் கிடைக்கச் செய்வேனென்று கூற தேவசகாயம் பிள்ளை பசாசைச் சபித்துத் துரத்தினார்.

இதன்பின் சம்மனசானவர் தோன்றி அவருக்கு ஆறுதல் கூறி தேவசித்தத்தை நல்மனதுடன் ஏற்று மன உறுதியாய் இருக்கும்படி உரைத்து ஆசி வழங்கிச் சென்றூர்.

தேவசகாயம்பிள்ளை பல புதுமைகள் செய்வதையும், அவர் கட்டப்பட்டுள்ள பட்ட வேம்பு துளிர்த்ததையும் கேள்விப்பட்ட ஒரு மலடி தனக்கு மகப்பேறு கிடைக்க அருள்புரியும்படியும், ஆட்டிடையன் ஒருவன் தனது இறந்த ஆட்டிற்கு உயிர்கொடுக்கும்படியும் கேட்டு நின்றனர். தேவசகாயம்பிள்ளையும் அவர்கள் கேட்டவற்றைக் கடவுள் நாமத்தாற் கொடுத்து ஆசீர்வதித்து அனுப்பினூர், இவர் செய்யும் புதுமைகளைக் கேள்வியுற்ற அந்நாட்டுக் கிறீஸ்தவர்கள் திரள்திரளாக வந்து அவரைத் தரிசித்துச் சென்றனர்.

இவ்வதிசயங்களையும் சனத்திரளையும் கண்ட சேவகர் முதலாம் மந்திரியிடம் சென்று விபரமாகக் கூறவே, மந்திரி அரசனிடம் சென்று பட்ட வேப்பமரம் துளிர்த்ததையும் புதுமைகள் நடப்பதையும் சனங்கள் வந்து தேவசகாயம்பிள்ளையின் கால்விலங்கை முத்தி செய்து செல்வதையும் தெரிவித்து தேவசகாயனை உடனே கொன்று போட வேண்டுமென்று புத்திகூறினூன். அதுகேட்ட அரசன் மந்திரியை நோக்கி நேரிலே நீலகண்டனுடன் பேசி, அவன் மனநிலையை யறிந்து உடனே வந்து கூறும்படி கட்டளையிட்டான்.

மன்னன் கட்டளைப்படி முதல் மந்திரி தேவசகாயம்பிள்ளையிடம் சென்று கடைசிப் புத்திமதி கூறியும் அவர் மனம் மாறுதது கண்டு, அரசனிடம் தெரிவிக்கவே அரசன் அவரைக் காற்றூடி மலையுச்சிக்குக் கொண்டு சென்று கைத்துவக்காற் சுட்டுக் கொல்லும்படி கட்டளையிட்டான்.

இவ்விதம் திருமறையில் நிலைத்து நின்று, 1752 ஆம் வருடம் தைமாதம் 14 ஆந் திகதி வெள்ளிக்கிழமை, தமது நாற்பதாவது வயதில் திருவாங்கூர் மகாராசாவின் கட்டளைப்படி தேவசகாயம் பிள்ளை சுட்டுக் கொலை செய்யப்பட்டு வேதசாட்சியாக மரித்தார்.

---

அநாதிநம

யேசு மரி சூசை துணை

# தேவசகாயம்பிள்ளை

## (நாட்டுக்கூத்து)

### காப்பு விருத்தம்

சீர்கொண்ட உலகம் யாவும் சேர்பல பொருளுந் தந்து
நேர்கொண்டு காக்க வல்ல நிருமலன் பாதம் போற்றி
தார்கொண்ட தமிழாற் தேவ சகாயன்தன் சரிதை பாட
கார்கொண்ட மலையில் வந்த கத்தன்ருள் காப்ப தாமே

### மறு விருத்தம்

உருவாங்கோட் டுழுஞ்சா லெங்கும்
உதிர்முத்தை யன்னம் கண்டு
கருவாங்கோ டுறுமென் சாலில்
காத்தடை கிடக்கும் செஞ்சூல்
திருவாங்கோட் டிருக்கும் தேவ
சகாயன்தன் சீர்த்தி பாட
தருவாங்கோ டுறுகூ ராணி
தங்கியபதம் காப்ப தாமே

### அவையடக்கம்

காகம் போற்குயி லானலும் கருதிசை யதனுற் றள்ளார்
ஆகங் கூர்ந்தடி யேன்சொல்லும் அருந்தவக் காதை தன்னே
யோகஞ் சேர்பெரி யோரென்றும் முந்துறு பிழைகள் நீத்துப்
பாகஞ் சேர்த்திடு வாரென்று பன்முறை பணிவுற் றேனே

## புலசந்தோர் தோற்ற விருத்தம்

முத்துறு செய்ய கஞ்ச முகிழ்மலர்த் தேனை யுண்டு
கொத்துறு ஞிமிறு பாடும் குலவிய திருவாங் கோட்டில்
வித்தக ஞான சத்ய வியன்மறைக் குயிரே யீந்த
சுத்தனற் காதை சொல்லும் புலசந்தோர் தோற்றி னரே

## சபைதரு

இராகம் : உசேனி அடதாளம்

1. கனகங்கள் ஒளிதங்கு தரளங்கள்
புரளுபொன் மார்பினன் — வெகு
கதிதங்கு துரகங்கள் இரதங்கள்
படைபொங்கு போரினன்

2. தினமண்டர் கொடிமண்டு மதிமந்திரி
தேவ சகாயனர் — காதை
தெரிகொண்டு உரைவிண்டு சொலவென்று
புலசந்தோர் தோற்றினர்

3. கறைதுன்று மயலொன்று வருவஞ்சி
மார்த்தாண்ட ராயனர் — மதி
களிபொங்க வுரைசங்க மதிமந்திரி
தேவ சகாயனர்

4. நிறைமண்ட ம ைறநின்று முறையென்றும்
அறைகின்ற காதையை — நெஞ்சின்
நியமங்கள் கொண்டுரை நயமிஞ்சு
புலசந்தோர் தோற்றினர்

## புலசந்தோர் தரு

இராகம்: பெலகிரி அடதாளசாப்பு

1. பொன்னொளிர்பூரண விண்ணுறைதேவனே போற்றி போற்றி—மிகு
பூவும்பலபொருள் யாவும் படைத்தவா போற்றி போற்றி.

2. பன்னரிதாநன்மை தன்னுருவானவா போற்றி போற்றி — உன்தன்
பாதசரோருக நீழல்தந்தாளுவாய் போற்றி போற்றி

3. எண்ணருமாதி யனாதியுமானவா போற்றி போற்றி — ஆறு
லட்சணத்ரீத்துவ ஏகபராபரா போற்றி போற்றி

4. மண்ணினிலேமனு வாகப்பிறந்தவா போற்றி போற்றி — தேவ
மாமரிமைந்த னெனவருதேவனே போற்றி போற்றி

5. எங்களுக்காகவுன் னங்கத்தடிபட்டாய் போற்றி போற்றி — குரு
சேற்றிருப்பாணியில் வீற்றுயிர்விட்டவா போற்றி போற்றி

6. திங்களடுபதப் பங்கயச்செல்வியே போற்றி போற்றி — எங்கள்
சென்மபவங்கட்கு நன்மைதருந்தாயே போற்றி போற்றி

## புலசந்தோர் அகவல்

சீரணி வானுந் திங்களு மிரவியுந்
தாரணி யுடனே சகலமும் படைத்த
மூவரொன் றாகிய முதல்வனு நன்மைத்
தேவனி னடியிணை சிரமிசை பணிந்தேன்

பகலிடங் கதிர்கள் பரப்பியே யுலாவி
யகலிடந் தன்னி லழகிய வளஞ்சேர்
விற்பன மாஞ்செய வீரர்கள் மேவும்
பற்பநா தப்புர பார்த்திபன் றனக்கு

வளம்பெறு மிரண்டாம் மந்திரி யெனவே
விளம்புறு தேவ சகாயன் மெய்ஞ்ஞான
சத்திய வேதந் தனக்கா யுயிர்விடு
நித்திய நன்மை நிறைவுறுங் கதையை

ஏவரு மறிய இந்நிலந் தன்னிலே
மேவருந் தமிழால் விளம்பிடக் கேளீர்
மந்தமா ருதமாய் மணங்களுட் பரவு
சந்தமார் சோலையும் தடாகமும் வீதியும்

வெண்ணிலா திருமா வேமுத்தம் விளங்கும்
எண்ணிலா மலைகளு மிடம்பெறு கழனியும்
* இஞ்சிசேர் பற்ப நாதவிப் புரத்து
வஞ்சிமார்த் தாண்ட மன்னவர் மன்னன்

திக்கெலாம் புகழச் செங்கோல் செலுத்தி
மிக்கதோ ரரசில் வீற்றிருந் திடுநாள்
அழகுறு மிரண்டா மமைச்சனென் றுரைக்கும்
உளமகிழ் நீல கண்டனங் குறுநாள்

ஆதி பராபர னவர்மன தறியச்
சோதனை செய்யச் சுகிர்தனுர் தமக்கு
உள்ளசெல் வங்களொன் றொன்றுய்த் தேய்ந்து
எள்ளள வேனும் மிலாதது கண்டார்

ஆனுற் றுயருற் றலைந்திடும் வேளை
சேனு பதியாய்த் திகழுமெஸ் தாக்கி
கண்டவற் குற்ற கவலையைக் கேட்க
உண்டான துயரெலா முறுதியா யுரைக்க

அப்போது யோபென் றவர்கதை யுடனே
செப்பருந் திரீத்துவச் செயலையு முரைத்தார்
ஆராய்ந் தறிந்தங் கவனறி வாலே
சீராய் வடக்கன் குளநகர் சென்றே

குருவை வணங்கிக் கோதிலாக் கர்த்தன்
றிருஞான ஸ்நானம் சிறப்புடன் பெற்று
சத்திய வேதந் தனையே யுணர்ந்து
பத்தெனுங் கற்பனைப் படிதவ றுமல்

அறிவுட னடந்து அன்புறு மனைபோய்
உறுதியா யிருந்து ஒண்டொடி தனக்கு
அங்கே நடந்த அதிசய மெல்லாம்
சங்கோச மாகச் சாற்றிய பின்னர்

---

* இஞ்சி — மதில்

தன்மனை யாளையுஞ் சத்திய வேதம்
நன்மையென் றுரைத்து நவையறத் தேற்றி
மாமி யுரைத்திடும் வார்த்தையை மறுத்துத்
தாமிரு பேருஞ் சந்தோஷத் துடனே

குருவிடஞ் சென்று கோதிலாக் கர்த்தன்
திருஞான ஸ்நானம் சிறப்புடன் பெற்று
தீதிலா மனையிற் சிறந்துவந் திருக்க
வேதிய ரிருவர் விரைவுடன் வரவே

அவர்களைப் பழிக்க அருமறை யவர்போய்
தவறிலாக் கிறீஸ்துவின் சமயத்தை விரும்பி
நாங்கள் வணங்கிடு நற்றேவர் களையும்
பாங்காய் நரகுறு பசாசென வுரைத்து

மோடிசெய் தானென முதன்மந் திரிக்குச்
சாடைகள் சொல்லித் தாபதர் போக
மந்திரி கோப மனத்தி லிருக்க
அந்தநே ரந்தனி லன்னைமா மரிக்கு

கோவில் கோட்டாற்றிற் குறிப்புட னியற்றத்
தாவிலா மரமிகத் தரவே ணுமென்று
நிருபித்த சீட்டை நீலகண் டனுக்குக்
குருவர விடுத்த குறிப்பதைக் கண்டு

வாசித் துவணங்கி மரந்தரு வோமெனத்
தேசிக ரிடமாய்ச் சீஷரை விடுத்தார்
விடுத்து உத்தரவு வேண்டர சிடஞ்செல
அடுத்திடு மந்திரி அவனெதிர் கண்டு

மதியாம லெங்கள் மன்னனைத் தேவனைப்
புதிதா யோர்வேதம் புகுந்துநீ பழித்தாய்
எனவவன் மொழிய எதிர்மொழி மொழிந்து
மனைதனிற் றேவ சகாயன் வந்திருந்தார்

இருந்திட அமைச்சன் இராசனுக் குரைக்கப்
பொருந்திற லரசனும் புலியென வெகுண்டு
சேவக ரனுப்பத் திடமுட னவர்போய்
வாவென வுரைக்க மறுபடி குருவிடம்

போய்த்தமக் கடுத்த புண்ணிய கருமம்
ஆயத் தமாய்ப்பெற் றரசுமுன் வந்தான்
வருபவன் றன்னை மறியலில் வைத்து
இருபத் துநாலெனு மியலதி காரிகள்

கைக்கொடுத் தனுப்பக் கடிதுட னவர்கள்
மிக்கவாக் கினைகள் வேண்டிய தியற்றி
ஈற்றினிற் பெருவிளை யெனுநகர் தன்னில்
வீற்றுறு துலங்கொடு வேம்படி தன்னில்
இருந்திடும் போதில் எண்ணிலாப் புதுமைகள்
அருந்தவ னியற்றி யநேகநா ளிருந்தார்
இக்கதை தன்னை ராசனு மறிந்து
உக்கிர்ம மாக உயிர்கொல்ல நினைந்து
காற்று டிமலையிற் கைத்துவக் கதனுள்
சீற்றமோ டவனைச் *செறுத்திடச் சொன்னான்
கட்டளை மறுமற் கடுகவே கொன்றார்
வட்டவா ரிதிசூழ் வையக மகிழ
ஆறுலட் சணன்றன் னடியிணை பரவி
ஈறிலா மோட்ச மெய்தியங் கிருந்தான்
மண்டலம் புகழ வருநவக் கதையைத்
தண்டமிழ் வாணர்முன் சாற்றினேன் யானும்
சொற்பொரு ளெழுத்துத் தொடர்தளை யெனவரும்
பற்பல விலக்கணப் பழுதிருந் தாலும்
ஆம்பொரு ளெனக்கொண் டாதரித் திடவே
தேம்பயில் மலர்ப்பதம் சிரத்தணிந் தேனே.

## கட்டியகாரன் தோற்றம்

### விருத்தம்

கடம்படு கைம்மா வென்னக் கால்பெயர்த் துலாவி யென்றும்
திடம்படு மரசி ஞண்மை செலுத்தியே செங்கோல் நீதி
மடம்படா மன்னன் வஞ்சிமார்த் தாண்டன் வைகுங் கோட்டை
இடம்படு வாசல் காக்கும் இனியமா கதன்வந் தானே.

### சபை தரு

**இராகம் : மோகனம்** **அடதாளசாப்பு**

1. வள்ளைக் குளையினிற் றுள்ளுங் கயற்கண்ணார் மாரன்—வஞ்சி
மார்த்தாண்டன் வாசலிற் காத்தாண்டுலவு மொய்யாரன்
கொள்ளைக் குறுஞ்சிறைப் புள்ளுப்புறஞ் சூழுதாரன்—அதி
கோரவீரக் கட்டிய காரன் சபையில் வந்தானே.

---

* செறுத்தல் — கொல்லல்.

2. காதிட்டகுண்டலச் சோதிச்சுடரொளி வீங்க — எதிர்
கண்டிடுமண்டலர் தெண்டனுடன்பணிந்தேங்க
போதிட்டதார்கட்டு வேல்தொட்டராசன்சீரோங்கப் — புகழ்
போற்றிநிதந்துதி சாற்றுங்கட்டியகாரன் தோற்றினன்

3. காளக்கரத்திற்பொற் பாளப்பணிகள்மின் நீட — இரு
காலிற்சிலம்புகலீரிட் டொலித்தொலிநாட
தாளத்துடன்பலர் சூழத்துடர்ந்திசைபாட — வெகு
தந்தரசுந்தர விந்தைசேர் மாகதன்வந்தான்.

**கட்டியங்கூறல்**

பொன்னெடிகலும் பூம்பசுந் தாரை நிழலினுறை
புரவலர்கள் பரவு முரவோன்,
பூச்சக்ரவாள முழுதும் புகழ்பரப்பியே
புவிபுரந் தரசு புரிவோன்

மின்னெடிகலும் வேல்நராதிபர்கள் தொழுமதிக
வீரசூ ராதி[தீரன்
விதானிக்க முறுவசன வரிவையர்க ணடனமிட
விரைவினடி வருட வருவோன்

தென்னதென தென்னவென வரிவண்டு நறையுண்டு
தினமொன்று தெரியல் மாரன்
திசையெட்டு மிசைமுட்ட விருதிட்டு நிலையிட்ட
செயதுங்க ரணசிங்கமால்

உன்னதமிகுந் தகட விகடதட மதகரியி
னுலவிநட மிடுமுதாரி,
உற்பனன் விற்பனன் பற்பநாதபுர
வஞ்சிமார்த் தாண்டன்

கொலுவீதி வருகிறார் சமுகம் எச்சரீக்கை வெகுபராக்கு.

## கட்டியகாரன் தரு

**இராகம்: செஞ்சுருட்டி** **தாளம்: ரூபகம்**

மஞ்சார்சந்தனவிருட்ச வாடைமலைநாடுடையோன் வாறான் — சோதி
†மன்றமுங் *குன்றமும் நன்றுளவென்றிருள்
குன்றும்படியின்று சென்றுங்கோலஞ்செய்வீரே

† மன்றம் — நெடுந்தெரு. * குன்றம் — மலை.

பிஞ்சாரும்தேனருந்து ‡பிறங்கல்நிகர்திறங்கொள்மடவாரே — இசை
பேதமுங்கீதமும் சீதமென்போதிடை
யோதிநடங்கொண்டு வீதியிடம்வருவீரே

தருணமணிநிலவுமிழும் பொருனனதிமகாராசன் வாருன் — தீபத்
தட்டும்நவரத்னப் பட்டும்பலவிதக்
கொட்டுவேர்வெட்டுடன் சட்டவட்டமதாய்வருவீர்

கிரணமிகுமருணனிகர் பொருனன்வஞ்சிமார்த்தாண்டன்வாருன—வாசக்
கிண்ணமுமெண்ணமுந் தண்ணறுங்காவன
வண்ணமும்பண்ணியெம் மண்ணலடிநண்ணுவீரே.

## இராசன் வரவு

### விருத்தம்

கூவு வாரணங் களோடு கொம்பு வார ணம்வரக்
குமிறு கின்ற பீலியோடு விசிறு பீலி யேவரக்
தாவு சத்திரங் களோடு தவள சத்தி ரம்வரத்
தரள வாகு வலையமோடு திரளும் வாகு வலையவே
மேவு கின்ற மாதரோடு மிளிரு மாத ரேவர
விசய மிஞ்சை சேனையோடு அசைவில் விஞ்சை யோர்வர
நீவு சாமரங்கள் வீச நிகரில் †காம ரஞ்செல
நிகரில் பற்ப நாதநகர நிருபன் வந்து தோற்றினன்.

### சபை தரு

இராகம்: நீலாம்புரி தாளம்: ஜம்பை

1. மதகரடக்கரிமீது வந்தான் — மன்னர் தொழ
வஞ்சிமார்த்தாண்டனெனும் வர்மேந்திரராசன்
ரதபரிகளுலவுபடுகளமே — எதிரரசர்
இடுமகுடமுடிசிதறி விடநடவுகொளவே

2. அஞ்சார்களஞ்சியடிவீழ — அதிகநட
அரிவையர்களிருபுறமு மழகினெடுசூழ
மஞ்சாரும்விருதுகொடிநீள — மகிபன்வஞ்சி
மார்த்தாண்டன்கொலுவில்வந்தான் மகிபரடிதாள

‡ பிறங்கல் — வண்டு † காமரம் — அகில்

## வேறு தரு

இராகம் : கல்யாணி தாளம் : ஆதி

### பல்லவி

ராசமகராசனும் வந்தான் — வஞ்சிமார்த்தாண்ட
ராசமகராசனும் வந்தான்

### அனுபல்லவி

ராசமகராசர் அதி நேசமாயிறைஞ்சித்துதி
பேசப்பற்பனுதபுர தேசமதையாளுக்கிர (ராச)

### சரணங்கள்

1. தவளசக்ரக் குடைகள்நீடவே — இருமருங்கும்
தக்கவர்ணக் கொடிகளாடவே
எவர்களுமிகத்துதிக்க ரத்தினமணிகதிக்க
நவமணியொளியுதிக்க நரபாலர்மிகமதிக்க (ராச)

2. சேனைகளருகிற்சூழவே—மலர்ப்பதத்தைச்
செருநர்கள் பரவித்தாழவே
ஆனைரதம்புரவியோடு அரியகாலாட்கள்நீடு
கோனெனமிகுமேம்பாடு கொண்டு வெற்றிமாலைசூடு (ராச)

## இராசன் தரு

இராகம் : நாதநாமக்கிரியை தாளம் : ஆதி

1. அதியுக்ரமகோலன்—பற்பநாத
அவனிப்பரிபாலன்—புரவிகள்
அடரச்சேனைக டொடரக்குடைகொடி
படரக்கொலுவினில் நடவிடுவேனே

2. மதிமந்திரர்சூழ—மறுமன்னர்
துதிதந்தடிதாழ—இலங்கிடு
மணியாடக வொளி தணியாதழகிய
பணிமேவியகொலு வணிமேவுவனே

3. அரசைப் போற்றிசெய்யா—தவருடை
சிரசைப் புவியில்வையா — தரிந்திடு
அடல்பெற்றிடுவசி யிடையிறுடுகட
நடைபெற்றுளிர்கொலு முடுகிச்செல்வேனே

4. சிரசிற்பருதியைநேர்—மணிமுடி
விரவித்தகுமொளிசேர்—என துடை
திறலைப் புயபெல விறலைத்தறையினர்
அறியத்தவிசிடை குறுகிச்செல்வேனே

சிங்காசனத்திலிருந்தரசாளுவேன்
(மேலுள்ள இருதருக்களும் புதியன)

## கட்டியகாரன் விருத்தம்

* உகளுறு † மெழுமாத் தூண்டி யுலவுமார்த் தாண்ட னென்ன
மகிழுற விளங்கும் வஞ்சி மார்த்தாண்ட மன்னு போற்றி
இகழுறு மொன்னுர் சென்னி யிடறியே யிலங்கு நீதிப்
புகழுறு பற்ப நாத புராதிபா போற்றி போற்றி.

**வசனம் :-** சகல சம்பிரம விஜய விற்பன்ன அலங்கார அதிக வல்லப வஞ்சி மார்த்தாண்ட மகாராசனே, சரணமே சரணம் ஐயா!

## இராசன் விருத்தம்

கொல்லம் வங்கம் சீனம் கொங்கணம் துளுவம் அச்சை
எல்லவர் வழமை யெல்லா மியல்புட னறிந்தா ராய்ந்து
வல்லநன் மதிகள் சொல்லும் மாபிர தானி யான
சொல்லரு மமைச்சன் றன்னைச் சுறுக்குட னழைத்தி டாயே.

**வசனம்** — அகா கேட்பாயாக சதுரங்க விதரண வல்லவாசற் கட்டியகாரா! எனது வாசற் பிரதானியான மதி மந்திரியை அழைத்து வருவாயாக.

**கட்டியன் வசனம்** — அப்படியே செய்கிறேன் அரசே.

## மந்திரி வரவு
## விருத்தம்

பொன்*னவிர் வீச மார்பிற் புரண்டெழு புதிய தான
மின்னவ மணிக ளோடு வெயில்மணிக் கவசம் பூண்டு
பன்னுவ கலைதேர் வஞ்சி மார்த்தாண்டன் பரிவி னென்றும்
முன்னுவ முதன்மை மந்த்ரி முறைநிறை சபைவந் தானே.

---

* உகளல்—பாய்தல் † எழுமா—ஏழுகுதிரைகள் * அவிர்—ஒளிர்

## சபை தரு

**இராகம் : மோகனம்** **அடதாளசாப்பு**

1. ஆணிப்பொற் பணிவைத்து மாணிக்க மணியொப்பப்
பூணிற்ப்ரதானம தாணிப்பொற்பசையத்
தாணுற்றபுயவிற்றி ராணிக்கமுறுபிர
தானிக்கமதிமந்திரி சபையில்வந்தானே

2. வீசுற்றபுகழ்பெற்ற தேசுற்றகிரிடத்து
ராசற்†கிரேசற்கு ளேசென்றுலாவும்
மாசற்றவசிவச்ர நேர்சொற்கு மார்த்தாண்டன்
வாசற்பிரதானிக்க மதிமந்த்ரிவந்தான்

3. கோலப்பொற்பதபற்ப சாலக்காலாளி
குலீரென்னுமோசை கலீரென்றுபேச
தாலத்தற்புதவிப்ர வாசற்சற்குணசொற்பிர
தானிக்கமதிமந்திரி சபையில்வந்தானே.

## மந்திரி விருத்தம்

தாழத் தாகியவேல் வட்டத் தளத்தினுற் சங்கை பொங்க
வேழத் தானென்னச் சூழ்ந்து விளங்கொளி துலங்கு தங்கப்
பாளத் தாலுயர் கிரீடம் பரிக்குமன் னவர்மன் னுவுன்
நாளத் தானிருக்கும் வாச நளினத் தாள்சர ணந்தானே.

**வசனம் :-** நித்திய சுபமங்கள அதிலங்கிர்த சமூக சவுந்திரியமும் ரத்தினசிங்காசனமும் மனுநீதிதவருத செங்கோலும் பரிபுர பாதாம்புயமுஞ் சரணமே சரணமையா.

## இராசன் கவி

போராழி யெனவிளங்கும் மன்னர்மகிழ் நீதிசொல்லிப் புகழே யோங்கக்
கூராழி கரத்தோனை நிகர்வருமந் திரியேநான் கூறக் கேளாய்
காராழி சூழுலகில் நன்னயஞ்சேர் சென்னெல்விளை கழனி யோடு
நீராழி தடமிருக்கும் எனதுநகர் வழமையெல்லாம் நிகழ்த்து வாயே.

**வசனம் :-** கேட்பாயாக வசன சம்பிரம மகாமந்திரியே, நமது அட்ட ஐசுவரிய சுகிர்த விசாலித ரூபம் பொருந்திய நாடுநகரத்திலுள்ள வழமையெல்லாஞ் சொல்வாயாக.

**மந்திரி வசனம் :-** அப்படியே சொல்லுகிறேன் ஐயா.

---

* அவிர் — ஒளிர் † இரேசன் — அரசன்

## மந்திரி நாட்டுவளமைத் தரு

இராகம் : பூபாளம் தாளம் : ரூபகம்

1. ஏடாகியபதுமாமணி யிலங்குந்திருமுடியே — உன
திந்தமாநக ரந்தமேவிய விந்தைகேளுரைப்படியே
2. மோடாகியதரளஞ்சொரி முகிலானதுஓடிக்—கரு
* முந்நீர்களை யுண்டேயென்றும் நன்னீர் தருங்கூடி
3. கன்னலிற்சென்னெல் தூங்குஞ்செழுங் கழைபோலவேயோங்கும்—நிறை
கதிரானது வாங்கும் விளைகனமேகொண்டு தாங்கும்
4. பொன்னினுடெனத் தேங்கும் பலபொல்லாவினைநீங்கும்—பெரும்
புண்ணியமெனும் பாங்குங்கொண்டு புகழானதுன்னுடே
5. பஞ்சின்மென்சிறையஞ்சுகங் கஞ்சப்பள்ளிமேனிதந்துஞ்சும்—தால
பாடுதேனிசைமிஞ்சும் பெடைப்பாலோடே சேவல்கொஞ்சும்
6. எஞ்சலில்நிலமஞ்சும் உறுமஞ்சதாம்பொருள் விஞ்சும்—கரு
மிரவாகியதஞ்சும் மனக்கரவானது கெஞ்சும்
7. பறிப்பானதுவெறிப்பாங் கனபாரந் தனவாரம்—குறைப்
பங்கானது திங்கட்சிறை பாலாநிறைபோலே
8. மறிப்பாரெதிர்வெறிப்பார்குடர் பிறிப்பாய்விழக்குறிப்பாய் -உயர்
மன்னுபுகழ்தென்னுவுன திந்நாட்டெழில்சொன்னேன்.

வசனம் :- இதுதான் உமது நாடுநகரங்களிலுண்டான வழமை, அறிந்துகொள்ளும் ஐயா.

## இராசன் விருத்தம்

பாட்டினி லடங்கும் பொருளினை யுரைக்கும்
பாவல ரெனவே யெனது
நாட்டினில் வழமை யுரைத்திடக் கேட்டு
நல்மகிழ் வடைந்தே னிப்போது
சூட்டிய முடிமன் னவரனு தினமுந்
துதிக்குமென் றனக்கென் றும்போலத்
தாட்டிக முடனே முதன்மைமந் திரியாய்த்
தயவுடன் நீயிருப் பாயே.

வசனம் :- கேட்பாயாக மந்திரி, எனது சுகிர்தவிலாசம் பொருந்திய மணிவாசலுக்கு என்றும்போல முதன்மந்திரியாயிருப்பாயாக.

---

* முந்நீர் — கடல்

## நீலகண்டன் வரவு

### விருத்தம்

வாலகண்ட மதியினேடு மாசுணமு மிணங்கியொன்ருய் வைகும் வேணி
ஆலகண்ட னடிபேணி யழகுபெறு திருவாங்கோ டமரு கின்றேன்
தாலகண்டந் தனையாளும் வஞ்சிமார்த் தாண்டன்முன் றயவா யேக
நீலகண்ட னெனுமிரண்டா மமைச்சன்மனே யொடுசபையில் நேர்ந்தானே

### சபை தரு

இராகம் :- பரசு தாளம் :- ரூபகம்

1. சந்தத்தார்புய விந்தத்தங்கத் தவழுந்தத்தார்குழல் சிந்தவே-திகழ்
தங்கசீதள செம்பொற்றாமரை தந்தத்தாவென முந்தவே
விந்தைச்சாது விதஞ்சொற்றேர்புறம் வந்துற்றோர்நடை யிந்தவே—வர
மேலகன்ற விலாசசந்திர நீலகண்டனுந் தோற்றினன்.

2. வஞ்சக்காருறு நெஞ்சத்தார்மன மஞ்சத்தேர்மதி மிஞ்சுசுற்றே—புண
வல்லதந்தரஞ் சொல்லுவோன் புகழ் வில்லின்வேளினை வெல்லுவோன்
கஞ்சத்தார்முக வஞ்சிக்கோமள கன்னியும்பின்னர் மேவவே—வெகு
காலஞானங்கொள் வாலகண்டனும் நீலகண்டனுந் தோற்றினன்.

## நீலகண்டன் இன்னிசை

இரச வசனப் பசுங்கிளியே என்தே வியரே யியம்பிடக்கேள்
முரச மதிர அரசுபுரி முடிமா மகிபர் புறஞ்சூழப்
பரச வாகை சூடியென்றும் பற்ப நாத புரம்புரக்கும்
அரச னிடம்போய் வருமளவும் அன்னை யிடஞ்சென் றிருப்பீரே.

வசனம் — கேளுந்தேவியே, நான் அரசனிடஞ்சென்று வருமள வும் உமது மாதாவுடனே மாளிகையிற்போய் இருப் பீராக.

தேவி வசனம் : அப்படியே போய்வாருந் தலைவனே.

## நீலகண்டன் கவி

பைங்களை வளையத் தாமப் பல்லவங் கொள்வோ னென்னச்
சங்களை முத்த மீனுந் தண்பணை நாடாள் கோவே
எங்களைப் புரந்து காத்து இன்பமுற் றரசு செய்யும்
கொங்களை பதும பாதக் குளிரிணை சரணந் தானே.

**வசனம்** — இராசநீதி மனுநீதி குருநீதி தவருத நன்மைப்பிரவாகமும் அலங்கார வசனமும் புயபெல பராக்கிரமமுமுடைய மகாராசனே, சரணமே சரணம் ஐயா.

### இராசன் விருத்தம்

நிறைகொளு மன்னர் நெஞ்சில் நினைக்கரு மதிக டேர்ந்து
குறைவிலா நீதி ஞாயம் குலவுமந் திரியே கேளாய்
திறைகளும் நமது நாட்டிற் செவ்விதாய் வழங்கும் ராச
இறைகளும் வாங்கித் தாழ்வற் றென்றுமென் பணிசெய் வாயே.

**வசனம்** — அகோ கேட்பாயாக, நமது சவுந்தரிய இங்கிதகொலுச் சமூகமுன்னே என்றும்போல் இரண்டாம் மந்திரியாயிருப்பாயாக.

### கற்பித்தான் வரவு

### விருத்தம்

மாற்றுயர்ந் தருளும் பொன்வெயி லுடனே
மாமணி வெயிலுலா வான்மேல்
வீற்றிருந் தருளு மாறுலட் சணனும்
வேதநா தன்பதம் போற்றி
நாற்றிசை புகழும் வஞ்சிமார்த் தாண்டன்
நற்படைத் தலைவனு யொன்னுர்
பேர்ற்றிசெய் திடுமெஸ் தாக்கியென் றுரைக்கும்
பொருநனுஞ் சபையில் வந்தானே.

### சபை தரு.

இராகம் : சாவேரி தாளம் : ஆதி.

1. மரகதவச்சிர மணிகளழுத்திடு மகுடமகிபர்நாளும்
வருதிறைபெற்றிடு மதிபெலஉக்கிர்ம மார்த்தாண்டன்வாசல்
குரகதபொற்புற நடவிவுளித்தொகை மதகரிகாலாள்
கொடியிரதத்தொடு வருபடைமுதன்மைக் குரிசிலிதோவாருன்

2. அடையலர்பொற்புய வுரவுதெறித்திட வடிபொடுதாரன்
அரசர்கள்மெய்ச்சிடு மணிகணடத்திடு மதிபெலசூரன்
படைபலபெற்றிடு கருதலர்பொற்புய வடிவோடொய்யாரன்
பரிவுறுநற்சபை யழகியசேனு பதியிதோவாருனே.

## கற்பித்தான் தரு

**இராகம் : அம்சத்தொனி** **தாளம் : ஆதி**

1. துணிவோடே வருமடையலரதுமுடி
துகட்படுத்தியே அகட்டைஎனதுடை
மணிவாளா லறுத்திளங்குடல்
மதத்தநாய்நரி இதத்தோடுண்ணவே
மறுகிலிடுவேனிது உறுதியுறுதிகறை
நிறையத்தரையின்மிசை பெருகச்செய்வேனே

2. அணிமேவு மாற்றலரெனதுடை
யகத்தினேர்மையை மதித்திடாதுறிற்
பணிமேவு பலமுறுபடைகொடு
பதைக்கவேமிக வதைத்துதைத்திடப்
பதறிவிதறியக முதறிமிகவயவர்
கதறிமதமுடைந்து சிதறச்செய்வேனே

3. வன்மேந்திர மன்னனையுளமதில்
மதிக்கமறுமனர் துதிக்கவேசெய்து
என்னேசப் படையைநடத்தியே
இடக்கர்தம்மத மொடுக்குவேனிதோ
எதிரில்வலியமத கரிகள்வரினுமவை
சிதையப்பொருதியுயர் விருதுநாட்டுவனே

4. புன்மாந்தர் புயவலிகெடவுடல்
புரிந்துகறைதரை சொரிந்துபெருகிட
கன்மாந்தர மிதுவென அதிசெனர்
கரைந்திடச்சிரம் விரைந்தரிந்துயர்
கசமோடசுவரத செருனரொடுமருவி
அசையாவிசயமொடு திசையிற்செல்வேனே. (இதுபுதிது)

## கற்பித்தான் கலிப்பா

முத்திலங்கிய மாலையுங் கோலமார் முகிடமேந்து மகுடமு மேந்திய
கொத்திலக்கிய மன்னர் பணிந்திடுங் குடகநாடுறை கோவே குருசிலே
நத்திலங்கு கடலாடை சூழ்புவி நடக்கவாணை நடத்திநன் வீதிகள்
மெத்திலங்கு மரசாள் மகிபனே விரைகொள்பாத சரோருகம் போற்றியே

**வசனம் :** பூலோக சக்கிரவாள மணிமகுடவர்த்தன ரடிபரவு பற்ப நாதபுர ராச்சிய பரிபாலன பிரபுடீகமாயிருக்கின்ற வஞ்சி மார்த்தாண்ட மகாராசனே சரணமே சரணமையா.

## இராசனும் கற்பித்தானுந் தரு

**இராகம் : சௌராட்டிரம்** **தாளம் : ஆதி**

இரா. சந்திரநேர் முகத்தானே – வயந்
தங்கிவள ரகத்தானே—இந்தத்
தாரணிதனிலென்றும் சீரணிமதியொன்று
சாற்றக்கேள்மிகத்தானே

கற்பி. மந்தரநேர் புயத்தானே—திரு
மருவுமதி சயத்தானே—யுன்றன்
மனத்திலுவப்புற நினைத்ததென்னெனக்கிப்போ
வழுத்திடுமுயத்தானே

இரா. மாற்றலர்கள் வாராமற்—கள்ள
வண்டர்மிண்டர் சேராமல்—இந்த
மாநகரடங்கலுந் தாரணிக்குறுங்காவல்
வைத்திடுஞ்சோராமல்

கற்பி. சீற்றரியே றெனுமரசே—பல
தேசர்க்கதி பதிசிரசே—நீரும்
செப்பியபடிமன மொப்பியேமிகுகாவல்
செய்திடுவேனரசே

## இராசன் விருத்தம்

கதிரங்க மகுடஞ் சூடுங் காவலர் புறந்தந் தோட
அதிசங்க முழங்கி வாகை யணிபடைத் தலைவ னேகேள்
சதுரங்க சேனை சூழச் சாற்றரு மொன்னார் யாக்கை
விதிர்பொங்க நகர மெங்கும் மிகவறுக் கைகள் செய்வாயே.

**வசனம் :-** அகா கேட்பாயாக, கஜ ரத துரக பதாதியென்கிற நால் வகைத்தானைக்கும் உத்தம தளகர்த்தனாகிய சேனுபதியே, நமது நாடுநகரங்களிலுண்டான காவலிடமெங்கும் மிகு எச்சரிக்கையாய்க் காவல்செய்திருப்பாயாக.

**கற்பித்தான் வசனம்** - அப்படியே செய்கிறேன் ஐயா.

## கற்பித்தான் விருத்தம்

கடங்கலுழ் கைம்மா வோடு கனபடை யருகு சூழ
மடங்கலே றெனவே நீங்கள் வகைவகை யாகச் சென்று
இடங்குலா நகர மெங்கும் இந்நகர்த் துறைக டோறும்
அடங்கலும் பகைவர் வாரா தறுக்கைகள் செய்கு வீரே.

**வசனம் :-** கேளும் வீரஉக்கிரம சேவகரே, எங்கள் இராசாவின் கட்டளைப்படிக்கு இந்த நாடுநகரங்களெல்லாம் மிக்க அறுக்கையான காவல் செய்வீராக.

**சேவகர் வசனம் -** அப்படியே செய்கிறோம் ஐயா.

## சேவகர் தரு

**இராகம் : மோகனம்** **அடதாளசாப்பு**

1. கிரிடத்தரசர்முடி யுருளப்படைதொடுத்து
அரசைத்தனிபுரக்க வருநித்யநேசன்
சரசக்கெறுவிதநா கரிகப்பிரபுடீக
தளகர்த்தனெஸ்தாக்கி யுரைதவறேமே

2. வளமெத்திடுபற்பனு புரமெய்க்கஅணிவைத்து
வரையிற்சமர்கள்செய்ய உரைபெற்றுளோமே
தளமுற்றுக்கெடிகெட்டுப் புகழுற்றுப்பொருதிடுஞ்
சமுகத்தில்வீர ரெங்களுக்கிணையுண்டோ

3. மணலிற்றைலமதைக் குணமுற்றிடவடிக்க
வகைகற்றிடவறிவோ மதுவுமல்லாமல்
மறங்கொண்டுசமர்செய்ய வரும்வீரர்தமைக்கண்டால்
மனேதேடிச்சணமோடி மறைந்திடுவோமே

4. பார்த்திபன்றளக்கற்பித் தானெங்கட்குரைத்திடும்
படியொருநொடியோடிச் சடுதியிற்றுனே
நாற்றிசையுலகெங்குந் தோற்றமதுடன்போற்ற
நடம்புரிவீரர்கள் திடம்பெறநாமே.

## சபை விருத்தம்

அம்பரம் புடவி யடங்கலும் பரவு மாருயிர்ப் பயிர்கள் வாடா
தருள்மழை பொழியு மாறுலட் சணனுக் கன்புகொண் டுடைய ளுதலினுல்
இம்ப ரிலகைத் தொடர்பினை யறுக்க எண்ணியே நீலகண் டனுக்கா
யிசைந்திடு மனது சோதனை யறிய எம்பரா பரனரு ளாலே
பம்பரங் கயிற்றிற் றிரிவுறச் சுழலும் படியென மனமிகச் சுழல
பலபல பவுள்சும் நிலைகுலை வதனைப் பாரத்துமெய் யெயர்வுறப் பணிந்து
கொம்பருங் குயிலி னிசைமொழி மயிலைக் கொடியிடைப் பிடிநடையாளைக்
கூவியே குறித்து நிறைபடு வாழ்வின் குறையினை முறையோ டோதினனே

## நீலகண்டனும் மனைவியும் கொச்சகத் தரு

### நீலகண்டன் கொச்சகம்

பந்தமிகுந் தண்கலைபரப்பிப் பாராரலையின் மீதெழுந்த
அந்தமிகுஞ் சந்திரோதயம்போ லாரார்புகழு மாக்கமெல்லாம்
பிந்தமிகுந்தபிரதமையின் பின்னுள்மதிபோலின்னலுற

### தரு

**இராகம் : நாதநாமக்கிரியை** **தாளம் : ஆதி**

வந்ததிந்தமாய மென்னென்னே—மனதுநொந்து
மாற்றருந்து யரமிப்போ ஆற்றிலேன் மின்னே
கொந்தலர் * குசேசயப்பெண்ணே—ஓய்யாரவன்னக்
கோமள மழலையஞ்சொற் கோகுலமின்னே

### மனைவி கொச்சகம்

பட்டிலட்சகோடி பதுமமணிமுக்கோடி
எட்டிலட்சகோடியுட னீராறிரண்டிலட்சம்
வட்டில்கதிரைபல வாங்குடனே தூங்குமஞ்சம்

### தரு

கட்டில்கோடி யுண்டிம்மட்டுமோ—பால்போலுமிளங்
கன்றுடன் பசுவெவ்வள வென்றுசொல்லுவேன்
கொட்டில் பிள்ளைத் தாட்டில்முதலாய்—அழிந்தசெல்வங்
கோடிகோடி யண்டியின்னுங் கூடுமோ ஐயோ

### நீலகண்டன் கொச்சகம்

கண்டிகைசெங்கைக்கடசம் காலாழிகையாழி
உண்டிவையண்டாதகணக் குண்டதனைக் கண்டவரார்
பண்டிகைபாய்மாவிரதப் பந்திபிந்திமுந்திவரத்

### தரு

தண்டிகைபல் லக்கினுடனே—தாளவடத்
தங்கரத்தினத் தொங்கல்வர இங்கிதமாய்
எண்டிசையுந் தொண்டுசெய்யவே—இருந்தசெல்வம்
ஈடழிய இன்றுவந்த கேடறியேனே

---

* குசேசயம்—தாமரைப்பூ

### மனைவி கொச்சகம்

முத்துரத்னமாலைகுப்பி முன்கைவளைச்சங்கிலியோ
டத்துஇத்தென்றெல்லாம் அனந்தவெள்ளக்கோடியுண்டே
பத்துலட்சவீடுடனே பாக்கியமெல்லாம்போக்கியபின்

### தரு

கொத்தலர்கோ டிற்றமரம்போல் — நாடெங்கும்நகை
கொள்ளவந்த கொள்ளையேதென் றுள்ளந்தேறிலேன்
மத்தலைப் படுத்துதயிர்போல் — எனதுமன
வாட்டறவு சொல்லஇப்போ கேட்டிடுவதார்

### நீலகண்டனும் மனைவியும் தரு

இராகம் : புன்னாகவராளி — அடதாளம்

மனை. கன்னல்வில்லானே அஞ்சார்கள் கலங்கும் வல்லானே — மதியூகி
என்னசொல்லானே பொல்லாநவம் ஐயோ கண்டேனே

நீல. மின்மணிக்கூடு குளையில் மிளிர்பசுந்தோடு — அழகிய
பொன்னணிச்சோடு காணேனென்ன பொல்லாதகேடு

மனை. பூவிடுதட்டு ரத்னதி பொருந்துமுட்கட்டு — பொற்கம்பிகள்
மேவிடுபட்டுக் கெட்டாச்சே வெகுதட்டுமுட்டு

நீல. தாவிடுசெம்பு பொற்றண்டிகை தங்கியகொம்பு — எமதில்ல
மேவிநிரம்பு பொருள்கள் மெலிந்ததேநம்பு

மனை. † கண்டமிடாரம் அனேக கரும்பொற் கிடாரம் — கனதிநி
கொண்ட*கெடாரம் எல்லாங்கெட வாச்சே‡விடாரம்

நீல. உண்டிடுதட்டம் நுதலி லுறுரத்னப்பட்டம் — நிழற்றிய
எண்டகுவட்டம் காணேனெல்லா மீதென்னநட்டம்

மனை ஆயிரம் பாரம் பொன்வெள்ளி அதின்வெகுதூரம் - ஐயோஎம்மி
லேயென்னசாரம் எல்லாங்கெட்டு தென்னகொடூரம்

நீல. போயதுபொன்னே எம்வீட்டிற் புகுந்தவள்முன்னே — அல்லாற்செல்வம்
மாய்வுறுமின்னே போமிந்த வகைதேறெனன்னே

மனைவி வசனம் :- அகா கேளும் என் பிராணநாயகா, நமது பாக்கியமெல்லாம் அழிவாகிய விதம் அறியக்கூடுவதில்லைத் தலைவனே.

---

† கண்டம்—இடு ஆரம் * கெடாரம்—கொப்பரை
‡ விடாரம்—பாம்பு

## நீலகண்டன் கலித்துறை

சொற்கொண்ட கோட்டையும் மாடாடு வீடுந் தொழும்புகளும்
பொற்கொண்ட பேழை முதலாகி யுள்ள பொருள்களெல்லாம்
எற்கண்ட கங்கு லெனமாய்ந்த தென்ன விதமறியேன்
கற்கண்டி னும்மிக்க சொல்லா யிருஞ்சென்று காண்குவனே.

**வசனம் :-** அகா கேட்பீராக வாலமனோகர சவுந்தரிய மகாலட்சுமியாகிய எனது பிராண நாயகியே, எனது தந்தை மாதாவழியாய் வந்த புராதன ஆஸ்திகளும், நமது நவமான ஆஸ்திகளும், அபரபக்கச் சந்திரன்போலத் தேய்ந்து அழிந்தவித மென்னவென்று அறியக்கூடவில்லை. ஆகையால் கமவீதிகள் பண்டகசாலை ஆளடிமை முதலாகிய குடும்பங்களையும் மற்ற நமது வீடுகளையும் காவேரிபோலப் பெருகிய உடமைக்கூட்டங்கள் பொருந்திய இடங்களையும் சென்று பார்த்து உண்டில்லையென்றறிந்து வருமளவும் உமது மாதாவுடன் சென்றிருப்பீராக.

## மனைவி கொச்சகம்

மங்காத செல்வமெல்லாம் மாநிலமே லாக்கழிக்கும்
வெங்*காளக் கூட்டமென வேயொழிந்து போனதற்காய்
கொங்காரு மார்பதுன்பங் கொள்ளாமல் எள்ளளவும்
தங்காமற் பார்த்துச் சடுதி வருவீரே.

**வசனம் :-** அகாகேளுந் தலைவனே, நீரிற்குமிழிக்குச் சரியான பாக்கியமெல்லாம் அழிந்ததென்று மனவியாகுலப்பட வேண்டியதல்ல. ஆனால் அலங்கார செல்வ நிலைகளையும் மற்றுஞ் சகல பொருட்களையும் பார்த்து அதி சீக்கரத்தில் வருவீராக.

## நீலகண்டன் கொச்சகத் தரு

### கொச்சகம்

விடங்காட்டும் பற்பாந்தள் வேளப்பர் கைப்பட்டுப்
படங்காட்டு மன்னவடப் பைந்தொடிக்குத் தந்தையர்தாய்
திடங்காட் டிடவுதவு சீதனஆதன மதெல்லாம்
மடங்காட்டி டுங்கனவின் வளமொத் திழந்தேனே.

* காளம் — மேகம்

### தரு

இராகம் : பைரவி    தாளம் : ரூபகம்

சிறுகுமதியிதளி அறுகுபொறியரவு சூடியே — மழுச்
செங்கைகொண்டாடிய மங்கைபங்காளனைப் பாடியே
உறுதிபெறுமதிக பெறுதியாம்பொருள்கள்போச்சே — உண்டிக்
குப்புஞ்சீனிநிக ரப்பனேயருமை யாச்சே

### கொச்சகம்

பூண்†குடமுங் கன்று முழுமேரும் பள்ளாளும்
நண்குடமுஞ் சாலிவிளை நாடுமொளிர் *மாடையினுற்
பண்குடமுஞ் செம்புடனே பள்ள‡வள்ள வெள்ளமெல்லாம்
கண்குடத்தி லிட்ட கமலமெனக் கண்டேனே.

### தரு

கரியச்சொருகிப் புறஞ்சரியொப்பிடுங் கரியகூந்தலாள் — தங்கச்
சுட்டியுடனேநல்ல பட்டமணியுட்கட்டு மீதெல்லாம்
கரியப்பாசியுடன் சருகைச்சேலையுமல் லாமலே — மற்றுங்
கட்டும்பணதியெல்லாங் கெட்டுநட்டமாச்சில் லாமலே

### கொச்சகம்

எட்டடுக்கு வீடு மெளிற்பளிங்குக் கட்டில்களும்
மட்டடுக்கு மெத்தைகளும் வயிரமணிப் பணியுடனே
பட்டடுக்குப் பெட்டகமும் பலபவுள்சும் நிலைகுலைந்து
கொட்டடுக்குக் கூத்துக் குழாம்போ லிழந்தேனே.

### தரு

அவத்தைச்††சமத்துமக்கள் மனத்தைப்போற் றிடுக்கிட்டேங்கிறேன் — ஆரும்
அருந்துந்தண்ணீருக்கும் மருந்துபோலிருந்து தூங்கிறேன்
தவத்துற்றவர்களற்ப பவத்தைப்போலவெளியானதே — அரைச்
சல்லியேனுமென்னைக் கில்லையென்னவழியானதே

### கொச்சகம்

வல்லருஞ்சீர் வஞ்சிமன்னன் மதிமந்திரியென்றுலகோர்க
ளெல்லவருங்கைதொழுதேத்த இனியபாலோ**டிழுதடிசில்
நல்லவிருந்தாயிருந்தருந்து நானுபவுள்சும்நழுகவிப்போ
‡‡ அல்லமருந்தும்மற்கடம்போ லானேன்மோசம்போனேனே.

---

† குடம் — பசு    * மாடை — பொன்    ‡ வள்ளம் — வட்டில்
†† சமம் — போர்    ** இழுது — நெய்    ‡‡ அல்லம் — இஞ்சி

### தரு

வனமெத்தொயிலுலவு அனமொத்திடுநடை மின்னுளும் — நானும்
மகிழ்ந்துசெகந்தனிலன் புவந்திருந்தோமே யெந்நாளும்
கனமொத்திடுதரளம் மனமொத்திடவுதவு கையே—அரைக்
காசுக்கெதியுமற்று நாயிற்கடைகெட்டேனென் செய்வேன்.

வசனம்: அகா விதியே எனது பாக்கியங்களுமழிந்து இப்படியிருப்பேனோ மதியே!

### கற்பித்தான் கலிப்பா

புலரிவந் திடப்பொற் சேவல் கூவிடப்
பூவண் டார்த்தெழப் பொன்மலை மீதெழும்
அலரி கண்டசெந் தாமரை போல்முகம்
அந்தித் தாமரை யாகிய தென்கொலோ
சிலரிகழ்ந் ததோதேர் வேந்தன் கோபமோ
தீய நோய்களோ தேவிதன் செய்கையோ
†வலரியன் னரண வீரிய சூரிய
மந்திரத் தந்திரி யேநீ வகுப்பையே.

வசனம்: அகா கேளுந்தோழனே, ஆதித்தனைக்கண்டலர்ந்த செந்தாமரைப் புஷ்பம்போலிருக்கிற வதனசந்திரிகை தீப்பிடித்த மாந்தளிர்போல் வாடியிருக்கின்ற மனவியாகுலத்தை நானறியும்படி சொல்லுவீராக.

### நீலகண்டன் கொச்சகம்

கந்தார் களிற்றினுரி போர்க்குங் காரார் கண்டன் கருணையினுல்
முந்தா தையினுல் வருபொருளும் மூதா தைகளால் வருபொருளும்
பந்தார் மனையாடரு பொருளும் பலதுமழிந் திவ்வுல கினிலே
சிந்தா குலத்தோ டிருக்கவயன் செய்தா னென்ன செய்வேனே.

### நீலகண்டன் தரு

இராகம்: தோடி                    தாளம்: ஆதி

பல்லவி

கேடுசொல்லப் போகுமோ தோழா —எனக்குவந்த
கேடுசொல்லப் போகுமோ தோழா

சரணம்

1. கேடுசொல்லப் போகுமோ வாடிமனம் நோகுமோ
தேடுசெல்வ மேகுமோ ஆடுமாடு சாகுமோ
பீடுபெற வேயமைந்த வீடுடன்நி றைந்தசெல்வம்
நாடுநசை செய்யவறை யோடுமின்றிக் கேடுகெட்ட (கேடு)

† வலாரி—இந்திரன்

2. ஆறிலட்ச கோடிசாலி ஆறிலட்சகோடிபீலி
ஆறிலட்ச கோடிகாலி ஆறிலட்ச கோடிவேலி
ஆறிலட்ச நூறிலட்ச மேறிலட்ச மாகியுள்ள
ஆறுபட்ட செல்வமெல்லாம் வேறுபட்டு நீறுபட்ட (கேடு

3. முத்துரத்ன மாலேகோடி முன்கைவளே யாறுகோடி
மோதிர மனந்தகோடி முடிரத்னங் கோடிகோடி
சித்திரம் நிறைந்தபட்டு * வித்துரும ஆடைகோடி
தேடியிட்ட செல்வமெல்லா மாடுவிட்ட காடதான (கேடு)

4. தட்டின்மேற்றட் டிட்டமுத்தச் சாதிரத்னச் சோதிமணி
தங்கக்குறுங் காசுடனே இங்குள்ளவ ராகனெல்லாம்
கொட்டிப்பெரும் பொட்டளியாய்க் கட்டிச்சேமித் திட்டதெல்லாம்
குட்டிச்சுவ ராயிடிந்து சிட்டுப்போற் பறந்துபோன (கேடு)

## நீலகண்டன் கொச்சகம்

பார்க்க வடங்கா தொருநாவாற் பகரவடங் காதேட் டெழுதிச்
சேர்க்க வடங்கா திருநான்கு திசைக்குளடங் காச்செல்வ மெல்லாம்
வேர்க்கு நீர்போல் விழுந்தழிய விண்பார்த் திருந்துமெய்ம் மயங்கி
பூக்கு மிலைகைக் காத்தகிளி போலே மார்ந்துபோ னேனே.

**வசனம் :** அகா கேளுந்தோழனே. அனேக நட்சத்திரக்கூட்டங்களுக்கு நடுவே ஒரு சந்திரிகையைப் போலேயிருந்த எனது நாளுவித பாக்கியமெல்லாம் இப்போது பல விருட்சங்களுக்குள்ளே ஓர் நெல்லி இலேயுதிர்த்து நிற்பதுபோலச் சிதைந்து போனபடியால் மனவியாகுலமுற்று வருந்துகிறேன் தோழனே.

## கற்பித்தான் கலித்துறை

பொன்னுடும் பூவும் பொருள்யா வையுந்தந்து போற்றுகின்ற
அன்னறு லட்சண னன்றியிப் போதழி யாதபொருள்
என்னது மேசொல் லுமீதறி யாம லிரங்குவாரோ
உன்னர் கவலே தவிர்நா னுனக்கொன் றிங் கோதுவனே.

---

* வித்துருமம் – இளந்தளிர்

**வசனம் :** அகா கேளுந்தோழனே, அனந்தாதி வஸ்துவாயிருந்து சகலத்தையுங் காத்திரட்சிக்கின்ற திரித்துவமொன்றே யல்லாமல் மற்றுஞ் சராசரமென்கிற பொருட்களில் அழியாமலிருக்கிறதொன்றுமில்லை. அவர் கிருபையில் லாம லாகிறதுமில்லை. ஆனால் இவ்வித காரணம் அறியும்படி ஒரு நிகழ்ச்சி சொல்லுகிறேன் கேட்பீராக.

**நீல. வசனம் :** அப்படியே சொல்லுந் தோழனே

## கற்பித்தான் தரு

**இராகம் :** உசேனி **அடதாளம்**

மரு* வஞ்சிமார்த்†தாண்டப்- பொரு
மாறுகொண்டோருடல் வேறுகண்ட
வருவஞ்சிமார்த்தாண்டன்-மதி
வல்லவனேயென்றன் சொல்லினைக்கேள்

ஏகஒளியாகுஞ்—சோதி
எம்பரனுராதி யம்பரனுர்
ஆகுமவர்செயலே-யன்றி
யாவதுண்டோஒன்றும் போவதுண்டோ

உயர்ஞானசிந்தையுள்ளான்-நல்ல
யோக்கியவான் வெகு பாக்கியவான்
நயமான யோபெனும்பேர்-எங்கும்
நாட்டிடுவோன்புகழ் கேட்டிடுவோன்

அன்பான மைந்தர்பத்தாம்-அவர்
அப்புறமோர்மனைக் குட்போயே
யொன்போல் விருந்தருந்த-மேகம்
போடிடிபோற்பெரும் வீடிடிய

பண்பானநேசமுறும்-அந்தப்
பத்தெனும்மைந்தர்கள் செத்தார்கள்
கண்போலவேயொருவன்-சென்று
காதையெல்லாமவர்க் கோதினனே

---

* வஞ்சி — பகைவர்மேற்செல்வாரிடுமாலை † தாண்ட — ஆடல்

நாவின் மொழிகேட்டு-மரம்
நட்டவன்வெட்டிக்கொண் டானெனவே
சாவின்சலிப்பகன்று-மிகு
சம்ப்ரமகெம்பீர மாயிருந்தான்

அந்தவுடனே தான்-ஆடும்
ஆச்சுதென்றூர் மாடும் போச்சுதென்றூர்
தந்தோன்தராதெடுத்தான்-என்று
சந்தேஷமுற்றூர்சந் தேகமற்றூர்

நாடும்பொருள்களெல்லாம்-கெட்டு
நட்டமுற்றே மெய்யிற்குட்டமுற்றே
கூடுமனையாளுங்-கோபங்
கொண்டுவிட்டாள்உள்ளங் கண்டுவிட்டாள்

கண்டோரெலாம்நகைக்க-வாயிற்
கஞ்சியற்றேயிடைப் பஞ்சியற்றே
*பண்டாரமாய்வாழ்ந்தோன்-பழங்
குப்பையுற்றுன் உளங்கைப்பையற்றுன்

விள்ளாததுன்பமுற்றுன்—மன
வேகமற்றுனின்ப தாகமற்றுன்
கொள்ளாமகிழ்ச்சியொடு-முன்
கொடுத்தானெடுத்தா னென்றேயிருந்தான்

அந்தமனதறிந்து—ஒன்றுக்
காயிரமேற்பதி ஞயிரமாய்
எந்தைபிரானுதவ—இன்ப
முற்றிருந்தான் துன்ப மற்றிருந்தான்.

நீயுமவன்போலே—அதி
நித்தனெனுங்கர்த்த னேப்பணிந்து
ஆயும்படியறிந்து — மன
வாக்கமுற்றேயிரு மேக்கமற்றே.

வசனம் : கேளுந் தோழனே, சமஸ்தாதி உத்தம சிட்ட பரிபாலக ஆதிசருவேசுரனுடைய கிருபாகடாட்சமில்லாமல் அணுவளவும் நமது வல்லமையினுல் நடக்கிறதில்லை. இச் செய்தியறிந்து மனவியாகுலம்விட்டுச் சுகமாயிருந் தோழனே.

---

* பண்டாரம் — பொக்கிஷம்

நீல. வசனம் : ஆனுற் கேட்பீராக, ஞானஉச்சிதலட்சண இதய வசன சம்பிரம அதிக வல்லபம் பொருந்திய தோழனே, நீரிப்போது எனக்குச்சொல்லுகின்ற கடவுளுடைய நன்மைப் பரிபூரணங்களையும் மற்றும் உண்மைப் பிரவாகங்களையுங் கேட்டு மனதுமிகுந்த அக்களிப்புக் கொள்ளுகிறது. ஆகையால் எனது மனந் தெளியும்படி உள்ளங்கையிலரு நெல்லியங் கனிபோல விளங்கச் சொல்லுந் தோழனே.

## கற்பித்தான் தரு

இராகம் : பரசு                                                            தாளம் : ஆதி

### பல்லவி

சொல்லமுடியாதுதோழனே — என்னுலறிந்து
சொல்லமுடியாதுதோழனே

### அனுபல்லவி

சொல்லமுடியாதனந்த வல்லபனற்பனுமமுக்
கில்லவனருள் மிகுக்கும் நல்லவனலகைசெய்யும்
அல்லலுறுபாவவினை வெல்லஎமதாவியுய்யு
மா*றிலட்சயமாகிவைகு மாறு லட்சணனளவைச்    (சொல்)

### சரணங்கள்

1. ஏகபரமாகிவைகி இருமைகொள்மூவுலகும்
ஏற்றநாலுதோற்றமுட னெப்பொருளையும் படைத்து
பாகமுறுமடியார்க ளஞ்சுவினையாறு ஏழு
பாவமுமெட்டாதநவ பத்துநெறியும்வைத்தோனைச்    (சொல்)

2. ஆதிதனக்காதிய ஞதியிலஞதியனந்
தாதிக்கப்பாலுறுமனந் தாதியாகியேதூய
சோதியுஞ் சோதியினுறு சுடருமுடிவுமின்றித்
தோற்றிடு திரீத்துவத்தி னேற்றமறிந் தேயுனக்குச்    (சொல்)

3. வானகத்தி லேயிருந்து மண்ணில்மனு வாகவந்து
மரித்துப்பா தாளங்கண்டு உயிர்த்துப்பின் வானெழுந்து
ஈனமற்ற ஏகன்வலப் பாதமுற் றிருந்தே யெம்மை
இத்தனை பாடுபட்டாண்ட கர்த்தனுடை காரணத்தைச் (சொல்)

---

* இலட்சயம் — மதிப்பு

வசனம் : அகா கேட்பீராகத் தோழனே, அனேக சூரியப்பிரகா சமான பிறவேஷங்களெல்லாம் ஒடுங்கி மகரத்துவ மான அந்தகார இருட்டுப்பொருந்திய கல்லறையிலே மூடுசாந்துபோட்டு அவ்வித அறையிலொரு அறைவீடு செய்து அதிலொரு பெட்டகம் வைத்து அந்தப் பெட் டகத்திலே விலைமதித்தற்கரிதான ரத்தினத்தைச் செப் பிலடைத்துவைத்து அந்த ரத்தினத்துக்கு அனேக தூரத்திலிருக்கிற ஒரு செனனக் குருடனைப் பார்த்து நீ அதற்கு விலைமதி யென்று சொன்னால் எப்படி விலைமதிப்பான். அது அந்த மாணிக்கத்தின் ராசி யென்றறிந்து கொள்ளவும். தன்னைப் பிறப்பித்த பிதா வானவனைப் பிள்ளை அறியாதிருந்தாலும் தன்னைய றியாமல் தன் சிந்தனையுணர்ந்து விளங்குகிறது போலே சொன்னீரே! நல்வினை தீவினை இதுமுதலான கருமங்களை நிரூபித்து ரட்சிக்கிற அநுக்கிரக கர்த்தா ஒருவனுண்டென் றறிவிலே யறியக்கொடுப்பார். ஆகையால் அறிந்தளவு சொல்லுவேன் கேட்பீராக.

நீலகண்டன் வசனம் :- அப்படியே சொல்லுமையா

### கற்பீத்தான் தரு

இராகம் : பலஹம்ச தாளம் : சாப்பு

1. திரிதத்துவமா யொருதற்பரமாய்த்
திகழுத்தமனு கியநித்தியனே
அறிதற்கரிதாய்ப் பிறிதொப்பிலதா
யருவுக்கருவா முருவுக்குருவே

2. நவைசற்றுமிலாச் சுவைசொற்கமதார்
நவவற்புதனு கியவற்புதனே
ஏவைமுற்பவமா நவைபற்றறவே
இதநித்தியசீர் சுதனைத்தருவோய்

3. முடிவின்முடிவாம் முதலின்முதலாம்
மூவாள்திகழ்நற் றேவாதிபனே
வடிவின்வடிவாம் நடுவின்நடுவாம்
வானப்பொருளே ஞானத்தருளே

4. திருமன்னவரா மொருபன்னிருவர்
செயவங்கிஷமா மெனவங்குறுமா
மரிதன்மகனே யொருவன்சுதனே
வகுத்தெம்பவத்தை செகுத்தாள்பவனே

5. அவரேதேவர் அவரேமூவர்
அவரேயாவும் அவரேயாவர்
அவரேயல்லா லெவரேயில்லை
ஆசற்றருளும் தேசுற்றவரே.

வசனம் :- அகா கேளுந்தோழனே, சமஸ்தாதியுற்பன பரிபால கராகிய கடவுள் ஆதியும் அனந்தாதியும் மூலமூலாதி யும் நடுவின் நடுவும் அருவுமிருவும் ஆறுலட்சணமும் அளவற்ற நன்மைச்சொரூபியும் சகல வல்லப அனந்த தயவும் சருவசற்குணமும் பிதாச் சுதன் ஸ்பிரீத்துச் சாந்தென்கிற எல்லாம் பொருந்திய ஏகவஸ்து ஒரே சர்வேஸ்பரனுகிச் சுத்த காந்திபொருந்திய நவரத்தின சிங்காசனத்திலே யெழுந்தருளிப் பரமண்டல வாசி யாகி நித்திய கர்த்தவியத்துடனே இருக்கிருர். அவ ரைச் சூழ்ந்து அனந்தகோடி வெள்ளக் கணக்கான நவசங்க சம்மனசோர்கள் முத்தர்கள் முதலிய அள வற்றபேர்கள் நெருங்கிநின்று தேவதுந்துமிமுதலாகிய அளவற்ற நாதகீதந்தொனித்து இருக்கிற கர்த்தனே ஆண்டவர். அவர் எங்களுக்காகப் பிரதிவர்த்தித்துப் பூமியின் மனுச்சென்மமாகப் பிறந்து பாடுபட்டுச் சிலுவையிலே அறையுண்டு மரித்துயிர்த்துப் பசாசா லெங்களை மீட்டிரட்சித்து மோட்சவாசியாகி இருக்கி ருர். இன்னமும் தமது கற்பனைகளை மறந்த பாவிக ளைக் கைதூக்கும்படி தயவுடனே இருக்கிருர். அவரு டைய அளவை என்னுற் சொல்ல முடியாது. ஆகிலும் அறிந்தளவுரைத்தேன் அறிவீராக.

## நீலகண்டன் கொச்சகம்

*தந்த்ர வட்டம் சூழத் தரள வட்டமே நிழற்ற
சிந்த்ர வட்ட வேழநிகர் தீரரண வீரியனே
†மந்த்ர வட்டச் சீதளமென் வஞ்ச நஞ்சநெஞ் சுருக்கச்
சந்த்ர வட்டங் கண்ட ‡சலாகை போலா னேனே.

---

* தந்திரர் — மந்திரர் † மந்திரம் — கடல் ‡ சலாகை — சந்திர காந்தக்கல்

வசனம் :- கேளுந்தோழனே, நீரிப்போது எனக்குச் சொன்ன கடவுளுடைய பரிபூரணங்களையும் மற்றுஞ் சகல வித மான உண்மைப் பிரவாகங்களையுங்கேட்டு மனது சந்திரோதயங்கண்ட சந்திரகாந்தக் கற்போலுருகி மிகுந்த அக்களிப்புக்கொள்ளுகிறது. நல்லது நீர் நில் லும், நான் விடுதிக்குப் போய்வருகிறேன் தோழனே.

## நீலகண்டன் கொச்சகம்

கருக்கடுக்கும் நெஞ்சவஞ்சக் காரிருளெல் லாங்கரையப்
பெருக்கெடுத்து மெய்ஞ்ஞானம் பேரலையாய் மோதுகுதே
உருக்கடுக்குங் காந்தமென ஒன்றுகுதே யென்றனுள்ளம்
நெருக்கடிப்பட் டெமையாண்ட நித்தனெனுங் கர்த்தாவே.

வசனம் :- அகா மனமே! நீ உருக்குங் காந்தமும்போலே ஒன் றித்ததெப்படியென்றால் ஒரு இடையன் சிறிய செம் மறிக் குட்டியைக் கட்டி வைத்த இடத்திலே அந்தக் கயிற்றை ஒருவன் வாளினலே அறுத்துவிட அந்தச் செம்மறிக்குட்டி ஓடிப்போய் அனேகஞ் செம்மறிக் குள்ளாகத் தனது தாயைக் கண்டுபிடித்தாற்போல நீயும் ஆதிபிதாவைக் கண்டுபிடித்தாயே மனமே!

## நீலகண்டன் தரு

இராகம் : தன்னியாசி தாளம் : ரூபகம்

பல்லவி

வாருகவந்தது வந்தகப்பட்டுது
மனமேயஞ்சாதே சொன்னேன்சொன்னேன் — மனமே.

தரு

1. வேறுகவந்தவர் தூருகநீருக
வென்றிடுவோன்நமக் கின்றிசைக்கின்றது
ஆருதகும்பியின் வம்புக்குணுங்கெனும்
ஆசுற்றபட்சிக்கு வீசுற்றகல்லுப்போல் —வாருக

2. காலமழைகொண்ட கருமையினிருட்டினிற்
கண்ணுமிருண்டொளி யின்றிவரும்வழி
ஆலமரம்படர் சோலையொழுங்கையி
லந்தநிழற்குள்ளே வந்தவிளக்குப்போல் —வாருக

---

, — மேகம்.

3. வீறுற்றபங்குனி உச்சியம்போதினில்
விண்ணுற்றவூர்செல வெண்ணுமவ்வெய்யிலில்
காரற்றெருதுக்குக் கருமணல்மேல்வருங்
கால்சொத்திகைக்கொரு கோல்சிக்கினற்போலே (வாருக)

4. தேடுறுகூடொடு *கோடுமழிந்திடச்
‡ சில்லையின் பார்ப்பொன்று வல்லீற்றுக் கஞ்சியே
பாடுறுமென்று பதுங்கிடும்வேளையில்
பறவைக்கிரண்டு சிறகுவந்தாற்போல (வாருக)

5. பேருற்றசுக்கானில் ஆளற்றுநேரற்றுப்
பின்னுமுன்னுஞ்சென் றிடாவடிகாற்றினில்
வாரிக்குட்பட்டு மலைந்துதள்ளாடிடும்
வங்கமடுக்கவோர் நங்கூரம்வந்தாற்போல் (வாருக)

## நீலகண்டன் கொச்சகம்

முத்தலைகொள் நன்னகையார் மோர்கதுரா சாரமெனும்
வைத்தலை யாம்பேயை வணங்கே னொருநாளும்
பித்தலைபொன் கல்லமுத்தும் பேதமென வேதெளிந்தேன்
கொத்தலைதா ராயடிமைத் கொள்பவன்கைக் குள்ளருளே.

**வசனம் :** கேளுந்தோழனே, பிரகாசமான கண்ணிருக்கக் கண்ணை மூடிக்கொண்டிருக்கிறது சரியல்ல, அப்படிப் போல அதிக ஞானக்கண்ணாகிய கடவுளிருக்க அஞ் ஞானப்பிசாசை வணங்குவதில்லை. ஆகையால் ஞானஸ்நானமுதலான நன்மைப் பிரசாதங்களைப் பெற்று மோட்சமடைய உதவிசெய்ய வேண்டுந் தோழனே.

## கற்பித்தான் கொச்சகம்

§ முத்துக்கற்குந் தஞ்சமில்லா மூடருக்குங் கேடருக்கும்
எத்துக்கற்குங் கூழிகுட வீரலரி கூர்வாளாம்
பத்துக்கற்பா நெறியுடனே பலவணக்க மாகமங்கள்
மெத்துக்கற்று மெய்ஞ்ஞான மேன்மைபெற்று வாழ்வீரே.

---

* கோடு—மரக்கொம்பு ‡ சில்லையின்பார்பு—கவுதாரிக்குஞ்சு
§ முத்து—மேலானவை

**வசனம் :** கேளுந்தோழனே, ஆண்டவரெங்களுக்குத் திருவுளம் பற்றிய பத்துக்கற்பனைகளாதியவைகளுள்ள சகல வணக்கப் புத்தகமுந் தந்தேன். நல்லாய்ப் படித்த றிந்து வாலசந்நியாசியாராகிய பரஞ்சோதிநாதரென் னுங்குரு வடக்கன்குளத்திலே தேவமாதாவின் கோயி லிடமாகவிருக்கிறார். அவரிடத்திலேபோய் ஞானஸ் நான முதலாகிய நன்மைப்பிரசாதங்கள்பெற்று அக்கி யான சமயத்தைவிட்டு மோட்சஞ்சேர ஒருமனதா யிருந் தோழனே.

## குரு வரவு

### விருத்தம்

உன்னரு மறைகள் மறைகளி னுணர்ச்சி
யுணர்ச்சியுள் ளறிவறி வதனுள்
ளொடுங்கிய கிரிகை கிரிகையை யறிய
வுறுமவ ரெவரவர் களுக்கும்

பின்னரும் பகர்தல் பகர்தலி னடத்தல்
நடத்தலிற் பிழைகளான வர்கள்தம்
பிழைகளைப் பொறுத்தல் பொறுத்தி பிதாவின்
பிரசமா மலரடி பேணித்

தன்னரு நெஞ்சி லுன்னிய செபமுந்
தவறுத லின்றிய தவமும்
சகலமா நவமும் ஞானதத் துவமுஞ்
சாதிக்குஞ் சோதியாந் தக்கோன்

பன்னிரு மகுட மன்னர் பன்னிருவர்
பரம்பரை யாகிய குலத்தின்
பாலகி மருவு மாலய மதனிற்
பரிந்திருந் தனனருந் தவனே

## குரு சிந்து

**இராகம் :** செஞ்சுருட்டி **தாளம் :** ரூபகம்

1. வானநாதா தான தானநீதா—நன்மை
வடிவுள்ளானே என்றும் முடிவில்லானே
ஈனஞனேன் நீத ‡கீனஞனேன்—என்தன்
யேசுவே மாசில் லானேசுவாமி

---

‡ கீனம்—குறைபாடு இழிவு

2. அரியதோர் சுவர்க்கநா டரசுநீரே—சுவாமி
அமலனுர் சுதனே டவருநீரே
உரியதோ ரருள்புரிந் தெமையுநீரே—சுவாமி
உதவிசெய் தடிமையா யமையும்நீரே

3. தேவரீர் மானிட ஞகினீரே—பூவிற்
சிந்திடா வுதிரமுஞ் சிந்தினீரே
பாவிஞ னறிவில்மூ தேவியானேன்—என்னைப்
பாதுகாரும் யேசு நாதசாமி

4. முடிவிலே நடுவிலே யான்படாமல் — சுவாமி
முனியவுன் நினைவினி லெனைவிடாமல்
கடிதிலே உமதுநற் கருணைதாரும் — தூய
கன்னிமா மகவெனும் பொன்னிஞடா.

## நீலகண்டன் கொச்சகம்

கடக்குன் றினம்பிலிற்று காயருவி பாயாற்றிற்
¹குடக்கன் றுதுள்ளிச் குலவிவிளை யாடுவெல்லை
தடக்குன் றிடத்தேமந் தனில்மனுவா னவனையுன்னி
வடக்கன் தடாகமெனும் மாநகர்க்குச் செல்வேனே.

## நீலகண்டன் விருத்தம்

கருவே முத்துதிர்க்கும் வெல்லைக் கர்த்தனுக் கன்பாய் போற்றி
உருவே முத்தரிற் சிறக்க யோகஞ் செய்பவனே போற்றி
திருவே முற்றிருட் டறுக்கும் தேசிக ஞான னந்த
குருவே முத்திரை யெனக்குக் கொடுத்திடுஞ் சரணந் தானே.

**வசனம் :-** அதிக ஞானஉபதேசமும் பிரசங்கமும் திருவாக்கு நன்மைப் பிரசாதமும் சந்திரோதயமுகமும் குளிர்ந்த சரோருகமும் சரணமே சரணம் சுவாமி.

## குரு கவி

உலகெய்க்கும் படியேபாவ வொள்ளெரி நரகையாளும்
அலகைக்கு மடியஞகி அறிவுறு குணத்தஞகி
நலகைக்கொள் பவர்போலிப்போ நடந்திங்கே வந்தசெய்தி
இலகைக்கொள் பூணிஞனே யானறிந்திடச் சொல்வாயே.

---

¹ குடம்—பசு

வசனம் :- கேளும்பிள்ளாய், பூரணசந்திரிகையிலே முகிலூருவது போல் வாடியமுகத்துடனே தனியே இவ்விடம் வந்த செய்தியும் உனது வளமையும் நானறியும்படி சொல் வாயாக.

## நீலகண்டன் கலிப்பா

ஆம்படுதிரு வாங்கோடென் ஞடெழி
லமைச்சனு னலகைப்பட் டழிவுறீஇத்
தேம்படுதொடை மார்பனெஸ் தாக்கியாஞ்
செம்மல்தேற்றத் தெளிந்தென துள்ளமே
ஓம்படுத்தி யெமக்காய்க் குரிசறை
யுண்டகர்த்த னுபயப தந்தொழ
மேம்படுந்திரு ஞானஉ பதேசம்
வேணும்நீர் தரவேணும் மெய்காணுமே.

வசனம் :- கேளும் குருவே, நான் அக்கியானத் தலகைக்கடிமை யாகி எனது பாக்கியங்களுமழிந்து மனது சஞ்சல மானவேளை எனது தோழனுகிய எஸ்தாக்கி தேற்றிச் சகல தெய்வீக நிர்ணயங்களையுஞ் சொன்னபடியி னுலே மனதிலே பிரித்தறிந்தேன். நன்மைப் பிரவாக மாகிய சத்தியவேதஞான சருவேசுரனைத் தொழுது அவரருளிய கற்பணையின்படி நடந்து மோட்சஞ்சேர உதவிசெய்யுங் குருவே.

## குரு இன்னிசை

எண்ணிலிவர் வங்கிஷத்தி லிங்குவந்தா ராருமில்லை
நண்ணினுர் முன்னுள் நரகலகைக் காளானுர்
மண்ணில்மனு வாகவெல்லை மாமலையில் வந்தருளும்
புண்ணியனுக் காளாம் புதுமை யறியேனே.

வசனம்:- ஆனுல் இவருடைய பரம்பரைக்கில்லாத ஞானஸ்நானம் பெறவந்தபடியால் இவருடைய ஞானக்கருத்தைச் சிறிதுநாளிருந்து அறிந்துகொள்ளுகிறது நல்லதாகக் கண்டேன். எவரும் முன்னர் ஞானஸ்நானம் பெற்ற வர்கள் பின்னர் மாறுகிறது முறையல்லவே மதியே.

## நீலகண்டன் சிந்து

இராகம் : பலஹம்ச  தாளம் : ரூபகம்

1. அப்பனே அப்பனே தப்பில்லானே
அடிமைக்குன் னறிவுதந் தடிமையாக்கும்
மெய்ப்படு பிரசாதந் தாரும்தாரும்
வினைதீரு மெனையேரும் விண்ணிற்சேரும்

2. உன்னரு தாகமா மென்னில்நன்னீர்
உண்ணுமல் முந்நீரை யுண்ணலாமோ
அன்னதா யோர்பொன்னம் பரனைவிட்டு
அலகைக்கு ளாவரோ அறிவினோர்கள்

3. பெற்றப்ப னிருக்கச்சிற் றப்பன்றன்னைப்
பெரியோனென் றுரைசெய்யு முரியோரெல்லாம்
மற்றப்பன் றனைவிட்டு மனதில்நாளும்
வணங்கிடு வார்களோ குணுங்குதன்னை

4. அரும்பொன் கைக்கிருக்கவே கரும்பொன்தேடி
அலைவாரோ வணிவாரோ அறிவினோர்கள்
பெரும்பொன்னம் பரஞானக் கரும்பல்லாது
பேயினை வணங்கேன்நான் மாய்வுற்றாலும்

5. வீறிலட் சணவன்னி வேண்டினோர்கள்
மின்மினி தேடினு லென்னவாகும்
ஆறிலட் சணன்றனை விட்டுநானும்
அந்தங்கெட் டிடுபேயை வணங்குவேனே.

6. நிறைந்திடுசிறந்த அம் பரன்றன்மைந்தன்
நிருபர்கன்னிகைக்கொரு *மருமானாக
பிறந்தும் பின்பாடுபட் டிறந்தும்மீண்ட
பெருமையுமெனையாளும் உரிமையல்லோ

வசனம் : கேளுங் குருவே! தேவரீர் அடியோனுக்கு ஞானஸ்நான மீந்தருளச் சந்தேகப்படவேண்டாம். அன்னைபிதா மனை மக்கள் சுற்றத்தார் வெறுத்தாலும் இராசன் முனிந்து ஆக்கினை செய்து உயிருக்கு இறுதிவந்தாலும் ஆஸ்திகளெல்லாமழிந்து பிச்சையெடுக்கினும் பிற தேசம் போகினும் பரலோகவாழ்விழந்து நரகலோக வாழ்வைக் கனவிலுந்தேடுவதில்லை. ஆகையால் உமது அடைக்கலமானேன், நல்வாழ்வுதந்து இரட்சியுஞ் சுவாமி.

---

* மருமான் — மகன்

## குரு கவி

சீர்சிறக்கு மேகபர னருளினாலே
செப்பருஞா னஸ்நானத் தீட்சையீந்தேன்
பேர்சிறக்க நீலகண்ட னெனஉனக்குப்
பேசுகின்ற பெயர்மாற்றிப் பெருமையாக
நீர்சிறக்க வேதேவ சகாயமென்று
நிருபித்தேன் நானுனக்கு நித்யகர்த்தன்
தார்சிறக்கும் படியறிந்து மோட்சவாழ்வைத்
தான்பெறவே நடந்திடுவாய் தரணிமீதே.

**வசனம் :** பிதாச்சுதன் ஸ்பிரீத்துச்சாந்து இவர்களுடைய திரு நாமத்தாலே ஞானஸ்நானம் ஈந்தேன். இனிமேல் சரு வேசுரன் எங்களுக்கருளிச் செய்த பத்துக்கற்பனைப் படிநடந்து அக்கியான சமயத்தைவிட்டு ஆண்டவ ருக்கு உவப்பாயிரும் பிள்ளாய்.

**தேவசகாயன் வசனம் :** அப்படியேயாகட்டுங் குருவே!

## தேவசகாயன் மனைவி தரு

**இராகம் :** நீலாம்புரி **தாளம் :** திரிபுடை

1. எல்லையற்றுத் தேடுசொன்னம்—எல்லாம்
இழந்துஅரைக்காசு சின்னம்
இல்லமற்றுப் புலரிமுன்னம் — போன
இறைவன்வரக் காணேனின்னம்

2. கொண்டநாட் கொண்டொருநாட் பிரியேன் - என்னுடை
கொழுநனல்லாற் பிறரைக்குறியேன்
கன்றனைய குதலைச்சிறியேன்-என்னுடை
கணவன்வரா தேதோ அறியேன்

3. இணையில்லாத செல்வம் பாடு — என்னுடை
ஏந்தலில்லா தென்ன வீடு
துணையில்லாத வன்றிற் பேடு — என்னுடை
தோன்றல்வராதேதோ கேடு

4. கொம்புதேடிக்குருகா ரோட — வாசக்
கோகனகஇதழ்வாய் மூட
அம்பரம்மேல்மாலை நீட — முன்னமோ
ராள்விடுத்தேனிலையே தேட.

## தேவசகாயன் கொச்சகம்

வெள்ளைப் பலியுடனே வெண்பா லடிசி லுண்டு
துள்ளித் திரியும் துராசார துட்ட குணக்
கொள்ளைப் பசாசடிமை கொள்ளாமற் கொண்ட கன்னி
பிள்ளைக் கடிமை யல்லாற் பேய்க்கடிமை யாகேனே.

## தேவசகாயன் தரு

இராகம் :- பரசு தாளம் :- ரூபகம்

### பல்லவி

விட்டுப்பிரியாதே — மனமே நீ
விட்டுப்பிரியாதே

### சரணம்

1. விட்டுப்பிரியாதே துட்டப்பசாசு
விழுத்தளமைக்கொண் டிழுத்தகயிற்றினை
வெட்டிஞானஸ்நான ஏணியைத்தந்துபொன்
*வேணிக்குவாவென்ற மாணிக்கச்சோதியை —விட்டு

2. ஆகமமாகி யறிவுக்கறிவெனு
மையிருகற்பனை தப்பிப்புறம்போக
வேகப்பிசாசறக் கண்ணைப்ரகாசித்து
விண்ணுடுகாட்டிய கண்ணுடிதன்னையே —விட்டு

3. மாறுபடுத்தி மனதினைக்கண்ணினை
வம்புசெய்பேயெனும் கும்பிப்பசாசுகள்
ஆறுகெட்டோடிடப் பாடுபட்டுப்பட்டு
ஆண்டடிமைகொண்ட தூண்டாவிளக்கினை —விட்டு

4. ஆடறுபச்சை யரிசிபருப்பு
அவிகுவிகோழி யாடுபலிதாவென்று
கூடுறுபேயெனும் †கச்சள‡வெச்சில்
குதித்தோடிப்போக வுதித்தஇரவியை (விட்டு)

5. சிரித்துறவாடிச் செய்யாதுசெய்வித்துச்
செத்தபின்னுவிக்குச் சத்துருவாய்வந்து
பாரித்திழுக்கும் பசாசெனுமாரழற்
பந்தந்தணித்திட வந்தநன்னீரினை (விட்டு)

---

* வேணி — ஆகாயம் (அல்லது ஆறு)
† கச்சளம்—இருள் ‡ எச்சில்—உச்சிட்டப்பேய்

## தேவசகாயன் மனைவி கொச்சகம்

குன்றைப் பொருதோள் குலவுவய வீரரஞ்ச
வென்றிப் படைகொள் வயவேந்தே துணைப்பிரிந்த
அன்றிற் பெடைபோல்நா னச்சமுற எங்கிருந்தீர்
நன்றிப் படியோவென் நாயகனே சொல்வீரே

வசனம் :- கேளும் பிராண நாயகனே! அனேக ஆஸ்திகளு மழிந்துபோக நீர் என்னைவிட்டுப்பிரிந்து இந்நேரமள வும் வராமல் எங்கேயிருந்தீர்! ஆதலால் துயரமுற்றி ருந்தேன். இப்போது ஆதித்தனைக்கண்ட பனி நீங் கினதுபோல என் துயரமெல்லாம் நீங்கிற்று. உமது சித் தத்திற்றெளிந்து உத்தாரஞ் சொல்வீராக.

## தேவசகாயன் தரு

இராகம் : நாதநாமக்கிரியை    தாளம் : ஆதி

1. அஞ்சுகமே கிஞ்சுகச் சொல் லாளே—என
தாதர மிகுக்கவரு மாதரசேகேளும்
சொஞ்சுகத்தி ஞஸ்தியான தெல்லாம்— நாளுந்
துட்டப்பசா சுக்கடிமைப் பட்டுக்கெட்டதாலே

2. அந்தமற்றுச் சிந்தைநொந்து வாடி—எம
தாக்கமெல்லா மீடழிய ஏக்கமுற்றுஓடி
வந்தலையும் வேளைதன்னி லேதான் – மிக்க
வாக்குறு சகாயனுமெஸ – தாக்கியென்னைச்கண்டு

3. காலையல ருங்கமலம் போலே—எழில்
காட்டிடு மலர்ந்தமுக வாட்டரவுகண்டு
மாலைகுவியுங்கமல மாகி—யுள்ள
வண்மையெல்லா மென்றனுக்குத் திண்ணமாய்ச் சொல்லென்றான்

4. பண்டார மாய்வளர்ந்து தேங்கும்—நானுவித
பாக்கியமெல் லாஞ்சும்மா போக்கியதல்லாமல்
உண்டான காரியங்க ளுடனே—நானும்
உள்ளதெல்லா மெள்ளளவும் கள்ளமின்றிச்சொன்னேன்.

5. கேட்டுமன வாட்டரவைத் தேற்றிக்—கேடு
கெட்டலகை கைக்குளகப் பட்டதுயர்மாற்றி
நாட்டுபர மோட்ச வீட்டைக் காட்டி—யேசு
நாதருடை வேதசத்திய போதமுந்தந்தாரே

6. அந்தமகிழ் வோடுன்னிடம் வந்தேன்—நீயும்
அப்படிமெய்ஞ் ஞானஸ்நானங் கைப்பிடிப்பாயானால்
சிந்தைமகிழ்ந் திந்தரையின் மீது—நாங்கள்
சேர்ந்துகளி கூர்ந்துமிக வாழ்ந்திடலாம் மானே

## தேவசகாயன் கொச்சகம்

பாவ சகாயமெனும் பாழலகை யாளாமல்
*ஏவ சகாயமுற எய்துசுதன் றன்னருளால்
தேவ சகாயனெனச் சேர்ந்திடுபேர் கொண்டுரைக்கும்
† ஆவ சகாயனருள் பெற்றேனென் னாயிழையே?

வசனம் : ஆகா கேளும் மனைவியே, உம்மைவிட்டுப்பிரிந்து மன வியாகுலங்கொண்டு போன இடத்திலே எனது தோழனாகிய எஸ்தாக்கியுடைய புத்திமதி எனக்குக் கிடைத்ததினால் பசாசின் மருட்டகன்று ஞானஸ்நான முதலிய நன்மைப் பிரசாதங்களைப் பெற்றுத் தேவசகாயனென்ற பேரும்பொருந்தி யேசுநாதருடைய அடியவனானேன். நீருமிந்த அக்கியான சமயத்தைவிட்டு ஞானநானம்பெற்று ஏசுசருவேசுரனுடைய சிறீகமல பாதாரவிந்தஞ்சேர ஒருமனதாயிருந் தேவியே.

## தேவசகாயனும் மனைவியுந் தரு

இராகம் : கீரவாணி அடதாளசாப்பு

மனைவி : மாகருணாகர போகதுரந்தர
மன்னா என்னரசே அரசே—உன்
மாமதிபோயொரு தீமொழிபேசிய
வாறென்ன தேறேனே என்மன்னா

தேவ. பாகடருஞ்சொல்லுல் லாசவிலாசவென்
பாவையரேகேளாய் என்மானே — மிகு
பாவப்பசாசற மூவரொன்றானவர்
பாதம்பணிவாயே என்மானே

மனை. சத்தியவேதத்தை மெத்தவும்மெய்யென்று
சாற்றுகிறீர்தலைவா தலைவா — பிறர்
சாதிக்கும்நீசர்சண் டாளர்க்கல்லாதெங்கள்
தங்களுக்காகாதே என்மன்னா

*ஏவம்—குற்றம் † ஆ—அந்தம் வசம்—ஒழுங்கு

தேவ. எத்தியவன்னர கத்தலகப்படு
புத்தியென்சொல்லுகிறு யிப்போது — ஊரில்
ஏழைக்கும்பாக்கிய வாளர்க்குமாளுக்கோ
ரேகனுண்டோவுரையாய் என்மானே

மனே. சீரியவாரிய வீரியமன்னரிற்
சேரும்பெருங்குலத்தோ — ராராகிலும்
சிந்தனேயேகொண்டு இந்தமதந்தனே
வந்தனே செய்வதுண்டோ என்மன்ஞ

தேவ. பேரியராசரு மூருமிவ்வேதத்திற்
பேறுபெற்ருர்களேயுந் — தொட்டேதான்
வெண்ணரசேநீயு மெண்ணெருநாட்செல்லும்
பேதைநீயெங்குகண்டாய் என்மானே

மனே. ஆகிற்பரம்பரை யாகவெல்லோர்களும்
ஆசரிக்கின்றதனே — விட்டிட்டு
அன்றிவேருென்றினிற் சென்றிடிலூருற
வென்றுகொள்ளாதேயெம்மை என்மன்ஞ

தேவ. வாகுற்றதூண்டி விரைக்ககப்பட்டிடு
மச்சக்குலம்போலே — என்மானே
வங்கிஷத்திற்காய் நரகிற்புக்கிச்சொர்க்க
வாழ்வைவிடலாமோ என்மானே

மனே. என்னுடைமன்னவ னேயுன்மனநினே
விப்படியொப்பிடுகில் — என்மன்ஞ
ஏதமில்லாச்சத்ய வேதஞானஸ்நானம்
யானும்பெறுவேனே என்மன்ஞ

தேவ. வென்னரகத்தல கைப்பட்டிடாமலே
மெய்யையுட்கொண்டதினு லிப்போது
மேன்மைபெறும்ஞானஸ் நானம்பெற்ருல்மோட்ச
வீடுபெறலாமே என்மானே.

## மனேவி இன்னிசை

ஆவியொன்று கூடிரண்டா யாசையுற்றிந் நாளளவும்
மேவியிருக் கும்விறல் வேந்தேயென் தலேவா
பாவிநானுன் சொற்படி நடப்பதல் லாது
பூவுலகில் வேருெருவர் புத்தியினிக் கேளேனே.

வசனம் :- கேளுந்தலைவனே, அடியாள் உமது புத்தியின்படி நடப்பதல்லாது எனது புத்திகொண்டு உமதுசொல்லை மறுப்பதில்லை. தேவரீர் சித்தத்தின்படியே ஆகட்டு மையா.

## தாய் வரவு

### விருத்தம்

வாலசந்த்ர மணிமகுட வஞ்சிமார்த் தாண்டனது மதிவல் லோனும்
நீலகண்டன் தமிழ்மறையை யிகழ்ந்துசத்ய வேதமதை நேர்ந்த தாலே
சாலவிஞ்ஞை மொழிபகர்ந்து தன்மருகன் றனைத்திருப்பத் தரையின் மீது
ஆலநஞ்சு விழிமடமின் னுயிழையுங் களரிதனி லணுகி னளே.

### சபை தரு

இராகம் : மாஞ்ஞை அடதாளம்

ஏரார்மணிமகுடம் புனைந் திந்தரையாள்கின்ற வஞ்சிமன்னன்
நேரார்மதியமைச்சனுன நீலகண்டற்கறி வோதவென்றே

காரார்குழலியரும்இந்தக் காசினிமீதினி லோர்மனமாய்ச்
சீரார்மருமகற்குப்புத்தி செப்பிடநற்சபை மீதில்வந்தாள்

மலங்காமணிமகுடம்புனை மன்னவன்வஞ்சி நரேந்திரன்றன்
அலங்காரமந்திரிக்குப்புத்தி அன்புடனேசொல்ல இங்குவந்தாள்

வயசும்மிகுந்துஅங்கம்மெத்த வாடித்தலைநரைத்தே மெலிவாய்
நயமானபுத்திசொல்லவென்று நாகரிகத்துடன்மேவிவந்தாள்

### தாய் (மாமி) கலித்துறை

✓ ஐயோ பரம்பரை யாய்நாம் வணங்கு மரிசிவன்றன்
பொய்யோ கிறீஸ்து சமயத்தி னீரும் புகுந்துகொண்டீர்
மெய்யாய் மருமக னேநான் கிழவி விளம்புதல்கேள்
கையே தொழுவதல் லால்வே றுங்கட்குக் கடனில்லையே.

வசனம் : கேளும் மருமகனே, கேட்பார்புத்திகேட்டுக் குலத்துக் கிழுக்காகிற பொல்லாத புத்தியைவிட்டு நான் சொல் லுகிற நல்லபுத்தியைக்கேட்டுக் கிறீஸ்தசமயத்தைவிட்டு எங்கள் சமயத்திலேவாரும். உங்களைத் கும்பிட்டேன் மருமகனே:

## தேவசகாயன் விருந்தம்

வம்பெனு நரகை யாள வந்திடு மனந்தம் பேயைக்
கும்பிடேன் வணங்கேன் போற்றேன் குலவுபன் னிருவர் வங்கிஷ
அம்புவி யரசாள் கன்னி யன்னைகைக் குழந்தை தன்னை
நம்பியே துதிப்ப தல்லால் நானென்றைத் துதித்தி டேனே

வசனம் : அகா கேளும் அத்தையே! முன்னுளில் வணங்கிவந்த தேவர்களெல்லாம் நரகப் பசாசுகளென்று வினவியறிந்தேன். ஆகையால் அந்த ஞானசருவேசுரனை வணங்குவதல்லாது பின்னென்றையும் வணங்குகிறதில்லை. திட்டமாய்ச் சொன்னேன் நீர்போம் அத்தையே!

## தாய் (மாமி) சிந்து

இராகம் : கிரவாணி அடதாளம்

பல்லவி

ஆசைமருமகன் மோசம்போனுனிதற் கையோ
என்னசெய்வேன் குடிகெட்டு தையோ என்னசெய்வேன்

சரணம்

1. ஆசைமருமகன் என்மகள்மாப்பிள்ளை
அண்ணன் மகனுமென் கண்ணின் மணிதன்னை
வேசியராரோ பிடிக்கநினைந்து
விருந்தினிலிட்ட மருந்திலகப்பட்டு (ஆசை)

2. பேரன்கொப்பாட்டான் தலைமுறையாய்த்தொழும்
பேரான தெய்வத்தைத் தூரப்புறம்விட்டு
ஆரோகிறீஸ்து சமயத்தில்வாவென்று
ஆளாக்கினுர்சொல்லும் பாழாப்பிலேபட்டு (ஆசை)

3. ஊருக்குயர்ந்த குடியாயிருந்தநாம்
உற்ருருஞ் சுற்றமு மொக்கநகைத்திட
ஆருக்கும்பல்லுக்கும் வாய்க்குமகப்பட்டு
ஆயிரஞ்சாந்துக்குள் ளற்பன்சுண்ணும்புபோல் (ஆசை)

4. மெய்ப்பாக நாத்தொழுந் தெய்வத்தையேவிட்டு
மேலானதெய்வங் கிறீஸ்துவென்றேசொல்லி
இப்போதான்போன தும் போதாமற்போய்கொண்டு
என்மகன்தன்னையும் வன்மித்தழுகிறுன் (ஆசை)

## தாய் விருத்தம்

வாடி மகளேயுன் மாப்பிளை போலே நீயும்
போடி கிழவியென் றென்புத்தி தனைத்தட் டாதே
கூடி யிருக்குங் கொழுனனு ரைக்குமதி நடந்து
கேடி லகப்பட்டுக் கெடாதை யடிசொன் னேனே.

## தாயும் மகளுந் தரு

இராகம் : காபி தாளம் : திரிபுடை

தாய். என்மகளே பொன்மகளே என
 தின்பரச பைங்கிளியே
மன்னனுன்றன் மணவாளன் சொல்லில்
 வணங்காதே இணங்காதே

மகள். ஆரமிர்த கீதமொழி என
 தாச்சியேயுன் பேச்சைவிடும்
பாரமத கேசரியாம் என்றன்
 பத்தாவின் உத்தரவே

தாய். அலைநிறைக்குங் கடல்பூமி மகளே
 அழியினுமோ ஒழியாது
தலைமுறைக்குங் கேடாக வந்த
 தாழ்வடியென் வாழ்வரசே

மகள். மைப்பிடித்த வான்கெடினும் சோதி
 மதியுடனே மீன்கெடினும்
கைப்பிடித்த காதலனுர் சொன்ன
 கட்டளைநான் தட்டேனே

தாய். நல்லாவின் நல்லகன்றே என்னுடை
 நாமகளே ஆமகளே
பொல்லாத வேதமடி மகளே
 போகாதே ஆகாது

மகள். கட்டழகு குழன்மடவார் தன்னுடை
 காவலனு ரேவலினல்
திட்டமுடன் நாடறியத் தாயே
 செத்தாலு முத்தமமே

தாய். நாட்டிலுள்ளோர் தேடார்கள் எங்கள்
நல்லுறவோர் கூடார்கள்
வீட்டினுள்ளே ஒளிப்பதல்லால்
கண்ணில் விழிப்பதுண்டோ வெளிப்பதுண்டோ

மகள். அழுதழுது சொல்லுகினும் என
தாருயிரைக் கொல்லுகினும்
பழுதணுகா வென்றலைவன் சொன்ன
பணிபுரிவேன் துணிவிதுவே

**வசனம் :** ஊரிலுள்ளோர் பகைத்தாலும் உறவுமுறையோர் நகைத்தாலும் உம்முடைய சொல்லை மறுத்தாலும் எனது பத்தாவின் சொல்லை மறுப்பதில்லை நீர்போம் தாயே.

## தாய் தரு

**இராகம் :** சங்கராபரணம் **தாளம் :** ரூபகம்

1. ஐயையோகெட்டேனே மருமகன்
ஆசையும்விட்டேனே — இந்த
வையகமீதினிலே ஓர்நாளும்
மகளொடுமொட்டேனே

2. என்நெஞ்சுதானெரியுந் துயரம்
எவர்களுக்குந்தெரியும் — மருமகன்
முன்னென்னை மாமியென்றால்
அவர்வாயால் முத்தொடுபொன்சொரியும்

3. நாவுக்குநஞ்சானேன் எவருக்கும்
நாயிற்பிறம்பானேன் — எந்தன்
சீவனுக்காத்தானம் என்றாலுந்
திரும்பியும் பாராரே

4. பெண்பிள்ளைமாப்பிள்ளையும் எனையும்
பிரியமருந்தையிட்டார் — இந்த
மண்புவிமீதினிலே சுற்றத்தோடு
வாழுவரோவினிமேல்

5. ஆடுசெவியறுப்பேன் இன்னுமென்னை
ஆட்கொள்ளினும் பொறுப்பேன் — இந்த
நாடுறுதேவர்களே உங்கட்கான
நற்பண்டமுமிறுப்பேன்

6. ஆகந்திரையானேன் வயதெண்பத்
தாரூடரையானேன் — இப்போ
காகம்நரையாக இவ்வூரிற்
கண்டேன்ஓர்புதினம்

7. ஆதிவீறுமாவே சகியே
அரமர்க்கிறையோனே — என்றன்
தீதில்மருமகற்கு நன்மாமதி
சேர்ந்திடச்செய்வீரே.

## தேவசகாயன் இன்னிசை

முல்லையர் மாடா டெருமை மோதலில் வான்மீ துவந்த
வெல்லையர் பொற்பாதஅர விந்தமலர் சிந்தை கொண்டே
வில்லனைய நுதலா ளேமெய்ஞ் ஞானஸ் நான மென்னும்
எல்லையில் லாநன் மைபெற இன்றெ ழுந்துசெல் வோமே.

**வசனம்:-** அகாகேளுந் தேவியே, குருவானவர் வடக்கன் குளத்திலிருக்கிறர். நாமிருபேரும்போய் உமக்கு ஞானஸ்நானம் பெற்றுக்கொண்டு வருவோம் பிராணநாயகி,

## பெண் இன்னிசை

கார்த்தலைசே ராழியுடைக் காசினியை யாளுகின்ற
போர்த்தலைவா வாளெடுத்துப் பொய்யுடலை யீர்த்தாலும்
சீர்த்தலைவா நீரெனக்குச் செப்புமொழி தட்டாமல்
வார்த்தைதலை மேற்கொண்டு வருவேன் வருவீரே.

**வசனம்:-** அகா கேளுந்தலைவனே, நீர் சொன்ன கட்டளைப்படியே வருகிறேன் வருவீராக.

## தேவசகாயனும் மனைவியுந் தரு

**இராகம் : ஆனந்தபைரவி** **தாளம் : திரிபுடை**

தேவ : ஆகமமா யறிவினுள்ளறிவாய்
அருமறையாய்ப் பிறவிலதாகும்
ஏகசத்திய ஞானஉபதேசம்
யாம்பெறஎழுமானே

மனைவி : பொன்னின்மணி யணிமகுடசேர்
புகழழகாகிய மதியாளா
என்னரசே யுன்மனதின்படி
யான்வருவேன் வருவீர்

தேவ : வீசுசிறைப் பொறிமினுமினென
மெய்யொளிசேர் ஐயளிபாடும்
வாசநிறை மலரிடுகுழலே
வருவாய் குருவிடத்தே

மனைவி : ஒன்றறியாப்பேதையிலெனையே
யுற்றுமணம் பெற்றருள்சுரக்கும்
மன்றலந்தார் மன்னவனேயுன்சொல்
மாறேன் வாறேனே

தேவ : சங்கொலிசெங் கரமடமானே
தற்பரனு ரற்புததாயார்
துங்கமிகுங் கோயிலிதோமுன்னே
தோணுது காணுமின்னே.

வசனம் :- அகாகேளும் எனதுபிராணநாயகியே, குருவானவர் இதோ கோயிலிடமாக இருக்கிறுர். நாங்கள் இருபேருமாய் ஸ்தோத்திரம் பண்ணிக்கொள்ளுவோம் வாருந் தேவியே.

பெண் வசனம் :- அப்படியே வாரும் பிராணநாயகா.

## தேவசகாயன் விருத்தம்

பூதலத்தி லெம்பாவப் பொல்லாவி ருட்டறுக்கும்
ஆதவனே எங்க ளருளொளியே யாருயிரே
மாதவனே கண்மணியே வாழ்வேயென் ஸ்வாமியுன்றன்
ஏதமில்லாப் பாதமலர் எந்நாளும் வாழியவே.

வசனம் :- எங்கள் பாவவிருளுக்குத் தூண்டாவிளக்கான ஞானக் குருவே, சரணமே சரணம், சுவாமி!

## குரு விருத்தம்

மருவாருட் கலங்கியோட மாறுகொண்டடர்த்து மண்மேல்
முருகாரும் வாகைசூடும் முடிமன்னர் மகிழும் நீதித்
திருவாருஞ் சிந்தையானே சீக்கிர மாக நீங்கள்
இருபேரும் வந்தசெய்தி யானறிந் திடச்சொல் வாயே.

வசனம் :- கேளும் பிள்ளைகாள் நீங்கள் இருவரும் வந்தகாரியம் நானறியும்படி சொல்லுவீராக.

## தேவசகாயன் கொச்சகம்

காமதுரா சாரமெனுங் கட்டழலில் வீழாமற்
பூமியிலிப் போதெனக்குப் போதமரு ளுங்குருவே
ஆமிவளென் பாரிமன தன்புடனே யிங்குவந்தாள்
சாமியிவட் கும்ஞானஸ் நானந் தருவீரே.

**வசனம் :-** கேளும் குருவே! இவள் எனது மனைவி. இவளுக்கும் ஞானஸ்நானங்கொடுத்து இவளையும் ஆண்டவரின் அடிமையாக்கிக்கொள்வீராக.

## குரு கவி

சுத்தமாந் திரித்வ ஏக சுதன்றிரு நாமத் தாலே
முத்திசேர் ஞானஸ் நான மோட்சமாந் தீட்சை யீந்தேன்
உத்தம ஞானப் பூவென் றுனது நாம முரைத்தேன்
புத்தியோ டிருந்தெந் நாளும் புகழ்பெற வாழு வீரே.

**வசனம் :-** அகாகேளும்பிள்ளையே, பிதாச் சுதன் இஸ்பிரித்து சாந்து என்கிற திரீத்துவத்தின் நாமத்தால் உனக்கு ஞானஸ்நானமுந்தந்து ஞானப்பூ என்கிற நாமமுமிட்டேன். இனிமேல் புத்தியோடேநடந்து நல்வழி தேடிக் கொள்வீராக.

**ஞானப்பூ வசனம் :-** அப்படியே செய்கிறேன் குருவே!

## தேவசகாயன் தரு

**இராகம் : லாவணி** **தாளம் : ஏகதாளம்**

தேவ. செப்பரியபூவில் வருசென்ம—நாளாய்த்
தீயலகைவசமாய்ச் செய்கன்மம்
இப்போதொலைந்தொளி யுதயமானேம்—இனி
ஏகபரன்றன்மக வாய்ப்போனேம்

மனைவி. பத்தெனுங்கற்பனையை மறவாதே—கொடிதாம்
பாவலகையோடுற வாகாதே
கத்தனையேநித்த மனத்தெண்ணும்—நமக்குக்
கனகசொற்கவீ டீற்றில்நண்ணும்

தேவ. பூவுலகினைசைகள் பொல்லாதே—தவமும்
பொறுதியுமல்லாதொன்றும் நில்லாதே
ஆவதுமக் கேயுரைத் தேன்கேளும்—வான
அம்பரனை நம்பிவாழ் வோம்நாளும்.

## பிராமணர் தோற்றம்

### விருத்தம்

*பிஞ்செனு மதியும் †தாமப் பிணையலும் விளங்கும் ‡வேணி
நஞ்சது கண்டன் பாத நளினமெந் நாளும் போற்றி
செஞ்சொலா கமவே தங்கள் செறிந்திடு மறைமுன் னூலின்
அஞ்செனு மங்க மேந்தி யருமறை யவர்வந் தாரே.

## பிராமணர் தரு

**இராகம் : சங்கராபரணம்** **தாளம் : ஆதி**

1. அரிராமராமா வசுதேவதேவா
 அரியோம்நமோநமோ நாராயணா
 பரீவானதேவா சிறிராமராமா
 பலபத்ரசெயகிஷ்ண நாராயணா

2. வேதாவிதாதா வீணைதீர்த்தநாதா
 தாதாவெனுஞ்சிறீ ராமாநமோ
 †† சூதாதியாமாயுத **பஞ்சாயுதாகிஷ்ண
 சுபபங்கயாநமோ சோதிநமோ.

**வசனம்:-** தன தானிய விஜயமார்த்தாண்ட அட்ட லட்சுமீகர அதிக சஞ்சீவகர நீலகண்ட மங்கள துரையே, ஆசறு பாதமே ஆசறுபாதம்,

## பிராமணர் விருத்தம்

ஓதுறு முள்ளம் வேரு யுன்னருந் தியான முற்று
தீதுறு மொன்னுர் கண்ட திறத்தரிற் சேர்ந்தாய் சிஷ்டா
மோதுறு கோப வெந்தீ மூழுது மூழ முன்னம்
பேதுறு பராக்கை விட்டுப் பேசுவாய் பேசு வாயே

**வசனம் :-** அகாகேளும் நீலகண்டம்பிள்ளாய், எங்கள் காலடியைக் காணமுன்னமே எழுந்து மிகு ஆசாரம்பண்ணுகிற நீ இப்போது சத்துருவைக் கண்டதுபோல் பேசாமலிருக்கிற காரியமேது சொல்வாயாக

---

* பிஞ்சுமதி—இளம்பிறை † தாமப்பிணையல்—கொன்றைமாலை
‡ வேணி—சடை

†† சூதமாதிய ஐந்து—மன்மதன்கணை. **பஞ்சாயுதம்-சங்கு, சக்கரம், தண்டு, தனு, வாள்.

## தேவசகாயன் விருத்தம்

ஆசைக் காமச்சேற் றுள்ளா யமிழ்ந்திடு மலகைக் காகும்
பூசைக் காமடியர் நீர்நான் பூரண கர்த்தர்க் காகும்
*மாசைப் பேரொளியாய் மண்ணில் மனுவென வந்தெம் பாவத்
தூசைத் தீர்ப்பவனை யல்லாற் துதித்துமை மதித்தி டேனே.

**வசனம் :-** கேளும் பிராமணுட்களே, உங்களை ஆசரித்தலும் உங்கள் மந்திர தந்திரமும் உங்கள் சமையமும் எனக்கு வேண்டியதில்லை. எங்கள் பாவ இருளுக்கொரு தூண்டாவிளக்காகிய ஆதி சருவேஸ்பரனுடைய பரமவழி பார்த்திருக்கிறபடியால் உங்களுக்கும் எனக்கும் ஒரு கருமமுமில்லை எழுந்திருப்பீராக.

## பிராமணர் விருத்தம்

முன்னைநாட் டுதித்த தெல்லாம் முழுப்ப சாசென வுரைத்தாய்
சன்னைசெய் தெமையி கழ்ந்து தாறுமா றுகச் சொன்னுய்
தன்னையே நிகர்க்கும் வீரன் தானின்றித் தரணி யாளும்
மன்னன்பிர தானிக் கிந்த வகைசொல்லி மிகச்செய் வோமே.

**வசனம் :-** ஆகா கேளும் நீலகண்டம்பிள்ளாய்! எங்களையும் எங்கள் தேவர்களையும் பசாசென்று நிந்தனை பண்ணின உன்னைப் பிரதானிக்கு அறியக்கொடுத்து என்னசெய்விக்கிறோம் பாரடா.

## தேவசகாயன் விருத்தம்

தந்திர மாக நீர்போய்ச் சாற்றிய வுரையைக் கேட்டு
மந்திரி சாடை யாலே மன்னவ னெனைக்கோ பித்துக்
கந்தரந் தனைய றுத்துக் கழுகுண்ணக் கொடுத்திட் டாலும்
சிந்தையில் நினைந்துன் றேவைச் சிந்தியேன் சிந்தி யேனே.

**வசனம் :** ஆகா! கேளும் பிராமணுட்களே, ஏக திரித்துவ உண்மையானவரை வணங்குகிறதல்லாதே உங்கள் தேவரை வணங்குகிறவனல்ல. இனிமேல் மறுத்துச் சொன்னுல் மிகுந்த மோசம்வரும், அதற்குமுன் எழுந்துபோவீர்களாக.

---

* மாசை—பொன்.

## பிராமணர் தரு

இராகம் : சாவேரி தாளம் : ஆதி

ஆரறியப்போருரையா — நாம்பட்டபாட்டை
ஆரறியப்போருரையா

ஆரறியப்போருரிவ் வூரவரேகேளுங்கள்
அண்டலர்போலேநீல கண்டனெம்மைக்கண்டவுடன்
சார்வுறச்சினத்தெழுந்த வேளையிற்பருத்தஉடற்
சாரையைக்கண்டேபயந்த தேரையைப்போல் நடுங்கினதை (ஆரறி)

உற்றிடுபராக்கைவிட்டுச் சற்றெமைப்பாரென்றதற்குக்
கெற்சிதங்கொண்டிடஅவன் சொற்குழறியேநாங்கள்
மற்றுநிகரற்றெழும்பும் வெற்றிகொள்புலியைக்கண்ட
மற்கடம்போலிருந்துள்ள பற்களெல்லாம்விரித்ததை (ஆரறி)

செருக்கினிலெழும்பிடாம லிருக்கலாமோவென்றதற்குச்
சினத்துறுபசாசடியர் வரத்தகுமோவென்றுசொல்லி
நெருப்பினிலிடுமரக்கென் றிருக்குமந்தவேளையிலே
நெளித்திடுபூனையைக்கண்டங் கொளித்தெலிபோல்விழித்ததை (ஆரறி)

நாற்றிசையும்புகழ்கொள்ளு மாற்றல்மன்னற்கேயுன்செய்தி
சாற்றுவோமெனவுரைக்கச் சீற்றமுற்றவனெழுந்து
†கோற்றொடிக்கைகொட்டிநிமிர்ந் தார்ப்பரித்தடிக்கவரக்
கூற்றினைக்கண்டேகிடந்த ஆற்றுமம்போல்நடுங்கினதை (ஆரறி)

## மந்திரி விருத்தம்

ஒலிகொண்ட வேத மாதி யுன்னருங் கலைக ளெல்லாம்
மலிகொண்டு தேர்ந்து ணர்ந்த மாமறை யோரே நீங்கள்
வலிகொண்ட வுயிர்ப்பி னோடு வதனமும் மாறு பாடாய்ப்
புலிகண்ட கலைபோல் வந்த புதினமே துரைசெய் வீரே.

வசனம் :- அகாகேளும் பிராமணுட்களே, புலியைக் கண்ட கலை மான்போல அங்கமெல்லாம் நடுநடுங்கி அவசர நிமித்தமாக வந்த காரியம் நானறியும்படி சொல்லுவீராக.

## பிராமணரும் மந்திரியுந் தரு

**இராகம் : சாமா** **தாளம் : ரூபகம்**

பிரா. மாற்றருஞ்சீர் மணிமகுட — அரசன்
மந்திரியேஇந்தரையில் வந்தோர்நவம்வழங்குதையா

மந். தோற்றமுடன் நாற்றிசையும் — துதிக்கும்
சோதிடரே பேதமின்றி ஓதிடுமிப் போதெனக்கே

பிரா. ஏற்றமுற்ற நின்பேருஞ் — சிறப்பும்
இன்றுடனே பொன்றினதென் னென்றுசெல்வோ முன்றனக்கே

மந். ஆற்றரிதாஞ் சீற்றமெழ — மனதில்
அதனமதாய்விதனமுறும் புதினமென்னே சொல்வீரே

பிரா. தாலமிசை நீலகண்டன் — வணங்காச்
சத்தியவே தத்தில்ஞான ஸ்நானம் பெற்றான்

மந். ஏலுமறை நாலுநிறை — உளத்தில்
எள்ளளவுங் கள்ளமின்றி உள்ளபடி விள்ளுவீரே

பிரா. சாலநகைத் தெங்களையும் — நாங்க
டாப்விபுகழ்தேவரையும் பாவலகையெனமொழிந்தான்

மந். காலகலி கோலமிதோ — அவனைக்
கண்டுமன்னற் கின்றுரைத்துக் கொன்றிடுவேன் சென்றிடுவீர்

### மந்திரி கொச்சகம்

‡கங்க மெல்லா முண்டாடக் *கண்டகங்கைக் கொண்டு ஒன்னார்
பொங்க மெல்லாஞ் சிந்து புரவல னும்வர் மேந்திரன்
சங்க மெல்லாமிங் கறியச் சாடைசொல்லி நீல கண்டன்
அங்க மெல்லாஞ்சிந்தல் செய்வே னந்தண ரேசெல் வீரே.

**வசனம் :** ஆகாகேளும் பிராமணாட்களே, எங்கள் தேவர்களைப் பழித்த நீலகண்டனை அரசனுக்கறியக்கொடுத்து எட்டு நாளைக்குள்ளாக அவன் தலையவதாரஞ் செய்விப்பேன். ஒன்றுக்குமஞ்சாமல் உங்களாச்சிரமத்துக்குப் போவீர்களாக.

---

‡ கங்கம்—கழுகு * கண்டகம்—வாள்

## பிராமணர் தரு

இராகம்: செஞ்சுருட்டி தாளம்: ஏகதாளம்

1. கண்டதெல்லாம் பொய்யாய்க் காணுதெல்லாம் மெய்யாய்க்
காட்டுமூட்டுச்சர்டைக்கெம்போல் நாட்டிலுண்டோ ஆரும்
2. சண்டைகொண்ட நீல கண்டனுடல்நாளை
தத்திடச்செய்தோமேஎம்போற் புத்தியுண்டோஆர்க்கும்
3. ‡ விண்டளவுகுவியல் கொண்டவெடிமருந்து
மேலிடுநெருப்புப்பொறி போலவேசொன்னோமே
4. மண்டலங்களெங்கும் கண்டதுண்டோயாரும்
மற்றொருத்திதானும்பிள்ளைப் பெற்றிருக்கிறளோ
5. எண்ணுமெண்ணம்வேறாய்க் கண்ணுமிருகூறாய்
எல்லாந்தாறுமாறாய்ச் சொன்னோமவதூறாய்
6. புண்ணியபாவங்கள் எண்ணியகோவங்கள்
பொல்லாதபேர்நாங்கள் சொல்லாதேயும்நீங்கள்.

## குரு வசனம்

கேளும் பிள்ளைகாள், இந்தக் கடிதத்தைக் கொண்டு போய்த் திருவாங்கோட்டுத் தேவசகாயம்பிள்ளை கையிற்கொடுத்து மறுமொழிகேட்டு வருவீராக.

சீஷர் வசனம் :- அப்படியே செய்கிறோம் சுவாமி.

## பிள்ளைகள் தரு

இராகம்: மூகாரி தாளம்: சாப்பு

1. இந்தரைமீதிலிருக்கின்ற மாதவத்தோரே — ஏந்தல்
மந்திரிதேவ சகாயன்மனை சொல்லுவீரே
2. கொந்தலர்வீசி யுலாவுவடக்கன் குளத்திலே—தேவ
சந்தமரிகோயில் தான்கட்ட எண்ணியுளத்திலே
3. ஆவைதிருமரி மாதுபொற்கோயிலெழுப்பிட — அதற்
கானமரங்களைத் தேடிச்சுறுக்கிலளித்திட
4. உத்தாரமிட்ட உரைப்படியேகுருத்தாமே — தந்த
பத்திரந்தன்னைப் பரிந்துகொண்டேசெல்லுவோமே.

---

‡ விண்டு—மலை

## தேவசகாயன் விருத்தம்

தேக்கரு புனலுங் காடுஞ் செடிகளுங் கடந்து நொந்து
நீக்கரு முருமந் தன்னில் நினைக்கரு கருமந் தன்னைத்
தாக்கரு கவன வேகந் தனில்மிக நடந்து நீங்கள்
சீக்கர மாக வந்த செய்தியென் செப்பு வீரே

வசனம்:- அகா கேளும் பிள்ளைகாள், நீங்களிருபேரும் அதிசீக்கிரமாக வந்தகாரியம் நானறியும்படி சொல்லுவீராக.

## பிள்ளைகள் கலிப்பா

இந்தடும் பதத்தே காந்த நாயகி
யேசு நாதரை யேராரும் வெல்லையில்
தந்திடுங் கனியம்மாள் பொற்கோயிலிற்
றங்கு மெங்குரு வாம்பரஞ் சோதியார்
வெந்திடுங் கறிசோ றுண்ண முன்வரு
வீரென விரைவாக வெழுதியே
தந்திடுங் கடதாசி கொண்டே வந்தோம்
சடுதி பார்த்து மறுமொழி சாற்றுவீர்

வசனம்:- அகாகேளும் ஐயா தேவசகாயம்பிள்ளாய், எங்கள் குருவானவர் இக்கடதாசியை உம்மிடத்திற்கொடுத்து மறுமொழி கேட்டுவரச்சொன்னூர் அறிவீராக.

## தேவசகாயன் சீட்டுவாசகம்

சகலதிவ்வியவாறு லட்சணதிரீத்துவ சறுவமூலாங்கமூல
தானுனவானபர னருள்பெருகியுண்டாவ தாகவென்னெண்ணுளுமே
புகலரியசுகசெல்வ சகலசற்குணமுடைய புத்திவித்தாரராசன்
புகழ்பெறுந்தேவச் சகாயபூபாலனன் புடனறியஎழுதுநிருபம்
விகலமில்லாததவி தரசரதுகுலமுய்ய மேதினியில்வந்துதித்த
மெய்ஞ்ஞானகன்னிமரி யம்மாடனைப்பணி விருப்பினெடு கோயில்கட்ட
அகலநீளங்கொண்ட மரமதாய்த்தம்மா லடுத்தளவனுப்பவேணும்
அறியவிந்நிருபமிப் படியெழுதுகையெழுத் தமர்குருப்பரஞ்சோதியே

## தேவசகாயன் கொச்சகம்

பாடிப் பணிந்துஇரு பாதமலர்க் கேயிருகை
சூடித் தொழுது துதித்ததுவுஞ் சொல்லியின்னம்
ஓடிச் சுறுக்காக உத்தரவு பெற்றுமரந்
தேடித் தருவெனென்று செப்புவீர் சீஷர்களே.

வசனம் :- கேளும் பிள்ளைகாள், குருவானவர்பாதம் தலைமேற் சூடிக்கொண்டு தேவமாதாவின் கோயில் கட்டுகிற தற்கு மரம்சேகரம் பண்ணித் தருகிறேனென்று சொல்லுவீர்களாக.

சீஷர் வசனம் :- அப்படியே சொல்லுகிறோம் ஐயா.

## பிள்ளைகள் கொச்சகம்

பொன்னு ரரியசிறைப் புள்ளாடும் பூந்தாரான்
முன்னுகச் சென்றுமது முத்திரையைத் தான்கொடுத்தோம்
என்னே வெனப்பார்த் திறைஞ்சிஎழி லார்மரங்கள்
தன்னுலி யன்றளவு தாரேமென்றுஞ் சொன்னரே.

வசனம் :- யேசுக்கிறிஸ்துவைத் துதித்து தேவரீர்தந்த கடதாசி யை அவர் வாசித்துப்பார்த்து மிகுந்த தோத்திரம் பண்ணித் தன்னுற்கூடிய மரம் சேகரம் செய்து தரு கிறேனென்று சொன்னர் சுவாமி.

## தேவசகாயன் கலித்துறை

கத்தனைத் தந்திடு கன்னிக்கோ ராலயங் கட்டுதற்கு
மெத்துர மாமரந் தாவெனச் சீட்டுவிட் டார்குருக்கள்
அத்திறஞ் சென்று தருவேனென் றேனன் மரந்தறிக்க
உத்தர வேபெற்று வாறே னிருமென்ற ணெண்ணுதலே

வசனம் :- கேளுந்தேவியே, வடக்கன் குளத்திலிருந்து குருவான வர் தேவமாதாவின் கோயில்கட்ட மரம் சேகரம் பண்ணி அனுப்பும்படி நிருபமனுப்பினர். மரந்தறிக்க உத்தரவு பெற்றுவருகிறேன் தேவியே.

மனைவி வசனம்:- மிகுதியுஞ் சந்தோஷமானேன், போய்வாருந் தலைவனே.

## தேவசகாயன் தரு

இராகம்: புன்னாகவராளி தாளம்: ரூபகம்

1. பூவுலகெல் லாம்விளங்கப் பூரணமதான
புகழ்பெருகு தவிதரசர் குலமகளதான
2. தேவமரி யம்மாள்பொற் கோயில்செய்யமுழுதாய்ச்
செப்புமர மெப்படியு மொப்பனுப்பவேணும்
3. வேதியரைப் பழித்துஅவர் வேதமதையிழித்து
மெய்யெனவே திரித்துவத்தை ஐயமின்றிச்சொன்னேன்
4. ஏதமுற்ற பொய்மறையோ ரேதுசொன்னாரறியேன்
என்னவந்தா லும்வரட்டும் மன்னன்முன்செல்வேனே
5. வேந்தன்முதற் பிரதானி வேதியரோதலினால்
மெத்தவென்னோ டெதிராக வைத்திடுகோபத்தால்
6. ஆந்தரங்க மில்லாத அரசனென்னைவாளால்
அறுத்தாலுங் கர்த்தனடி மறுத்திடல்செய்யேனே.

## மந்திரியும் தேவசகாயனுந் தரு

இராகம்: கல்யாணி அடதாளம்

மந்: வாரும்வாரும்நீலம் பிள்ளாய்—ஓடி
வந்ததென்னோமிகத் துள்ளாய் – உயர்
பேருங்குலமுநீ யுள்ளாய்—உயிர்
பேணவகைதேடிக் கொள்வாய்

இராகம்: கல்யாணி அடதாளசாப்பு

தேவ: எத்தனைபேர்சிரங் கொய்தேன்—ஆரை
இல்லாவசைசொல்லி வைதேன்—என்னை
மெத்தச்சினந்தீரென் செய்தேன்—மனம்
வேகிக்கிறீர்மெத்த நொய்தேன்

மந் : பூசுரர்தங்களைப் பழித்தாய்—இன்று
பொல்லாதவன்கண்ணில் விழித்தாய்—எங்கள்
ஈசன்மறைதன்னை யழித்தாய்—நீயும்
எங்கேகற்றெங்கேபோ யொளித்தாய்

தேவ : ஈரெட்டுஆயிரர் கற்பினை — யழித்
திட்டதுந்தேவர்கள் சற்பனை—எங்கட்
கோர்பத்தெனவருங் கற்பனை—இதற்
குண்டோரயாதொரு சற்பனை

மந் : முன்னமென்றெய்வத் தொழும்படா—இன்று
மோசஞ் சொன்ஞய்நீ யெழும்படா—நாளை
இன்னேரமுன்மேல் தழும்படா—நாய்க்
கிடுவேனுன்னீரல் வழும்படா

தேவ : சாத்திரச்சூத்திரச் சடங்கேன் — பேய்கள்
தன்னைவணங்கவுந் தொடங்கேன்—உன்றன்
கோத்திரம்வந்தாலு மடங்கேன்—என்னைக்
கும்பிட்டாலுமுன்னுள் மடங்கேன்

மந் : சத்தியவேதத்தை விட்டு—எங்க
டன்சமயத்திலே கிட்டு—மன்னன்
சித்திரவாளாலே பட்டு—உயிர்
சிந்திடாதேமதி கெட்டு

தேவ : கத்தனைநித்தமு மெண்ணுவேன்—அவர்
கால்முத்தியேநிதம் பண்ணுவேன்—உன்னைச்
சுத்தப்பசாசென எண்ணுவேன்—போடா
சொல்லுமென்வீடுபோய் நண்ணுவேன்

மந் : மன்னன் வன்மேந்திரன்முன்செல்லுவேன்—உன்றன்
வாய்மதம்யாவையுஞ் சொல்லுவேன்—பின்பு
சின்னபின்னமாகக் கொல்லுவேன்—இந்தத்
தேசமெல்லாம்மெய்க்க வெல்லுவேன்.

## மந்திரி விருத்தம்

* பரம்பேறு முரஞ்சேர் பற்ப பார்த்திபன் றனக்குன் செய்தி
உரம்பேறு கொள்ள வோதி உன்மனக் கெறுவம் போக்கிக்
கரம்வேறு உடலம் வேறு கால்வேறு கண்டம் வேறு
சிரம்வேறு வேற தாகத் தெரிந்தரிந் தெறிவிப் பேனே

**வசனம்** – அகாகேளும் நீலகண்டம்பிள்ளாய், புலிப்பழையிலே பசுக்கன்று வந்து ஆரம்பம் பண்ணுகிறது போல ஆரம்பியாதே, உனது உயிருக்கு இறுதி முடுகிக் கொண்டது நன்ருயறிந்துகொள்வாயாக.

---

* பரம்பு—விசாலம்

## தேவசகாயன் கொச்சகம்

‡நத்தம் பிளந்திட் டெழுமதியை நாய்பார்த் திருந்து குரைத்ததினுல்
மெத்த வசைவந் தெய்திடுமோ விருதா மொழியேன் விளம்புகிருய்
சித்த மிரங்கி எங்களுக்காய்ச் செகத்தில் மனுவாய் வந்துதித்த
கத்தன் செயலா லன்றியொரு கருமம் வராது கண்டாயே

வசனம் :- அகாகேட்பாயாக சருவத்துக்கும் வல்லபனுகிய சருவேஸ்பரனுடைய கிருபையினுலே நடக்கிறதன்றி என்னைச் சிட்சை பண்ண உன்னுலே முடியாது. இனிமேல் பல தேவர்களை வணங்குகிறவனல்ல. உன்னுலடுத்த கருமத்தை நடாத்திக் கொள்வாயாக.

## மந்திரி வசனம்

இராச பிரதானிக்க வஞ்சிமார்த்தாண்ட வன்மேந்திர மகாராசனே சரணமே சரணமையா.

## இராசன் விருத்தம்

முந்திடு மொன்னுர் சென்னி முடியுட னிடறி வாகை
சிந்திடு மதிக டேர்ந்து செப்புமந் திரியே கேளாய்
வெந்திடுங் கனல்போல் நீயும் விழிகடை சிவப்ப வெம்பி
வந்திடுங் கருமந் தன்னை வகைபெற வுரைசெய் வாயே.

வசனம் :- அகா கேளும் மந்திரி, மனவிசாரத்துடனே தனியே இவ்விடம் வந்த காரியம் நானறியும்படி சொல்லுவாயாக.

## மந்திரி கொச்சகம்

செங்கனக முடிபுனைந்து செகம்புரக்குந் தேர்வேந்தே
இங்கேயோர் செய்தியென்ற னிருசெவியாற் கேட்டறிந்தேன்
சங்கரனுர் சமயமதைத் தான்பழித்து நீலகண்டன்
பொங்குசத்ய வேதம் புகுந்தா னறிவீரே.

வசனம் :- கேளும் ராஜனே, நீலகண்டன் எங்கள் சமயங்களைப் பழித்துச் சத்திய வேதத்தை மெத்தப் பிரபலமாய்ப் பேசுகிருனென்று கேள்விப்பட்டேன். ஆகையால் விசாரித்தறியுமையா.

---

‡ நத்தம் — இருள்

## இராசன் விருத்தம்

அறியவென் றுரைத்தாய்கேள் நீலகண்டன்
அன்றுதொட் டின்றள வாயென்
பிரியமுள் ளமைச்சாயிருக்கு முத்யோகப்
பெருமைசேர் சிறப்பெலா மிகழ்ந்து
சிறியராம் மிலேச்சர் குறியறியாமற்
றீட்டிய சத்திய வேத
நெறியதற் குள்ளாய்த்தன் னுயிர்க்கினம்
நினைப்பனோ இதுநிச மலவே

வசனம் :- கேளும் மந்திரி நீலகண்டன் எமது மந்திரியாக இருக்கிற உத்தியோக வல்லமைகளும் சீர்சிறப்பும் புசபெல பராக்கிரமு மிப்போவிட்டிழந்து சத்தியவேதத்துள்ளாகி தன்னுயிருக்கீனம் பண்ணிக்கொள்வானு மந்திரி.

## மந்திரி ஆசிரியவிருத்தம்

காருற்ற†கல்லோல மெறியு‡மகராலயக்
கலைசுற்று நிலவு லகெலாங்
கந்தடு தடப்புயத் திற்சுமந் தரசுபுரி
கனகமணி மகுட ராசர்
சீருற்ற வடிபரவு மன்னனே மன்னவர்கள்
திலகனே வன்மேந் த்ரனுஞ்
செம்மலே யென்னென்று சொல்லுவே னுன்னர
செவ்வேநட வாது கண்டாய்
வாருற்ற நீலகண் டன்சத்திய சமயமா
யெங்கள் சமயத்தை விட்டு
ராசனென் செய்குவா னெனையென்று வாயா
விசைக்கொணு வசைகள் சொல்லி
நேருற் றிருக்கிறு னவனையாக் கினைசெய்து
நெஞ்சைப் பிளந்து கொன்றால்
நேரலர் மதித்திடுவ ரரசுநிலை நின்றிடும்
நிச்சய மிதறி குவீரே

---

† கல்லோலம்—கடற்றிரை, ‡ மகராலயம்—கடல்.

## இராசசன் சந்தவிருத்தம்

நிச்சய மென்றுள நொந்து வருந்தி நிகழ்த்திடு மந்திரியே
அச்சமில் லாதவ னெப்படி வேதம தாகின ஞகியவன்
மெச்சவி ருந்தெது பேசின னன்ன விதத்தை யிதத்துடனே
இச்சண மீதினி லிதைவிப ரத்தொ டெனக்குரை செய்வாயே.

வசனம் :- கேளும் மந்திரி, என்னவிதமாய்ச் சத்தியவேதத்திற் குள்ளாஞன். அவன் ஆர் மெய்க்கும்படி உன்னுடன் பேசிஞன். அவன் பேசினவைகள் யாவும் நான றியும்படி சொல்வாயாக.

## மந்திரி விருத்தம்

பிரமா விட்டுணு ருத்திரனும் பிசாசாம்
பேய்களாம் நமது தேவதைகள்
பெண்களைத் தலையிற் சுமந்தலைந் தவராம்
பிரமசாஸ் திரங்களும் பொய்யாம்
திருவிழா நடத்துவ துவெகு பாவமாஞ்
சிவசிவா வென்பது மவமாம்
செம்பு நாகங்களைத் துதிப்பதும் விழலாம்
சிவபெலி முறைகளும் பழுதாம்
தரைதனில் நமது தேவரைப் பழித்து
சத்தியவே தத்தையுச் சரித்துச்
சாற்று மாமறையின் குருவையா சரித்துத்
தமிழ்மதப் பெயர்தனை மாற்றி
வரிசையாய்த் தேவ சகாயனென் றவன்பேர்
மாநில முழுதுமே வழங்கி
வருகுது இனிமேற் றமிழ்மறை தன்னை
வணங்குதற் கிடமில்லை மன்ஞ

வசனம் :- கேளும் ராசனே, எங்களையும் எங்கள் தேவர்களையு மிகழ்ந்து சத்தியவேதத்திற் புகுந்த நீலகண்டனை ஒரு தடையுமின்றி கொன்று போட்டால் நல்லது. அல்லது அரசுக்கும் நமக்கும் அழிவு பண்ணுவானறிவீராக.

## இராசன் ஆசிரிய விருத்தம்

மாசுற்ற அகிலகுல நிலமலையோ டிருமும்
மதத்து நிலைதடு மாறினும்
வடசிகரி பொடியினும் படியிடியினுங்
கடகவான் கூடமுக டிடியினும்
தேசுற்ற*குடவளைத் தரளந்தெறித் துவரு
திமிர வாருதி சுவறினும்
திசைகட்டு மாறினும் இரவுபக லாயினும்
திவச மிரவாகி வரினும்
காசுற்ற மணிமகுட மன்னரர சாள்தரு
கலிங்கங் குலிங்க மீழங்
கருதரிய சீனமா ருடமக்கத் திஞேடு
† கவி ‡ குவட்டத்து ளென்றன்
பேசுற்ற ஆணையை மருர் நீலகண்டனென்
பேச்சினை மறுக்க வென்ன
பெரியஞே வவனுடல் பிடுங்கிநாய் நரிகழுகு
பேயுண்ண வுதவேனே.

## சிந்து

இராகம் : மோகனம் தாளம் : ஆதி

### பல்லவி

இப்படியுஞ் சொன்னுஞே நீலகண்டன்—இப்

### அனுபல்லவி

வெப்பழற்குளிட்டஅரக் குக்கொதிப்பதெனக்கோப
மப்படிக்கொதித்தெழுதே யிப்படிநீலகண்டனை
மெய்க்கரக்கட்டுடன் ரத்தங் கக்கிடச்சிக்கெனப்பற்றி
இக்கணத்துக்கிரத்துடன் சக்கரத்திற்றிரிப்பிப்பேன் (இப்)

### சரணங்கள்

1. சிங்களந்துளுவங் கொல்லஞ் சீனமாருடமச்சை
சிந்துவுடன் வங்கமங்கஞ் செப்புநல்லகொங்கணிய
தேசங்கள் தனை ஆளும்—அதிகபெல
ராசர்களெனைநாளும்—தேடிவந்து
திறைதந்து முறைகொண்டு செயதுங்கரணசிங்க
திகழ்சந்த்ர முடிதங்கும் அரசன் நானுயிருக்கச்

---

* குடவளை—திரண்டசங்கு †கவிதல்—சூழ்தல் ‡கு—பூமி

சிவனையும் பழித்தானே—நீலகண்டன்
அவனைநான் விழிப்பேனே—சீக்கரந்தனிற்

சிந்திடச்சில்லிரத்தங்கள் அந்தரத்தெழுந்துதலை
பந்தெனப்பறந்துருள இந்தநேரந்தனிற் கொல்வேன் (இப்)

2- பண்டறிவில்லாதபல மிண்டுசெய்யும் அண்டலர்கள்
தொண்டுசெய்யவென்றரசு கொண்டவென் சொல்லின்றிவைத்த

பாலையுங்காகங்குடிக்குமோ—பருந்தருந்த
வேலைதங்குமீன்துடிக்குமோ—அல்லாவிலகம்

பஞ்சினில்நெருப்புவைத்து மிஞ்சுதுருத்திகொடுத
அஞ்சி†யங்கிமூழுருவன் னெஞ்சுகொண்டநீலகண்டன்

பார்த்தறிந்துமிருந்தானே — படியிலவன்
நாத்தறித்துவருத்தேனே — இந்நாட்டுடன்

பட்டணமெல்லாமெனக்குள் மட்டடங்கவேயவனைக்
கட்டியிழுத்துக்கழுத்தை வெட்டிடத்திட்டஞ்செய்குவேன்
(இப்படி)

3. +பட்டிமைப்புத்தியுங்கொண்டென் பட்டினத்துக்குள்ளிருந்து
பத்திமுத்தியாகநிதங் கத்தனைத்துதித்துள்ளோனைப்

பருந்தாடச்சாடேனே — நாய்நரியுண்டு
விருந்தாடப்போடேனே — போடாவென்றென்

பற்றுளமந்திரியுடன் சற்றுமென்னைமதியாமல்
உற்றிடுதேவரையெல்லாம் வெற்றலகையெனச்சொல்லப்

பண்டுகண்டறிந்தானே — அல்லால்மத
முண்டுகொண்டறைந்தானே — பார்பாரினிப்

பற்றியேசீக்கிரத்திரு பத்தெனுநாலாமதிகாரிகள்
மெத்தவருத்தங்கொடுத்துப் பித்தனைக்கொல்லவுஞ்செய்வேன்
(இப்படி)

## ஆசிரிய விருத்தம்

கானக் கரும்பிள்ளை கழுகுமுழு கக்கூழி
கைகொட்டி நின்று பாடக்
கட்டாண்மை முடிமன்ன ரெட்*டா சையும்நின்று
காலிற் பணிந்து சாட

† அங்கி — நெருப்பு + பட்டிமை — களவு * ஆசை—திசை

ஊனக் கிடக்குருதி யுதிரவரு†குருகினே
‡டும்பற் றிரட்கள் வீழ
ஒட்டலரை வெட்டிவிரு திட்டுநிலை யிட்டுலக
மொருதவள வட்ட நிழலில்

நானுக்கிரம முடனரசு செய்யவென் சொற்றப்பி
நசைசெய்யு நீல கண்டன்
நாவினெடு கண்ணைப் பறித்துடல் முறித்தின்று
நாய்க றிக்கத் தறிக்க

தேனக்கிடுந் தொடையமைச்சனே கேளதிக
சிங்கசங் கார கோர
தீரவீரக் கொலைச்சேவகரை யிங்கொரு
சணத்தினி லழைத்தி டாயே.

**வசனம் :-** அகா கேளும் மந்திரி, நமது வாசலில் வீரக்கொலைச் சேவகரை அதி சீக்கிரம் அழைப்பிப்பாயாக.

**மந்திரி வசனம் :-** அப்படியே அழைப்பிக்கிறேன் ஐயா.

## சேவகர் வரவு

*தூவகங் கொண்ட வேற்கைத் துரைராசர் பணிவன் மேந்த்ரன்
கோவகக் குறிப்ப றிந்து கூடாரைக் கொலைசெய் கின்ற
பாவக மனத்தா ராகிப் பரியென நடாவுமுக் கிர்ம
சேவக ரிருபேர் வந்து திறமுடன் தோற்றி ஞரே.

## சபைத் தரு

**இராகம் : கமாசு** **தாளம் : ஆதி**

கண்சிவந்து மனங்கறுத்து — வெண்பற்கடித்து
கைப்பிடித்தவாள்**விதிர்த்து வெற்றிகூறியே
மண்புரக்கும் மன்னர்மன்னனும் — வன்மேந்திரன்
வாசலுக்கிர்ம வீரகொலைச் சேவகர்வந்தார்

கல்லெனச்சொல்லிட்டசொல்லினர் — ஒல்லாரையெல்லாம்
கட்டழலிற்பட்டழுந்தும் விட்டிலென்னவே
அல்லலுற்றுயிர்கள்வாட்டவே — யதிர்த்தெதிர்த்து
ஆவலித்துரப்பியுக்கிர்ம சேவகர்வந்தார்.

---

† குருகு — பறவை ‡ உம்பல் — மிருகம் * தூ — புகை
** விதிர்த்தல் — அசைத்தல்

## சேவகர் தரு

**இராகம் : அமிர்தகல்யாணி** **ஏகதாளம்**

1. வணங்கிலர்சிரமுங் - கூடி - யிணங்கிலருரமும் — எதிர்பொரு
வாளுறுகரமும் - பெரிதாய் - நீளுறுபுரமும்

2. நிணங்கறைசொரியக் - கோடி - பிணங்குறைதிரியக் — கூழி
நிறைகொடுசரியச் - சமரில் - விரைவுடனரிவேன்

1. காற்றினைத்தறிப்பேன் - சூழுங் - கடலினைப்பிறிப்பேன் — பெரிய
கருமலைமுறிப்பேன் - எரியுங் - கனலினைக்கொறிப்பேன்

2. கூற்றினைமறிப்பேன் - அஞ்சார் - குடலினைப்பிறிப்பேன் — பெரிய
கொடுங்கணைமுறிப்பேன் - என்போற் - குறிக்கிலிங்காரோ

1. அம்பரந்தொடுவேன் - அஞ்சார் - ஆரையுமடுவேன் - எனைப்பணி
பவரையும்விடுவேன் - உயரா - தவனையுஞ்சுடுவேன்

2. எம்பெரும்வீரஞ் - சொல்ல - எத்தனைதூரம் — பூவில்
எனக்கென்னபாரம் - உங்கட் - கிசைத்தெனென்சாரம்.

## சேவகர் கவி

அண்டார்கள் மகிட கோடி யரிந்திடுங் களத்தி னின்று
வண்டாரும் வாகை சூடும் வர்மேந்திர மன்ன போற்றி
விண்டாரும் கிரண வாவி வெயிலவ னுதயங் கண்ட
தண்டாருஞ் †சதத ளப்பூஞ் சரணணை சரணந் தானே.

**வசனம் :-** பூமண்டலாதிப கிருபாகடாட்ச மகராச துரையே சரணமே சரணமையா.

## இராசன் விருத்தம்

அடரிட் டிங்கெனைப் பழித்து அரசழித் தரனை நீத்துத்
திடரிட்ட நெஞ்சு கொண்ட திறல்நீல கண்டன் றன்னைப்
குடர்பிட்டு ஈர வீர்த்துக் குக்கனுக் குணக்கொ டுக்கப்
பிடர்தொட்டு அறுக்கை யிட்டுப் பிடித்தென் முன்வருகு வீரே,

**வசனம் :-** ஆகா கேளும் வீர உக்கிர்மக் கொலைச்சேவகரே, என தாணையைமறுத்து அரசழித்த நீலகண்டனை அதிசீக்கிரம் பிடித்துவருவீர்களாக.

**சேவகர் வசனம் :-** அப்படியே செய்கிறோம் இராசனே

† சததளம் — தாமரை

## சேவகர் சிந்து

இராகம் : கல்யாணி அடதாளம்

### பல்லவி

வெற்றி வீரன் நானையா—இரணசூர
வெற்றிவீரன் நானையா

### சரணம்

1. வெற்றிவீரத்தொடு முயலொன்றெனத் தொடர
வீட்டில்மனையாளொரு வீதமர்யிருக்கக்கண்டு
சுற்றியோடிவந்து காலிரண்டையும் பூண்டு
துரத்துதுரத்துஎன்று உரத்துச் சொல்லுகின்ற (வெற்றி)

2. நாலாம் சந்தைதனிற் கொண்டசுரைக்காய்தன்னை
நறுக்கிக்கறிக்குத்தாவென் றெந்தன்மனையாள்கேட்க
வேலாகந்தாதுணை யென்றுவாளெடுத்து
வெட்டஒன்பதுநாள் வெல்லச்சென்றுபோன (வெற்றி)

1. சேனைத்தளத்துடனே ஊனவேலரசன்
சென்றபின்னரந்தத் தெருவிலொருநாட்போனேன்
ஆனையடியைக்கண்டு ஓடிக்கதவைப்பூட்டி
அச்சத்துடனிருந்து பிச்சுப்பிதற்றுகின்ற (வெற்றி)

2. சட்டமாய்நிறைந்த தண்ணீர்க்குடத்துக்குள்ளே
தன்னைப்போலொருவன் சன்னைசெய்யக்கண்டு
கட்டிக்கொடுக்கிழுத்துக் காலிரண்டையுந்தூக்கிக்
கடுகஉதைத்துத்தள்ளி முடுகவிழுந்துபோன (வெற்றி)

வசனம் :- ஒகோ வஞ்சிமார்த்தாண்ட வன்மேந்திரராசன் வாசற் பிரதானியே, உமக்குப் பொல்லாத கிரகசாரம்பிடித்திருக்கிற விபரமேதையா.

## தேவசகாயன் கலித்துறை

மின்னஞ்சு செம்பொன்மிளி *ரஞ்சுமஞ்ச விதமகுடர்
தன்னெஞ்சு மஞ்சவரசாள் வன்மேந்திரன் றனக்கிணங்கக்
கன்னெஞ்சுறுந் திறற்சேவக ரேகடி தாகவந்து
வன்னெஞ் செனச்சொல் லதிசயமேது வழுத்துவீரே.

வசனம் :- அகா கேளும் சேவகரே, நீங்களிருவரும் வந்தகாரியம் நானறியும்படி சொல்லுவீராக.

---

* அஞ்சு—அரசர் குழுவைத்து

## சேவகர் விருத்தம்

*பைக்கொ ணச்சரவிஞேடு பகிர்மதி ¶மிலேச்சும் ‡வேணி
முக்கண் ணன்றனேப் பழித்த முறைறமைக டன்னேக் கேட்டு
அக்கணங் கோப முற்று அரசன்வன் மேந்திர னும்மை
இக்கண மழைக்கச் சொன்ஞர் எழுந்திடுஞ் சடுதி தானே.

**வசனம் :-** கேளுமையா, இராசன் அதிக கோபங்கொண்டு சடுதி யாய் உம்மை அழைக்கச்சொன்ஞர் வருவீராக.

## தேவசகாயன் விருத்தம்

என்றுமென் னன்பா யிருந்த சேவகரே யிப்பொழு தெனதுசொற் கேட்டு
இன்றுநீர் சற்றே யிருந்திடு மிங்கே எனக்கொரு கருமமுண் டிப்போ
சென்றுநான் பார்த்து வருகிறே னதற்பின் சீக்கர மாகநாங் கூடி
வன்றிறல் மிகுக்கும் மன்னவர் மன்னவன் வன்மேந்திரன் முன்செல்லுவோமே

**வசனம் :** அகா கேளும் சேவகரே, சிறிதுகாரியமிருக்குது பேசிக் கொண்டு போகலாம் சற்றேயிருந்து இளைப்பாறுவீராக

## தேவசகாயன் கொச்சகம்.

கட்டியடித் திழுத்துக் கன்னத் துமிய வஞ்சத்
துட்டர்கைக் குட்பட்ட தெங்கள் தொல்வினையை வெல்லவல்லோ
மட்டில்லான நன்மைபுரி வல்லோன் சுதன்ஞானக்
கட்டழ காமுத்தர்பணி கர்த்தனே காரணனே.

## தேவசகாயன் தரு

**இராகம் : ஆனந்தபைரவி** **தாளம் : சாப்பு**

1. அத்தனருளாளி நித்தனெமைமீளி
சுத்தன்சுதனனக் கத்தன்பதசேவை
முத்தஞ்செய்துதாவி மெத்தன்பொடுமேவி
சித்தந்தனினும் வைத்தஞ்சல்செய்வேனே

சிறந்தம்பரந் துறந்தும்மலே பிறந்துந்தூதர் மகிழ்ந்தும்மூவர்
முழந்தாளினி லிருந்துந்தொழு பதந்தாவினேனுனே

---

*பை—பாம்பின் படம் ¶மிலேச்சல்—சூடுதல் ‡ வேணி—சடை

2. *மட்டுத்‡தீ¶யபூபம் வாழைக்கனி‡‡மாழை
வள்ளத்துறுபாலின் வெள்ளத்தினையுண்டு
தட்டுத்திகடுபம் நாசிக்கிடைமூழ்கித்
தலையாடுறுபேயின் வலையூடுறுவேனே
தவங்கற்றிடு மனம்வைத்தனு தினம்பற்பமா பதம்வைத்துளம்
மகிழ்ந்துற்றிட நிதம்பெற்றிடு வரம்பெற்றுறைவேனே

3. இப்போதேனையாண்டு மெய்ப்பார்த்தனை மீண்டு
இன்னுந்திருமேனி சின்னம்படவேதான்
அப்பாரடியுண்டு செப்பாரறை கொண்டு
ƒஆனுதருள்செய்யும் வானுடுறைவோனே
அடுத்துக்கயி றெடுத்துக்குரு செடுத்துப்புய மிருத்திக்குரு
சறைந்தின்னுரை பகர்ந்தேயுயிர் பிரிந்தேயெமைமீண்டீர்.

## தேவசகாயன் கொச்சகம்

பந்தத்திற் பந்தமுமாய்ப் பாலருமாய்த் தோழருமாய்ச்
சொந்தத்திற் சீஷருமாய்த் தோற்றினீ ரெங்களுக்காய்
நிந்தித்துமை யொருவன் நெட்டூரர்க் கீவனென்ற
அந்தத் திருவாக் கயரே னயரேனே.

## கற்பித்தான் கொச்சகம்

நேர்ந்து பொருகளத்தில் +நேரா ரகங்கலங்கிச்
சோர்ந்து விழவாகைத் தொடைபுனையு மென்தோழா
ஓர்ந்து உசாவி ஒருகோடி யெண்ணமுற்றுத்
தேர்ந்து நடந்துவந்த செய்தியென்ன சொல்வீரே

**வசனம் :-** கேளுந்தோழனே, தனியே இவ்விடமாக வந்தகாரியம் நானறியும்படி சொல்லுவீராக.

**தேவ. வசனம் :-** அப்படியே சொல்லுகிறேன் கேளுந்தோழனே

## தேவசகாயனும் கற்பித்தானுந் தரு

**இராகம் :** மூகாரி **அடதாளம்**

தேவ : இகழ்ந்துள்ளோர்களெதிர்த்தகளத்திலே-புரமுஞ்சிரமும்
இடறவேல்தொட் டடரும்வேளையில்-புரமுஞ்சிரமும்
புகழ்ந்துபோற்ற வாகைசூடிய—தோழனே ஒரு
புத்திநினைந்தென் சித்தத்துரைசெய்வாய்-தோழனே ஒரு

---

*மட்டு—கள் ‡தீ—இனிமை ¶அபூவம்—வடை
‡‡மாழை வள்ளம்—பொன்வட்டில் ƒஆனுமை—நீங்காமை
+நேரார்—பகைவர்

கற் : ஈற்றில்வாழைத் *தாற்றில்வாளைபாய்ந்—தூறுதேன் கனி
இளமென்சாலிப் பழனம்பரவியே - ஊறுதேன்கனி
ஆற்றில்¶வாவு பற்பனுபுரத்—தமைச்சனேயுன்
னவமதான நவமென்சொல்லுவாய்-அமைச்சனேயுன்

தேவ : முந்தைநாளில் வந்தந்தணரையே—பழிக்கநானும்
முதன்மந்திரிக்கு மூட்டிச்சாட்டினுர் - பழிக்கநானும்
அந்தவஞ்சமச்சன் சிந்தைவெகுளுற்றே—அரசற்குரைக்க
அரசன்நெருப்பி லரக்குப்போலுற்ருன் - அரசற்குரைக்க

கற் : ஊரோடுறவுற் ருர்களென்கிலும் — அரசனென்கிலும்
உன்னைவெறுத்திங் கென்னசெய்குவார்-அரசனென்கிலும்
பாரோடகில பொருளுந்தந்திடும்—ஆதிசுதன்றன்
பாதமயர்வு ருதவுன்னையே — ஆதிசுதன்றன்

தேவ : ஆகிலரசன் விடுத்தசேவகர்—எனையங்கழைக்க
அதிககோபத் துடன்வந்தமையினுல்-எனையங்கழைக்க
ஏகியெனது அவஸ்தைச்சடங்கெல்லாம்-முடிக்கக்குருவின்
இடஞ்சென்றர சனிடஞ்செல்வதுநன்றே-முடிக்கக்குருவின்

கற். வல்லவரசன் மனமுங்கோபமு — மின்னதென்று
வகையுருத வகையதாதலால் — இன்னதென்று
நல்லமதியின் சொல்லிதாகுமே — நானும்வாறேன்
நடக்கநினையும் வடக்கன்குளத்துக்கே — நானும்வாறேன்

**கற்பித்தான் வசனம் :-** கேளுந்தோழனே, நாங்களிருபேருங் குருவானவரிடம்போய் உமக்கு அவஸ்தை**கொம்பிச முதலான நன்மைப் பிரசாதங்களைப் பெற்றுக்கொண்டு வருவோந் தோழனே.

**தேவசகாயன் வசனம் :-** அப்படியே மிகுதியுஞ் சந்தோஷமானேன் வாருந்தோழனே.

## தேவசகாயனும் கற்பித்தானும் தரு

**இராகம் : எதுகுலகாம்போதி** **தாளம் : ஆதி**

தேவ. ‡மெய்ப்பற்ருவது தப்பித்தவறுசெய்யாக் கற்பித்தாமே—மிகு
†விடருறுமலைபல வடருறுமடவிகள்
விரைவுடன்‡‡நடவவென் னுடனெழுவீரே

---

* தாறு—குலை. ¶வாவுதல்—பாய்தல்
** கொம்பிசம் — பாவசங்கீர்த்தனம் (இது பிறபாஷைச் சொல்)
‡ மெய்ப்பு—நினைவு. † விடர் – மலைப்பிளம்பு. ‡‡ நடவல் – செல்லல்

கற். வெப்பித்தோர்முடி குப்புற்றேவீழக் — கைப்*பத்திரமேந்தும்
விஜயமனோகர தேவசகாய
வினோதசினேகிதனே நடவாறேன்

தேவ. ஒட்டைத்திரளொடு துட்டக்கரடிபுலி — கட்டாக்கடம்மை
உறுமுது¶கவிபல நறுமுதுகுறுமுய
லுறுகுதுசிறுமறு குகடொறுமேபார்

கற். வெட்டித்தளைதரு முட்கட்டுறு**மருவும் —††கட்டாரமென்ன
‡‡விடர்வினிலெழுபல + விடபமதொடிதரு
¶¶மிடலுறுகடகரி நடவுதிதோபார்

தேவ. வித்தகசித்திர உத்தமமிகுநண்பா — எஸ்தாக்கியேநீ
வினைகெடவருளிய குருவிடமெனவுரை
பெறுவடதிசையுறு மடுவிதோபாராய்

கற். முத்தணிமகுடர சுக்களிலுத்தமனும் — தாவீதிராசன்
முறைபெறுகுலமிக நிறைபெறவருகனி
முழுதருளுடன்மரு வியநகரிதுபார்

**கற்பித்தான் வசனம்:-** நாங்கள் கோயிலிடமாய்ச் சேர்ந்தோம், குருவானவரிடம் போவோந் தோழனே.

## குரு விருத்தம்

தப்பாத மொழிகள்பேசித் தரணிகடனை யாள்மன்னர்
எப்போதும் புகழவாகை யெய்திடுகற் பித்தானே
ஒப்பாக இரண்டுபேரு முசாவியே விசாரமுற்று
இப்போதான் வந்தசெய்தி யின்னதென் றியம்புவீரே.

**வசனம் :-** கேளும் பிள்ளைகாள், நீங்களிருபேரும் ஒரு மனதாய் வந்த காரியம் நானறியும்படி சொல்லுவீராக.

## தேவசகாயன் தாளிசை

அமுத சீதபிர காச சந்த்ரபத
அன்னை கன்னியெனு மென்னம்மாள்
அந்த வெல்லையி லுவந்து வந்தருளு
மைந்தனென் னவரு மெந்தைதாள்

---

* பத்திரம்—உடைவாள். ¶ கவி—குரங்கு. ** மரு—வனந்தரம்
†† கட்டாரம் – குற்றுவாள். ‡‡ விடர்வு—காடு. + விடபம்—மரக்கொம்பு. ¶¶ மிடல் — வலி.

விமுத போதமுறு மப்ப னேதவ
விருப்ப னேயுன திருப்பதாம்
வினையகற் றியருள் ஞானஸ் நானமெனும்
மெய்ப்பொருட் டிறமை வேண்டினேன்

எமது பாவமது போலவந் தணர்க
ளிருவர்சொல்ல முதன் மந்திரி
இராசனுக் குரைசெய் சாடை யாலவ
னிரண்டு சேவக மனுப்பினுன்

உமது நன்மையெனு மாசீர் பாதமுட
னுற்றவஸ் தையொடு கொம்பிசம்
உதவி செய்துமன மகிழ்வதா யுமது
உபய தாளருள வேணுமே.

**வசனம் :-** கேளுங்குருவே! ஞானஸ்நானம் பெற்ற செய்தி ராயனறிந்து கோபத்துடனே அழைத்துவரும்படி இரண்டு சேவகரை அனுப்பினுன். ஆகையால் கொம்பிசம் அவஸ்தைபூசுதலாகிய ஞானநன்மைப் பிரசாதங்களுந் தந்து உமது ஆசீர்பாதமும் கொடுத்தனுப்ப வேணுங் குருவே.

### குரு கொச்சகம்

பவத்தை விரும்பாதே பாருலகில் வந்தகர்த்தன்
நவத்தை விரும்பி நடந்துகொள்வாய் நானுனக்கு
அவஸ்தை முதலானசடங் கானதுவெல் லாமீந்தேன்
தவத்தை நினைந்தாதி தற்பரனைப் போற்றுவையே.

**வசனம் :-** கேளும் மகனே, அவஸ்தைபூசுதல் முதலாகிய நன்மைப் பிரசாதங்களும் ஆசீர்பாதமுந் தந்தேன். புத்தியாய் நடந்துகொள்வாயாக.

### தேவசகாயன் கொச்சகம்

நேயமைந்தர் தந்தைபெண்டீர் நேருமெழிற் சுற்றமெல்லா
மாயமைந்து தோன்று மவராரோ நாமாரோ
பேயமைந்த பெலமகலப் பேருலகில் வந்தகர்த்தன்
காயமைந்து மென்னுட் கருத்தைவிட்டு நீங்காதே.

## கற்பித்தான் தேவசகாயன் தரு

**இராகம் : தோடி** **ஏகதாளம்**

கற்: அந்தரசன் மந்திரியாய்
வந்துளந்தனன்பனே நீ கேளாய் — இந்த
அம்புவியின்வாழ்வைநம்பி
எம்பரன் பொற்பாதம்மறவாதே

தேவ : சொந்தமாய்வந்தெந்தனக்கு
முந்தஞானந்தந்தருளுந்தோழா—எங்கள்
சோதியேசுநாயகன்பொற்
பாதம்மறவேனிது நீகேளாய்

கற் : வம்பலகைதன்னைநம்பி
எம்பரன்மோசேசுகையிலேதான் - அன்று
வைத்தபத்துக்கற்பனைதவிர்த்து
மோட்சவாழ்வையிழவாதே

தேவ : தம்பமுறுவஞ்சிமன்ன
னெஞ்சவேயிதுசடலந் தன்னை—இந்தத்
தார்தலத்திலென்செயினும்
தற்பரன்சொற்கற்பனைமீறேனே

கற் : சோனசுதனைப்பனைமீ
னீனமேசெய்யாமலேமூன்றுநாள் — மீளச்
சொல்லரியகரையதனில்
மெல்ல விட்டநன்றியறியாயோ

தேவ : கானகத்தில்மான்மருப்பிற்
காட்சியையெஸ்தாக்கியென்போன்றனக்குச்—செய்த
காரணம்போலென்றனக்குக்
கர்த்தனெயுன் சித்தமிரங்காயோ

கற் : எத்தனைதுயர்வருத்திக்
கஸ்திகொடுத்தாலுமே மார்த்தாண்டன்-செய்யும்
எந்தவிதநிந்தனைக்குஞ்
சிந்தைசலியாதிருக்கவேணும்

தேவ : சத்தியமெய்ஞ்ஞானவாதி
தற்பரனைநித்தம்மனத்தெண்ணி — இந்தத்
தாரணிமார்த்தாண்டமன்னன்
தன்சமுகந்தன்னில்நான் செல்வேனே

**கற்பித்தான் வசனம்:** அகா கேளுந்தோழனே, அனந்த தயாபர சருவேஸ்பரனுடைய கிருபாகடாட்சத்தை என்றென்றைக்கும் மனதிலே நினைத்துக் கொண்டு ஒன்றுக்கும் அஞ்சாமற் போய் வாரும் தோழனே.

## தேவசகாயன் சிந்து

**இராகம்: தேசிகதோடி** **ஏகதாளம்**

**பல்லவி**

நெஞ்சமேநீ அஞ்சவேண்டாம்—சொன்னேன் சொன்னேன்
நெஞ்சமே நீ அஞ்க்வேண்டாம்

**சரணங்கள்**

1. கொஞ்சமல்ல அள்ளஅள்ளக் குறையாதசோறுகறி
கொட்டிப் பெரும் பொட்டளியாய்க் கட்டித்தலைமேலிருக்கத்
தஞ்சமென்றோர் துணைவர மிஞ்சுதூரமெனும்வழி
தான்நடக்கப்பயமென்ன கால்நடக்கச்சுகமானல் (நெஞ்)

2. வல்லாண்மை கையாண்மை வாயாண்மையற்றிருக்க
வங்கிஷமுங்கோபமுற்று வறுமைக்குள்ளாயிருக்க
அல்லல்மதிகொண்டோராளைக் கொல்லுகிலும் பயமென்ன
அப்பனரசாயிருக்க ஒப்பனையுமதற்கென்ன (நெஞ்ச)

3. நேயமோடோடுமாலாத்து ஆள்முதலானதெல்லாம்
நெற்றுணையுங்குறைவின்றி நற்பொருளதாயிருக்கப்
பாய்பொறுத்தகாற்றுநிற்கப் பட்சியெனவேபறக்கும்
படகுகைக்குள்ளேயிருந்தால் கடல்கடக்கப்பயமென்ன (நெஞ்)

4. நச்சுறுவிலங்குகட லக்கினிமனிடர்முதல்
நானிலத்திலுள்ளதெல்லாந் தானெழுந்தொன்றுகவந்து
வச்சிரங்கொண்டறுக்கினு மச்சமற் றுடலுயிர்க்கு
வடுப்படாதிருக்குமானல் நடுப்படைக்குப் போனலென்ன (நெஞ்)

## பெண் கலித்துறை

கலங்கா ருரம்பிளந் தேயர சாண்டிடுங் காவலனு
மிலங்கார மாமுடி வன்மேந்த்ரன் சேவக ரிங்கிருக்க
சிலம்பாரும் பொற்புய மீதார பாரந் திகளுஞ்சித்ர
அலங்கார நாயக மெங்கே சென்றுயெற் கருளுதியே.

## தேவசகாயனும் மனைவியும் தரு

**இராகம் : கரகரப்பிரியை** **தாளம் : ரூபகம்**

தேவ : சொன்னபற்ப னுதபுரதுரை ராசன்வன்மேந்த்ரமன்னன்
வன்மவுக்ர முடனழைத்தான் மட மானே நான்போய்வாறேன்

மனை : *மட்டளிக்கும் கட்டவிழ்த்தார்-வன் மேந்த்ரனிம்மேந்திரமாய்
விட்டழைக்குங் கட்டளையைச்சற்றே விளம்பாயென் மன்னவனே

தேவ ; வளைத்தவிந்தாய் முளைத்த அந்த-வன் மேந்திர ¶னிம்மாந்திரமாய்
அழைத்ததென்னே விளைத்ததென்னேபழி யானதென்னேவஞ்சியேன்

மனை : கொல்லுமதப் ‡புல்லுவிதக்‡‡குடக் கோவேயுன்றன்பிறகே
நல்லமுதே செல்லரசே நா னும்வரவொண்ணுதோ

தேவ : சகத்தரசர் பகைத்தாலும் - பாவச் சடத்துயிர்சிதைத்தாலும்
அகத்தைவிட்டுப் புறத்தினிலே வர லாமோநீயாயிழையே

மனை : காலையிலும் மாலையிலுங் - கத வடைத்துத்தாட்பூட்டி
வாலையிலே கணவனின்றி ஒரு மடமின்னுறலாமோ

தேவ : கல்லுருக்குஞ் சொல்லிருக்குங் - கனி வாயிதழேமுருகார்
இல்லிருக்கு மில்லாளே இல்லி லிரும்நான்போய்வாறேன்

## தேவசகாயன் கொச்சகம்

*கங்கலை செங்காரவைவேல் கண்டுமரு வார்கலங்கச்
சிங்கலை கொண்டாடிச் செயங்கொள்வன் மேந்திரன்முன்
சங்கலை செங்கையாய்நான் ருன்போய் வருமளவும்
மங்கலை சேர்சங்கமெனு மந்திரத்தில் வைகுவீரே.

**வசனம் :-** அகா கேளுந்தேவியே, நான் இராசனிடம் போய்வரு மளவும் அரண்மனையிலிருப்பீராக.

## சேவகர் விருத்தம்

கெடியுற்ற வரசர் கோடி கேடிலா வயிர ரத்ன
முடியெற்றி விளங்குந்தாளான் மோசமா யெமைக் கோபித்துக்
குடிசுற்றத் துடனே கொல்வன் குணமூட னெழும்பு மல்லால்
மடிசுற்றிப் பிடித்தி ழுத்து மன்னன்முன் கொடுசெல் வோமே.

**வசனம் :-** ஆகா தேசாதி தேசரசர் மெய்க்கு மெங்கள் ராசன் கோபிக்கப்போகிருராகையால் எழும்பும், அல்லது மடிபிடிப்போம் அறிவீராக.

**தேவ. வசனம் :** இதோ வருகிறேன் சேவகரே.

---

* மட்டு—தேன் ¶ நிம்மாந்திரம்—கடினம்
‡ புல்—புலி ‡‡ குடக்கோ—சேரன் * கங்கு — தீப்பொறி

## சேவகர் தரு

**இராகம் : சுருட்டி** **தாளம் : ஆதி**

1. சுற்றுததேசமெல்லாஞ் சுற்றிச்சுற்றிப்பார்த்தாலுந்
தொல்லுலகிலென்போல்வீரர் சொல்லவேறுண்டோ

2. மற்றுருமெனக்கிணை யுற்றுருண்டோ — சொல்லில்
வாள்வீரனுக்குள்நாஞெரு வாலவீரனே

3. மூண்டமரிலென்முன்வந்து மீண்டவருண்டோ — எனக்கு
காண்டவதகனனிகராகக்காணுமோ

4. வேண்டிடும்வீட்டாளையோர்நாள் ஏண்டியென்றதால் — ஊரார்
வீடுதேடிக்கோடிதூங்கும் தாடிவீரனே

5. எண்ணுக்குளானவீரர் என்னைக்கண்டல்லா — வில்லை
என்னைப்போலவீரவான்கள் எண்ணப்பேருண்டோ

6. கண்ணுக்குட்கஞ்சல்விழக் கஞ்சலோடுற — வென்னென்று
கண்ணைக்குத்திப்போட்டிருந்த திண்ணைவீரனே.

## சேவகர் கொச்சகம்

வளைத்துவரு மாற்றலர்கள் மாற்றுன வாட்டரவுற்
றிளைத்துவரு வோர்க்கிரங்கும் ஏந்தலே நின்வார்த்தை
பிழைத்துஅண்டா மிண்டுசெய்த பேர்நீல கண்டனைநாம்
அழைத்துவந் தோமெங்கள் அரசே யறிவீரே.

**வசனம் :-** அகாகேளும் இராசனே, எங்களையும் எங்கள் தேவர்களையும் பழித்த நீலகண்டனைஅழைத்துவந்தோமையா.

## தேவசகாயன் ஆசிரிய விருத்தம்

வணங்கிநின் றுமது இருபதந் துதித்து
வாய்திறந் தேயுரை பகர்வேன்
வளர்நகர் தனையா ளுயர்புர வலனே
மறுமன்ன ரடிதொழுங் கோவே

மணங்கமழ் கமல முகவசீ கரனே
மண்ட லீகப் பெருமானே
மகுடவா திபர்கள் பரவுகா வலனே
மனுமுறை நடத்து பார்த்திபனே

பணிந்திடு புவன மனுஇறை யவனே
பனிரிடு முடிபுனே யரசே
பார்தனே யாளும் ராசரா திபனே
பரிமிசை வருநர பதியே

இணங்கிய சிங்கா சனத்தினி லிருந்து
எளியனேக் கற்பித்திங் கழைத்த
தேதென வறிய வேயுரை பகரு
மேந்தலே இரவியா திபனே.

வசனம் :- கேளும் ராசாதிராசனுகிய வஞ்சிமார்த்தாண்ட வன் மேந்திர ராசனே, அடியேனேயழைத்தகாரிய மின்ன தென்று திருவாய்மலர்ந்தருளுவீராக.

## இராசன் ஆசிரிய வீருத்தம்

ஆதிப ஞக அவனியை யடக்கி
யாண்ட நாளாயிது வரையும்
அன்புடன் வணங்கும் நமது தேவர்களே
அழனர கலகைக ளென்றும்

நீதிசேர் புவன சொரூபியா மனந்த
நிருமல ஞெருவனுண் டென்றும்
நீணிலந் தனிலே நமது தேவர்களே
நீசரந் நீதர்க ளென்றும்

மாதய வுடனே சத்திய மறையை
வணங்கி நீயிருக்கிரு யென்றும்
மதத்தமிழ் வேதந் தனேயனு தினமும்
மறுத்துநீ யிருக்கிரு யென்றும்

போதித்து நமது சமுகத்தில் வந்து
புதன்றனர் பொய்யோ மெய்யோநீ
புகலுவா யெனது கொலுவின் முன்னின்று
புன்மனந் தனேயறிந் திடவே.

வசனம் :- கேளும் நீலகண்டம்பிள்ளாய், உன் சரீரத்தைப்பேணிக் கொண்டு நான் கேட்டதற்கு மறுமொழிசொல்லுவா யாக.

## தேவசகாயன் ஆசிரிய விருத்தம்

அரசனே யரசாள் துரைமக ராச
அண்ணலே விண்ணப்ப மதுகேள்
ஆதியாங் கடவு ளனைத்தையும் படைத்த
வற்புதன் வேதநான் கேட்டேன்

பெருமையாய் ஞானத் தீட்சையும் பெற்றேன்
பின்னுமக்கி யானத்தை வெறுத்தேன்
பேரின்ப ஞானச் செபங்களைப் படித்தேன்
பேதகப் பேய்களை மறந்தேன்

வரிசையாய் மோட்ச வழிதனைக் கண்டேன்
மாய்கையா மலகையை யண்டேன்
மாசில்லா ஞானச் செபங்களைப் படித்தேன்
வன்னர கலகையை மறந்தேன்

திருவுரை பத்துக் கற்பனை யறிந்தேன்
தேவதோத் திரங்களும் புரிந்தேன்
திட்டமாய் நரகக் கணங்களை வணங்கேன்
செகதலம் பரவுகா வலனே

**வசனம் :-** கேளும் அரசே, புலி பசித்ததென்று புல்லைத் தின்ப தில்லை. உமது மனப்படியே செய்யும் இராசனே.

## இராசன் ஆசிரிய விருத்தம்

சங்காழி சூழுலக முறைமுறை புரந்திடும்
தனிமகுட ராச ராசர்
தளரமும் பவளமும் *கடகமும் மகுடமுந்
தந்தடி பணிந்து போற்ற

மங்காம லொருதவள வட்டநிழ லிட்டட்ட
மாதிரம் புகழ அரசாள்
வன்மேந்த்ர னென்னு மென்வலி யற்றதோ
பாவமலி வுற்றதோ கலியதோ

* கடகம் — ஆயுதவர்க்கம்

எங்கென்னு மெனதாண்மை யென்றிடில் மரச்செறிவி
னிற்பழு பழங்கள் விழுமோ
இரவியெழு மோசலதி திரைகள் கொளுமோ
சிற்றிளங் குழவிதானு மழுமோ
சங்கார காலமிது நின்னுயிர்க் காகையாற்
றப்பு சொல்லெற் குரைத்தாய்
தசையு முதிரமு நரிகளொடு கழுகுகடியுணச்
சடுதி முடுகுவை யறிவையே.

## இருவருந் தரு

இராகம் : பைரவி தாளம் : ஆதி

இரா : ஆழிப்பா ரரசரெனக்கிணை
வாழ்வுற்று ரெவரெனதுறுமொழி
கேளிப்போ நீலகண்டாவிக்
கெறுவமேன் நீகொண்டாய்

தேவ : வாழிப்பூ விடைவளைதருதனு
†வேளிற்கா மமுறுன்தேவர்கள்
தாழ்வுற்றே தருதலினுனொரு
நாளிற்றொழுவதுண்டோ

இரா : ‡ஓதப்பா ரண்டமுமருணிதி
யாதித்தே வர்களையிகழ்ந்து நீ
ஏதத்தோர் தொழுதிடுசத்திய
வேதத்திற் போவானேன்

தேவ : மாதர்க்கா மத்துழலரியெனு
மேதத்தே வனைநினையேனருள்
நீதத்தோர் தொழுதிடுசத்திய
வேதத்தை மீறேனே

இரா : வாவென்றே பகருமென்மொழிகளை
நீவென்றே சொலுமுரையாலுனைக்
கூவென்றே குழறிவிழுந்திட
வேகொன்றிடுவேனே

தேவ : ¶தாவின்று கியமனைமகவுட
னேயின்றே யெனைவதைபுரியினும்
ஆவென்றுழ் நரகபசாசுட
னேயொன்றிடலாமோ

---

† வேள்—மன்மதன் ‡ ஓதம்—கடல் ¶ தா — குற்றம்

இரா : ஆரிப்போ வென்னையெதிர்மொழிகொடு
தாரிப்பா ருளமுறுகெறுவிதம்
பாரிப்போ வுனதுறுதசைகறை
காரிக்கிடுவேனே

தேவ : வாரிப்பா ரலேசுவறினுமெழில்
சேரிப்பார் நிலேதவறினுமென்னைப்
பாரீப்பா ஞெருவனல்லால்மற்
ருரிப்போவென்செய்வார்.

## இராசன் ஆசிரிய விருத்தம்

ஓராயிரங் கிரண செங்கதிர் பரப்பியெழு
முதய தினகர னென்னவே
ஒளிகொண்ட நவரத்ன முடிதங்கி
யுறுதுங்க முயரைந்து விதவங்கமாம்

பேராயிரங் கொண்ட முடிமன்னர் வங்கிஷ
பதியாகப் பிறந்த ராச
பெருமையும் உரிமையும் அருமையுங்
கருமையாய்ப் பிறதேசம் சென்றதோ

காராயிரங் கொண்ட பேயிவனே டுற்றதோ
காலன்வந் தணுகி ஞனே
கண்ணையு முகத்தையு மயக்குமூ மத்தையின்
காய்தின் றுமதி யற்றதோ

ஆராகிலு மென்றனது பேச்சினை மறுப்பதற்
காகுமோ நாளை யிவனுக்
கறிகுவேன் மறுபுத்தி மறியல்வைத் தேமிக
வறிக்கை செய்திடு குவீரே.

வசனம் :- அகா கேளும் வீர உக்கிர்ம கொலேச் சேவகரே, நம தாணையை மறுத்து அரசழித்து என்னையிகழ்ந் துரைத்த நீலகண்டனைப் பெலத்த அச்சறுக்கையாகச் சிறையில்வைத்துக் காவல்செய்திருப்பீராக.

சேவகர் வசனம் :- அப்படியே காவல்செய்கிருேம் இராசனே.

## தேவசகாயன் கொச்சகம்

*மாறு†குட மன்னனென்மேல் வாள்‡விதிர்த்து வந்தாலும்
வேறுமிடம் வேணுமுயிர் வேணுமென்று நிற்பேனோ
ஆறுகுடந் தண்ணீரை அன்றுமணப் பந்தரின்கீழ்ச்
§சேறுகுட மாக்கிவைத்த செம்பதமல் லாதினியே.

வசனம் :- அளவில்லாத ஆதிபிதாவின் சுதனே, உமது பாதார விந்தத்திற்கு நமஸ்காரம் சுவாமி!

## சேவகர் தரு

இராகம் : எதுகுலகாம்போதி இராகம் : ஆதி

1. நீலகண்டா நடநடமுன்னே நில்லாதேபோடா — இப்போ
நீநினைத்திடு கருமமுனக்குப் பொல்லாதேவாடா

2. காலமுண்டோ உய்திறமில்லைக் கடுகநடமுன்னே — உன்னைக்
காவல்கொண்டு மறித்திடுவீடிதோ முடுகுதடாவின்னே

3. தம்பிவாடா கதவைத்திறதிற சதியாயிப்போதே — நீயும்
தரியாதேவா நீலகண்டாவுன் விதியதாகாதே

4. வெம்பிவாடா தேகால்துலங்கிடை யேவைத்திடடா — மனன்
மேவியவாய்மையில் நின்றேயுனதுயி ரின்றுபிழைத்திடடா

5. பூட்டுமரத்தின் கதவையிறுக்கிப் போடுபொல்லானை — நாளைப்
பொழுதுமுதித்திடு மளவுமறுக்கை செய்வாய்வல்லானை

6. வாட்டுமிருட்டுப் போய்விடியு மளவும்விழிப்போமே — நாளை
மன்னன்முன்னே கொண்டுசென்று கையளிப்போமே.

வசனம் :- அகா கேளும் நீலகண்டம்பிள்ளாய், எங்கள் அரசன் கட்டளைப்படிக்கு இந்த அறுக்கையான காவலிலே இருப்பாயாக.

## தேவசகாயன் கொச்சகம்

1. மூண்டெழுமக்கினிநரகில் முதன்மைபெறுமலகைகையிற்
பூண்டெமைமீண்டாளப் புவியில்மனுவாய்ப்பிறந்தே
ஆண்டருளுமாளாயை யாயிரத்துச்சின்னமென்னும்
நீண்டகசையடியென் நெஞ்சைவிட்டுநீங்காதே

---

* மாறு — பகை † குடம் — திரட்சி
‡ விதிர்த்தல் — அசைத்தல் § சேறு — தித்திப்பு

2. எப்பொருளுமெப்புவியு மெச்சகமுமெச்சியசீர்
அப்பொருளாயென்று மழியாப்பரம்பொருளாய்
ஒப்பொருவரின்றிநிறை யோராறிலட்சணனும்
முப்பொருளொன்றான முதற்பொருளை நீங்கேனே

3. உண்ணுங்கனியிருக்க உண்ணுக்கனியையுண்ட
பெண்ணின்பவந்தொலைக்கப் பேருலகில் மானிடனாய்
விண்ணுற்றிடுங்கோட்டு வெல்லையில்வந்தோனையென்றன்
கண்ணுமெண்ணும்நெஞ்சுங் கனவிலும்நீங்காதே

4. உடுக்கொண்டிலங்கு முடித்தாயரும்மைமகனேயெனநினைத்து
திடுக்கொண்டெழுவாளுடுருவச் செய்தீரெமையாள்செய்கையல்லோ
நெடுக்கொண்டிருந்தகுருசினிலே நிலைத்தெங்களுக்காயிரண்டுகள்வர்
நடுக்கொண்டிருந்தங்குயிர்விடுத்த நன்றிமறவேன் மறவேனே

## தேவசகாயன் தரு

**இராகம்: பைரவி** **ஏகதாளம்**

1. *அள்ளிக்†கொள்ளையாய்ச்செறிந்த
வெள்ளைப்புள்ளிகொள்ளுகலைதலைமேல் — தோற்றும்
அம்பொற்கொம்பின்மீதிருந்த
செம்பொற்பாதம்நம்பினேன் நம்பினேனே

2. துள்ளித்துள்ளியோடும்பள்ளை
வெள்ளத்தைமேய்ப்போனுள்ளத்தைத்தேற்றி — முன்னாட்
சுந்தரமிகுமிசிறேல்
சந்ததிசிறையைமீட்பித்தோனே

3. அற்பத்தற்பமென்னுநன்மை
நற்புற்றபேர்க்குன்னருள்தந்தாளுஞ் — சோதி
அம்பரசொயம்பரம
ஆறுலட்சணதிரீத்வவேகா

4. கற்பிற்கற்பதாயுதித்த
அற்புதவிற்பன்ன அலங்கார — திவ்ய
கன்னிமரித்தாயேநீயே
இன்னல்தவிர்த்துன்னருள்செய்வாயே

5. வாடைபொங்கஇடியிடிக்க
மழைதுளிக்கக்குளிர்பிடித்தஇரவில் — எங்கள்
வாட்டரவைமீட்டகற்ற
மாட்டகத்தில்வந்துபிறந்தோனே

---

* அள்ளுதல் — நெருங்கல் † கொள்ளை — மிகுதி

6. பீடைபொங்குமாடகூட
சேடகபாடத்தென்றனைநீயும் — விட்டால்
பின்னையாரென்னின்னல்தீர்ப்பார்
கன்னியெனுமன்னையேசொல்வாயே

## ஞானப்பூ கொச்சகம்

சோலையெல்லாம்பூங்கரும்பு சொல்லுவயல்நல்லமந்த்ர
சாலையெல்லாம்அன்னசத்ரம் தங்குபற்பநாபுரம்போய்
மாலையல்லின்முன்னம் வருவேனென்றேயெனெக்குக்
கர்லைசொல்லிப்போன கணவன்வரக்காணேனே

## தரு

இராகம் : பரசு அடதாளம்

1. பொன்னும்நிறமும் பூவும்வாசமும்
பொருளுஞ் சொல்லும்போல் மருவிவாழ்ந்திடும்
முன்னமென்னருந் தலைவனைக்காணு
மோசமேதையோ—இருந்திடும்—வாசமேதையோ

2. வந்த அந்தணர் சாடை கேட்டு
மந்திரிசொல்லுந் தந்திரங்களால்
அந்தஅரசன் இந்தநேரம்
அழைத்தகருமமென்—ஏதாகிலும்—விளைத்தநிருபமென்

3. விரைவோடரசன் விடுத்தசேவகர்
மெத்தச்சினந்து குத்திரத்துடன்
துரைகட்டளையென் றழைத்துப்போயென்ன
சொன்னார்தேறிலேன்—அவர்வரா—தென்னோஆறிலேன்

4. மதிக்குமரசர் துதிக்குமாமுடி
மன்னர்மன்னவ னும்வன்மேந்திரன்
கதிக்குங்கோபச் சதிக்குத்தலைவன்
கலங்கிநின்றுரோ—அவர்செய்த—துலங்கில்நின்றுரோ

5. அனத்துப்பேடையு மினத்துச்சேவலு
மாவிக்கறிவும் போலஎனது
மனத்துக்கதிக சுகத்துத்தலைவன்
வரவுமில்லையே—இனிவர—இரவும்வல்லையே

## இராசன் விருத்தம்

கலங்கிடாக் கடல்சூழ் வையக் காவலர் மேவி நாளும்
நலங்கிடா வெனது வாசல் நண்ணுசே வகரே கேளீர்
மலங்கிடா வென்சொற் றப்பி வருநீல கண்டன் றன்னைத்
துலங்கினு லெடுத்துக் கொண்டு சுறுக்குடன் வருகு வீரே

வசனம் :- அகாகேட்பீராக உக்கிரமகொலைச் சேவகரே, எனது கட்டளையை மறுத்து மறியலிலேயிருக்கின்ற நீலகண்டனை அழைத்து வருவீராக.

சே. வசனம் :- அப்படியே செய்கிறோம் ஐயா.

சேவ. மறுவசனம் :- அகா வாரும்பிள்ளாய் நீலகண்டா, எங்கள் அரசன் உன்னை மறியல்வீட்டால் அழைத்து வரும்படி கட்டளையிட்டார் வருவாயாக.

தேவ. வசனம்:- அப்படியே வருகிறேன் சேவகரே.

## சேவகர் விருத்தம்

*வெறியுலா வெற்றி வாகை வேயும் வர்மேந்திர வேந்தே
அறியலா யெமக்குச் சொன்ன அன்ன கட்டளைக்குச் சென்று
நெறியிலா நீல கண்டன் றன்னையோர் நிமிஷந் தன்னில்
மறியலா லெடுத்து வந்தோம் மன்னனே யறிகு வீரே.

வசனம் :- சரணமே சரணமையா உமது கட்டளைப்படி மறியலிலே இருந்த நீலகண்டனை அழைத்துவந்திருக்கிறோம் ஐயா.

## இராசன் விருத்தம்

காவல னெனது கட்டளை தன்னைக்
கருதியே நீலகண் டாகேள்
கையினல் விபூதி தனையள்ளிக் கொடுபோய்க்
கடுகவே பூசிநீ ராமன்

கோவிலிற் புகுந்துசிறீ ராமன் பதத்தைக்
கும்பிட்டா ராதனை புரிந்து
குருதரு விபூதி துளசிசந் தனங்கள்
குணத்துடன் வாங்கியென் சமுகம்

வாவுனக் கதிக வரிசைகள் தருவேன்
மணிமர கதங்களை யருள்வேன்
வளநக ரினுக்குத் தளகர்த்த னுக
வரிசைகள் தருவனென் னருகில்

---

* வெறி—வாசம்.

மாவலு வுடனே காரியம் பகர
வலியதே சாதிக்கம் நடத்த
வல்லமை தருவேன் எமது தேவரைநீ
வணங்கிட மறுதலி யாதே.

**வசனம் :-** அகா கேட்பாயாக உனக்குச் சம்பத்துவரிசைகளைத் தருவேன், நீ நான்சொன்னபடி மறுதலியாது செய்வாயாக.

## தேவசகாயன் விருத்தம்

மறுதலி யாதோ எனதுடை மனது
வன்புறு ராமனை வணங்க
வளநக ரிலங்கை ராவணன் றனது
மனைவியைப் பிடித்தொரு வனத்தில்

சிறையென விருத்திப் பலவசைப் படுத்துஞ்
செய்தியை ராமன்று னறிந்து
சேனைவா னரத்தைப் படையென நடத்திச்
சென்றிலங் காபுரி யழித்து

திறலுடன் சீதை தனைச்சிறை மீட்டுச்
செங்கையி னுலர வணைத்துத்
தெசதர ராம னிருக்கின்ற நகரிற்
சிறப்புடன் கொண்டுசென் றீருத்தி

அறிவறி யாம லவனுமிஸ் திரியை
அனல்வளர்த் ததனிடை புகுத்து
மறிவழிந் தவனை வணங்கு வனுகி
லதைவிட வசையில்லை மன்னு.

**வசனம் :-** பூச்சக்கிரவாளம் பரலோக பாதாளமென்னுந் திரிலோக கர்த்தரான சருவதயாபர அனந்த நன்மைச் சொரூபியானவரை வணங்குகிறதல்லாது துட்டப் பசாசுகளை வணங்கே னறிவீராக.

## இராசன் தரு

இராகம்: மோகனம் தாளம் : அடதாளசாப்பு

இரா. கூனற்றவளசங்க மாநித்தில மிலங்கு
கோலக்கிரீடதுங்க தாலத்தரசர் வந்து
குறையற்றிறைகள் தத்து முறையுற் றடிபணிந்து
கொடுகத்தனிபுரந்த அரசிற்குடியிருந்த
கொடுவஞ்சக் கடுநெஞ்ச வுனதங்க மிருபங்கு
கொளமுன்ன முளமென்ன களவின்றிவிள்ளாயே

தேவ. மானத்திறநினைந்து ஏனிப்படிமிகுந்து
வாதிக்கிறீர்சினந்து போதிக்கிறீர்மிகுந்து
வடிவக்கலைகொள்ளிந்தை இருபொற் சரணணிந்த
மறுவற்றவளுவந்து தருமெய்த்தகவு மைந்தன்
மனமொன்றியயர்கின்ற திலையென்றனுயிரின்று
மடிகின்றிடினுமுன்ற னுரைநன்றுகொளேனே.

இரா. காவற்பணிபுரித்து ஏவற்றொழின்மறந்து
தேவுக்களையிகழ்ந்து நீகெற்சிதமிகுந்து
கறுவத்துறுமுன்னங்கம் மறுகிக்குருதிபொங்கக்
கடிதிற்றலையரங்க வுறவுற்றவரிரங்கக்
கடிதின்ன முடிவென்ன விதுவென்னநடைபண்ணும்
கரவென்னவருமென்ன வுளநண்ணுறுதோ

தேவ. நீசத்துவ.ரநினைந்து மோசத்தினையுவந்து
நேசத்திடர்மிகுந்து வாசத்திடைபுகுந்து
நிறைவற்றறிவழிந்து மறமுற்றெரியுமந்த
நிரையத்திடையழுந்து மனதைத்தருமுன்*னிந்து
†நிலையங்கடனையின்று நினைகின்றதிலையென்றன்
தலையங்கமிருபங்க துறினுமறிவாயே.

## இராசன் விருத்தம்

அருஞ்சமர்க் களத்தில் வருமரு வலர்க ளணிமணி முடிபடி யுருளப்
பொருஞ்சின முடைய வீரரே யிவனைப் புகலிரு பத்துநர லென்ன
வருஞ்செய மிகுமென் னூரதி காரி மாரிடங் கொடுத்துற வருத்தி
திருந்துபொற் கொலுமுன் மறுபடி யிவனைச் சீக்கரங் கொடுவரு வீரே.

---

* இந்து—இந்துமதம் † நிலையம்—தேவர்கோயில்

**வசனம் :-** கேளும் உக்கிரம கொலைச்சேவகரே, எனதாணை மறுத்து அரசழித்த நீலகண்டனை ஒவ்வொரு அதிகாரிமாரிடத்திலும் கொடுத்துக் கடூரமான ஆக்கினை செய்வித்து அவன் மனநினைவறியத் திரும்பவும் என்னிடம் கொண்டு வருவீராக.

**சேவகர் வசனம் :-** அப்படியே செய்கிறேமையா,

## அதிகாரிமார் வரவு

விரைசெறி மாலை சூடி மின்னிய பொன்னின் *தந்தின்
கரைசெறி கருமுண் டாசு கட்டிநற் கவசம் பூட்டித்
நிரைசெறி தானை மன்னர் நிதம்பணிந் திடுவன் மேந்த்ர
அரசறி நீதி சொல்லும் அதிகாரி மார்வந் தாரே.

## சபைத் தரு

**இராகம் : பியாகடை** **தாளம் : ஆதி**

†மறமோதுவெகுவீரர் போற்றியே—வரு
மன்னன்வன் மேந்த்ரன்சொல் லேற்றியே
அறநீதியுறவாய்மை சாற்றியே—ஊரில்
அதிகாரிமார்வந்து தோற்றினர்

பதியாருமதிதேருநேரியர்—பற்ப
பார்திபனகமகிழ்கூரியர்
அதிகாரஉபகாரசீரியர்—ஊரில்
அதிகாரிமார்வந்து தோற்றினர்

## சேவகர் விருத்தம்

மட்டவிழ் மாலை மார்பன் மன்னன்வன் மேந்திரன் சொன்ன
கட்டளை தனைக்கேள் நீல கண்டனே யுனையிந் நேரம்
முட்டளைத் துலங்கால் நீக்கி முடிவிலாக் கினைசெய் யென்றான்
சட்டென வெழும்பு போவோம் தகுமதி காரி யூர்க்கே.

**வசனம் :-** அகாகேளும் நீலகண்டா எங்கள் அரசன் உன்னை ஒவ்வொரு அதிகாரிமாரிடமுங் கொடுத்துக் கடுமையாய் ஆக்கினை செய்யச்சொன்னார் அதிசீக்கிரமெழும்புவாயாக,

**தேவசகாயன் வசனம் :-** அப்படியே வருகிறேன் சேவகரே.

---

* தந்து—நூல் † மறம்—வீரம்

## தேவசகாயன் கொச்சகம்.

*மந்திதொடரு மதுப்பிலிற்ற வாசமுகையின் மடலொடிந்து
சந்துமகிலும் நெருங்குவெல்லை தனிலோர்மனுவாய்த் தரையில்வந்து
†கந்தினணைந்து கரஞ்சேர்த்துக் கசையினடிபட் டெமக்காகச்
சிந்துமிரத்தத் திருவருளின் செய்கைமறவேன் மறவேனே.

### தரு

இராகம் : இந்துஸ்தான்பியாக் தாளம் : ரூபகம்

அலகிற்சுகரூபா ரூபா—அளவற்றகிர்பாகா ஏகா
அதிசற்குணபூபா-தேவா-அமலப்பத மேதாநீதா

### கொச்சகம்

விலக்காநிற்கு மம்மரத்தின் மேவுங்கனியென் றறிந்துமயற்
கலக்காலருந்து மவரையிருட் கடலாலெடுத்துக் கரையேற்று
மிலக்காலீட்டிப் படுதழும்பு மிருகைத்தழும்பு மெழிற்கமல
மலர்க்கால்களிற் கொண்டிடு தழும்பும் மறவேன்மனதில் மறவேனே.

### தரு

மலைவுற்றிடு‡மருளாலிருளாய் மதியற்றிடுமவராலிவரால்
மனதிற்புரிதுயராலயரா மனமெய்க்குறுமதிதாகதிதா

### கொச்சகம்

மழையுங்குளிரும் வெடுவெடென வாடையடியுங் கொடுகடியும்
விளையும்பெருங் காரிருளில்மனு விலங்குபறவை மரங்களுடன்
தழையுமுறங்கும் நடுவிரவிற்ருனோர் மனுவாய்த் தரையில்வந்து
‡கழையும்பிடித்தெங் களையாண்ட கர்த்தன்பதம் நான்மறவேனே.

### தரு

இலைகொப்படி யொடியாமுடியா இகல்முட்கவை பொடியாமுடியாய்
இலகச்செய்ய நிசமேஅசமே யிடையர்க்குமுன் னீந்தாய்போந்தாய்

### கொச்சகம்

அகங்குப்புற நன்மதியழியு மாதிமனுடர்க் காகவெல்லை
**நகங்குப்புறு மென்பனிக்காலம் நத்தநடுவின் மனுவாகி
இகங்குப்புறமுண் முடியழுத்த எடுக்குஞ்சிலுவைக் கனத்துடனே
முகங்குப்புறவீழ்ந் தெனையாண்ட முதல்வாவுனைநான் மறவேனே.

---

* மந்தி—வண்டு † கந்து—தூண் ‡ மருள்—பேய் ‡ கழை—மூங்கில்
** நகம் — மலை.

## தரு

நிலைபெற்றிடுசரணு‡‡புரணு நிருபற்குலவொருதாய்பெரிதாய்
பெறுமுத்தமகனியார்†தனியார் பிரசப்பதமயரேனயரேன்

## சேவகர் விருத்தம்

சரசமாய் மொழியொன் ஞர்கள் தயங்கவே செயங்கொள் வீர
பரசமேந் திடுமொய் யார பார்த்திபா போற்றி போற்றி
அரசர்கள் மகிழ நீதி யதிகாரஞ் செலுத்து முன்றன்
பிரசமா மலர்ப்பொற் பாதம் பேணிஞேம் போற்றி தானே.

வசனம் :- அதியுத்தம சரோருகபதாம்புயம் சரணமே சரண மையா.

## முதலாம் அதிகாரி கொச்சகம்

வண்*டனுங் குமாலையணி மன்னவனும் வன்மேந்த்ரன்
+மிண்‡டனங்கு வாசலுறை வீரகொலைச் சேவகரே
§விண்¶டனுங்க லாயுடலம் வேர்ததும்ப வேநீல
கண்டனிங்கும் மோடுவந்த காரியமென் சொல்வீரே.

வசனம் :- கேளும் வீர உக்கிரம கொலைச் சேவகரே, நீலகண்டனும் நீங்களும் வந்தகாரியம் நானறியச் சொல்லுவீராக.

## சேவகர் விருத்தம்

மதியாரும் வேணி யானை மறுத்துவன் னெஞ்சு கொண்டு
புதிதாயோர் வேதம் புக்கிப் போம்நீல கண்டன் றன்னை
அதிகோ பத்துடனே யெங்கள் அரசனும் பிடித்துக் கட்டிச்
சதியா யாக்கினைகள் செய்யச் சாற்றிஞ னறிகு வீரே.

வசனம் :- அகா கேளும் ஐயா, நீலகண்டன் எங்கள் அரசனுடைய கட்டளைகளையும் நமது தேவர்களையுமிகழ்ந்து சத்திய வேதத்திற் சேர்ந்ததிஞல் கடூரமான ஆக்கினை செய்யச் சொன்ஞர் அறிவீராக.

அதிகாரி வசனம் :- ஆகா நல்லது. அப்படியா காரியம்.

---

‡‡ புரணம் — பூரணம். † தனி — சுத்தம்

* அனுங்கல்-புலம்பல். + மிண்டு-அடர்த்தல் ‡அனுங்கல்--முட்டுதல்

§ விண்டு — மேகம். ¶ அனுங்கல் — சிணுங்குதல்.

## முதலாம் அதிகாரி தரு

இராகம் : நாதநாமக்கிரியை ஏகதாளம்

1. ஐயையோநீலகண்டா—எங்க
ளாலகண்டன்றன்னைவிட்டிக் கோலமேன் கொண்டாய்

2. மெய்யல்லோவுனக்குரைத்தேன்—உன்னுடலம்
வேறுவேறதாகவிரு கூறிடமுன்னம்

3. எங்கள்வஞ்சிமார்த்தாண்டன் — உளமகிழ
*இந்திரகோவிந்தவர விந்தனையுமே

4. சங்கரனையுங்கைதொழடா—தொழுதால்மிக்க
சந்தோஷமுற்றேரூராளத் தற்திடுவாரே.

வசனம் :- அகா கேளும் நீலகண்டம்பிள்ளாய், உனக்குக் கடின மான ஆக்கினை செய்ய முன்னமே உனது மனநினை வென்னவென்று சொல்லுவாயாக.

## தேவசகாயன் கொச்சகம்

தங்கத் தங்கங் குலாவு தடப்புய வரச னென்னைச்
சிங்கத் தின்முன் னிட்டாலுந் திரிக்குஞ் சக்கரத் திட்டாலும்
அங்கத் தைப்பிளந் துவாளா லரிந்தரிந் தெறிந்திட் டாலும்
பங்கத் தினலகை கைக்குட் பட்டிடே னறிகு வீரே.

வசனம் :- கேளும் அதிகாரியே, நான் பசாசை வணங்குகிறவ னல்ல; உம்மாலடுத்த ஆக்கினை செய்து கொள்வீராக.

## முதல் அதிகாரியுந் தேவசகாயனுந் தரு

இராகம் : கரகரப்பிரியை தாளம் : ரூபகம்

மு. அதி : தார்தலத்தோர்போற்றும்—அரசன்
றனக்கடங்காமலிப்போ
பார்தலமீதினிலே—உனக்கிந்தப்
பாடுவருவானேன்

தே : ஊரதிகாரமுறுந்—துரையே
உரைத்திடு செய்தியைக்கேள்
சீர்பெறுமேகபரன் — திருப்பாதஞ்
சிந்தையில்நிந்தியேனே

---

* இந்திரம்-மாயம்

மு. அதி : சத்தியவேதமதை—மனதிற்
றயவுடனே சொன்னதால்
மெத்தியகோபமது—அனலென
மேவிவருகுதடா

தே : புத்தியில்லாதவனே—யுன்றேவர்கள்
பொல்லாதபேய்கள்மெய்யாய்
சத்திசிவன்மறையை—ஓர்போதும்நான்
தான்வணங்கேனறிவாய்

மு. அதி : வக்கணமாகமெத்த—என்முன்னே
வசைமொழிபேசுகிருய்
இக்கணமோர்நொடியில் – உன்னீரல்
இடுகுவேன்கூழிகட்கே

தே : கூழிகட்கேயிடினும் — எனைத்தான்
கொடுங்கொலைசெய்திடினும்
ஆழியுலகாள்வோன்—தனது
அருளுண்டறிவீரே.

## அதிகாரி விருத்தம்

தெளித்திடு மறைக்குள் மிக்காய்த் தெளிந்திடு மறையை யாருங்
கழித்திடா வண்ணம் போற்றுங் கருதரு சிவன்வே தத்தைப்
பழித்திடு நீலகண்டன் றனைப்பருங் கிடாவி லேற்றி
கிழித்திடுஞ் சூரை முள்ளாற் கிட்டி யாக்கினை செய்வீரே.

**அதிகாரி வசனம் :-** கேளும் சேவகரே, எங்களையும் எங்கள் தேவர்களையுமிகழ்ந்து இராசாவின் கட்டளையைமறுத்த நீலகண்டனைக் கழுத்தில் எருக்கலம்பூமாலை சூட்டி எருமைக்கடாவிலேற்றிச் சூரை முட்கொப்பாலடித்து மிளகுதூளுமிட்டுப் பிரசித்தமாய் வீதிகொண்டுவருவீராக.

**சேவகர் வசனம் :-** அப்படியே செய்கிரும் ஐயா.

**சேவகர் மறுவசனம் :** கேளும் நீலகண்டம்பிள்ளாய் எங்கள் துரை கட்டளைக்கு உன்கழுத்தில் எருக்கம்பூ மாலையுஞ் சூடிச் சூரை முட்கொப்பால் அடிக்கப்போகிரும், இந்த எருமைக்கடாவில் ஏறுவாயாக.

## தேவசகாயன் கொச்சகம்

உக்*கழுதை நம்பியொழியா நரகிலுறும்
மக்க†ளுதை யுண்ணுமல் மானிலமேல் வந்தகர்த்தன்
அக்கழுதை யூர்ந்தா ரதிபாவ மேசுமந்த
இக்‡கழுதை யூர வியலெருமை யாகாதோ.

## தேவசகாயன் தரு

இராகம் : ஏதுகுலகாம்போதி தாளம் : ஆதி

1. கனகமயமொளிர்மோட்சமிருந்து—கனல்நரகக்
கதவடைக்கவருமொருநல்மருந்து
என வுலகிலுயிர்த்தொகைகள்வருந்து – பவமகல
ஏகாவெமக்கிரங்கியருள்பொருந்து

2. சாட்டையுடன் கசையடிகள்பட்டீர் — உலகிலெங்கள்
தமக்காகவுமதுயிரைவிட்டீர்
சூட்டுமுடியரசனெருப்பட்டுப்—படுத்துமிந்தத்
துயர்பொறுப்பேனுமதருளைத்தொட்டு

3. பித்தையருந்தாகமதற்குண்டீர் — உமதுவலம்
பெற்றிருந்தகள்வனையாட்கொண்டீர்
குத்திரமாங்கொலைஞரெனையண்டி — மிகுந்தகொடுங்
கொலைசெயினுமுமைமறவேன்கண்டீர்.

## தேவசகாயன் கொச்சகம்

*தண்††ணீர்மை யற்றவெங்கள் சண்டாளப் பாவவிருள்
‡வெண்¶ணீர்மை யாக்குகர்த்தன் மெய்யிலடி பட்டுமையோ
புண்§ணீர்மை யாக்கும் புதினமறி யாவெனக்கு
உண்ணீர் தவிக்கு துதவுவீர் சேவகரே.

வசனம் :- ஆகா கேளுஞ் சேவகரே தண்ணீர் விடாய்க்குது சற்றே தருவீராக.

---

* கழுது—பசாசு † உதையுண்ணல்—தாக்குண்ணல்
‡ கழுதை — மூடன்
*தண் — குளிர்ச்சி †† நீர்மை — நிலைபரம் ‡ வெண்மை — அறியாமை ¶ நீர்மை — ஒப்புரவு § நீர்மை — குணம்

## சேவகர் தரு

இராகம்: பூரிகல்யாணி ஏகதாளம்

1. எல்லவருங்கேட்டிடுங்கோ தொல்லுலகோரே — அரசற்
கேறுமாறுசெய்யுமிந்தத் தாறுமாறுள்ளான்

2. நல்லதண்ணீராம்மிகுந்த வல்லவன்காணும் — முதுகும்
நாரியுஞ்சோரிசொரியப் போடுபிரம்பால்

1. கட்டியகுதிரைசலம் விட்டகுளத்தில் — தென்னங்
காயுரித்தமட்டையூறுங் கஞ்சல்நீரினை

2. முட்டியொன்றிலள்ளிவாயில் விட்டுவிடடா — இந்தாடா
மூச்சுவிடாதேகுடி நாக் காய்ச்சல்தீரவே

1. தசைதெறிக்கப்போடுபாரக் கசைகளினுலே — ரத்தச்
சாறும்நரம்புந்தெறிக்கப் போடுபிரம்பால்

2. அசைவில்லானமுளைகயில்லான் ஆகண்ணீரில்லான் — அந்த
அதிகாரிமுன்கொண்டுசெல்லுவோம் சதியதாகவே.

வசனம் :- கேளும் பிள்ளாய் உனது தாகமடங்கும்படி தென்னம் மட்டை ஊறிய சிறுகுளத்தில் சேற்றுத்தண்ணீரிருக்குது குடித்துக்கொண்டு அதிகாரியின் வீட்டுக்குச் செல்வோம் வருவாயாக.

## தேவசகாயன் கொச்சகம்

கொத்துண்ட ரத்தங் குமுறவடி பட்டமெய்யிற்
பொத்துண்ட கண்ணுடைய பொல்லான்கை வல்லயத்தால்
குத்துண்டு மங்கவன்றன் கோலவிழி யீந்தகர்த்தன்
பித்துண்டார் மட்டை பிழிசாற தாகாதோ.

வசனம்:- கேளுஞ்சேவகரே ஆண்டவர் பாடுபடும்போது தாகத்துக்குப் பித்துஞ் சிலுக்காவுமுண்டாரே. ஆனுல் இப்போது எனக்குத் தருகிற தண்ணீர் நல்லது தருவீராக.

சேவகர் வசனம் :- ஆனுலிருக்கட்டும் போவோம் வருவாயாக.

## தேவசகாயன் கொச்சகம்

முத்தனைய வெண்குடைசேர் முன்னுன்கு மன்னர்வங்கிஷ
மத்தனையும் போற்று மனேகநன்மை யாம்ஞான
வித்தனைய கன்னியென்னும் மின்னனையார் பெற்றெடுத்த
கத்தனையல் லாது கணத்தையினிப் போற்றேனே.

+மோட்டுக் கிடாவாம் முரணெருமை மீதேற்றி
நாட்டுக் கடாத நசைசெய் தடித்திடினும்
*வீட்டுக் கடாதவெறி வேம்பே யெறிவலையிற்
பூட்டிக் கொடாதருட்செய் பொன்னம்பரப் பொருளே.

## சேவகர் கொச்சகம்

முறுகுகருங் கோட்டு முரணெருமை மீதேற்றிச்
சிறுகுகருஞ் சூரைமுள்ளாற் சின்னபின்ன மாயடித்தோம்
இறுகுகருங் கல்லுநெஞ்சன் யேசுவென்று சொன்னதல்லால்
மறுகிமன தச்சமின்றி வந்தா னறிவீரே.

**வசனம் :-** கேளுமையா உமது சொற்படி எருக்கலம்பூ மாலையுஞ் சூடி எருமைக் கடாவிலேற்றித் தேசப்பிரசித்தமாய டித்து வந்த இடத்தில் யாதொரு மனக்கலக்கமுமற் றுச் சத்தியவேதத்தைத் தொழுகிருன் அறிவீராக.

## அதிகாரி கவி

கடங்கிடா வடித்தே யூர்ந்தும் காசினி யெங்கும் போற்ற
மடங்கிடார் மகுடஞ் சிந்தும் வன்மேந்த்ர மன்னன் சொற்கே
யிடங்கொடா னின்ன மின்னம் யான்செய் யாக்கினைக் குமிப்போ
தடங்கிடான் கொடுபோ மற்ற அதிகாரி யிடத்திற் ருனே.

**வசனம் :-** அகா கேளுஞ்சேவகரே, என்ன ஆக்கினை செய்தாலும் இவன் ஒன்றுக்கும் அஞ்சாமலிருக்கிருன். இரண்டாம் அதிகாரியிடங்கொடுத்து ஆக்கினை செய்விப்பீராக.

**சேவகர் வசனம் :-** கேளும் நீலகண்டம் பிள்ளாய், உன்னை இரண் டாம் அதிகாரியிடம் கொண்டுபோவோம் வருவாயாக.

## தேவசகாயன் கொச்சகம்

தினக்கொண் டிட்டுநற் கனியிருக்கத் தின்னுக் கனியைத் தின்றவர்கள்
தனக்கங் கடரும்பவந் தொலையத் தானேர் மனுவாய்த் தரையில்வந்து
சினக்குங் கொடியகசை யடியாற் சிந்து மிரத்தத் திருப்புயத்திற்
கனக்குங் குருசினுடன் நடந்த கருணை மறவேன் மறவேனே.

**சேவகர் வசனம் :-** அதிக பூரண மகாவஞ்சிமார்த்தாண்டனது அதிகார துரையே, சரணமே சரணமையா.

---

\+ மோடு — மூடத்தனம் * வீடு — மோட்சம்

## இரண்டாம் அதிகாரி விருத்தம்

போர்ப்புலி யேற்றின் முன்னே புகுந்த மான்கலை யேபோல
சீர்ப்புறு முடலஞ் செந்நீர் சிந்திட நீல கண்டன்
வேர்ப்புறு முகத்தி னேடு மேவச் சேவகரே நீங்கள்
ஆர்ப்புற நடந்து வந்த அதிசய முரைசெய் வீரே.

வசனம் :- அகாகேளுஞ்சேவகரே, நீலகண்டனும் நீங்களும் வந்த காரியமென்ன சொல்வீராக.

## சேவகர் கவி

சங்கரன் றனைப்பழித்துச் சத்திய வேதத் துள்ளாய்
எங்கள்மன் னவன்றன் சொல்லை ஏற்றிட மறுத்த தாலே
அங்கவன் றன்னை முன்ன ரதிகாரி மிக வருத்தி
இங்குன் றனிடம் விடுத்தா ரிவனை ஆக்கினை செய்வீரே.

வசனம் :- அகா கேளுமையா, இதோ வந்துநிற்கிற நீலகண்டன் சத்திய வேதத்திற்போய்த் தமிழ்மறையை நிந்தித்ததினுல் இராசன் ஆக்கினை செய்யும்படி முதல் அதிகாரியிடமாகக் கொடுத்து அவர் ஆக்கினை செய்து இப்போது உம்மிடம் ஆக்கினை செய்யும்படி அனுப்பினுர் அறிவீராக.

## இரண்டாம் அதிகாரியுந் தேவசகாயனுந் தரு

இராகம் : பியாகு — தாளம் : ஆதி

அதி : வாட்கொலைக்கு மலைநிகர்க்கு
மாட்கொலைக்கும்நிகரொருவரில்லா—எங்கள்
*வண்‡டமிழ்மார்த்தாண்ட கண்டனுக்கென்னென்ன
மிண்டுசெய்தாய்நீல கண்டாஎனக்குச்சொல்வாயே

தேவ : †காழ்க்கொலைசெய் திடுநெருப்பில்
வீழ்க்¶குலைநெய்போலவுந்தாக்கினரே—என்னைக்
கட்டியிழுத்திடத் துட்டர்கைக்கேமன்னன்
திட்டமதாய்விட்ட கட்டளை நானறியேனே

அதி : காலகண்ட மாகவந்த
நீலகண்டா ஆலகண்டனுணை—யுன்றன்
கள்ளமும்ராசன்செய் வெள்ளமும் நீ சொன்ன
குள்ளமும்விட்டெனக் குள்ளபடிசொல்லுவாயே

---

* வண்டு—குற்றம். ‡ அமிழ்தல்—தாழ்தல்
† காழ் — குற்றம் ¶ குலைநெய் — தெங்கின்நெய்

தேவ : கோலகண்ட மெனத்தாலங்
கொண்டவதிகாரவுபகாரா—நான்செய்
குற்றமஞ்ஞானத்தை விட்டுமெய்ஞ்ஞானத்தை
பெற்றதினுல் மன்னர்க் குற்றபழியறிவாயே

அதி : பூவிலங்கு புயமலைமேல்
* மாவிலங்குமாத்தாண்டற்கிணங்க — நீயும்
பொல்லாதசத்திய வேதத்தை விட்டிப்போ
எல்லாரும்போற்றிடும் நல்லதமிழ்மறைவாராய்

தேவ : மாவிலங்க மாயெனக்கிப்
போவிலங்கிட்டடித்துயிர்மாய்த்தாலும் — உங்கள்
வஞ்சப்பசாசினை நெஞ்சிற்கொள்ளேன்காய
மஞ்சுகொள்வாரெனக் கஞ்சல்செய்தாற்றிடுவாரே.

## இரண்டாம் அதிகாரி கொச்சகம்

†தண்ணமின்னுங் கையுடைய தற்பரனைப் போற்றுதார்
கண்ணுமுண்ணும் நாவுமில்லாக் காட்டகத்திற் கட்டையல்லோ
விண்ணுமண்ணுங் கைதருமோ மெய்தருமோ ஐயோவுன்
எண்ணமென்ன நீலகண்டா எனக்கூறியச் சொல்வாயே.

**வசனம்** :– விபரீதபுத்தி நாசகாலமாய் முடியும். உன் மன எண்ணத்தை மறையாமல் சொல்லுவாயாக.

## தேவசகாயன் ஆசிரிய விருத்தம்

முன்னை நாளுதவு மன்னைதந் தையரு
முழுதுறு சுற்றமு மிறந்தார்
மூதுல கெங்கு மரசுகொண் டிருந்த
முடிமன்ன ரெத்தனை யிறந்தார்

பின்னைநாட் பிறந்தோ ரெத்தனை யிறந்தார்
பிறந்துளோ ரிறந்திடா திருக்கப்
பெற்றிட முடியா தாகையால் நானிப்
பிரபஞ்ச வாழ்வினை விரும்பி

வென்னரக த்தில் வீழ்வது மில்லை
வேந்தன் சொற்கேட்ப துமில்லை
வீணுறு குணுங்கிற் பூணுவ தில்லை
விழுமுடற் பேணுவ தில்லை

---

* மா — வலி † தண்ணம் — மழு

அன்னை மாமரிய தருதிருச் சுதனுர்
அடியிணை மறப்பது மில்லை
ஆவிபோ மளவு மஞ்சுவ தில்லை
அடுத்த ஆக்கினைகள் செய்வீரே.

வசனம் :- கேளும் அதிகாரத்துரையே, உயிர்கொண்டதெல்லாம் அழிகிறதேயன்றி அழியாதொன்றுமிருக்கிறதில்லை. ஆகையால் உங்கள் அரசன்சொற்கேட்டுப் பரகதியை யிழந்து நரககதியைத்தேடுவதில்லை. நான் பலதேவரை யும் வணங்குகிறவனல்ல; உம்மாலடுத்த கருமத்தை நடத்திக்கொள்வீராக.

## அதிகாரி விருத்தம்

உரைத்திடு மொழியைச் சேவகர் கேளீ
குறுநீல கண்டற்குக் கடலிற்
கரைத்திடு புளிபோ லாச்சுதென் சொல்லுக்
காவல னுரைப்படி வாயால்
நுரைத்திடு சளிக ளொழுகிட மிளகின்
நுண்பொடி தன்னையிட் டுதிரம்
இரைத்துடல் வழிய வடித்துஆக் கினைசெய்
திவன்றனைக் கொடுவரு வீரே.

வசனம் :- கேளும்வீரஉக்கிரமக்கொலைச்சேவகரே! இவனை நாங் கள் எப்படிவருத்தினுலும் சத்தியவேதஉண்மையிலே பிடிவாதமாயிருக்கிறதல்லாது எங்கள் சமயத்துக்குள் ளகப்படுகிறதாய்க் காணவில்லை. ஆகிலுமின்னம் சூரை முட்கொப்பாலடித்து மிளகுதூட்பொடிபோட்டு மன நினைவறிந்து வருவீர்களாக.

சேவகர் வசனம்:- அப்படியே செய்கிறேம் அதிகாரியே.

## தேவசகாயன் தரு

இராகம்: சங்கராபரணம் அடதாளசாப்பு

1. முதலாமனுடர்க்கா கியசற்ப பவமுற்ற
வதெலாமகலக்கற் புறுமிக்கற்புததிவ்ய
*அனமென்ன வருமன்னை தருகன்னி மரியினன்
னகளங்க மகனென்ன வருமெங்கள் யேசே —
அதமேவைசெய்பவங்கட்காகவே

---

* அனம் — அன்னம்மாள்.

2. பதமாமலருக்கப் புறமுற்றுக்களைபெற்று
பலதேவதைகைக்குட் படர்பட்டுநிலைகெட்டு
†பத‡சங்க +வெறி¶பொங்க நகர்தங்கு வதின்முன்முள்
நிறைகொம்படி யதுகொள்வது மிகநன்றறிவீரே —
ஆறுலட்சணதிரீத்துவஏகனே.

3. கதமாகியதுட்டர் கடிதுக்ரமமொடுகட்டி
மத*வாசியும்††விட்ட வசைபட்டுஇசைகெட்டு
வளர்துங்க குரிசின்கண் ணிடைதங்கு பரனெங்கள்
பவமங்க விதமங்கு படியிங்கறிவீரே —
அனவரதவிரதவருளாளியே

4. பரராசர்கள்வந்து பணியுத்தமவிதபற்ப
புரராசனுமுக்கிர்ம முடன்மிக்கவிதனங்கள்
புரமஞ்சக் கரமஞ்ச உரமஞ்சச் சிரமஞ்சப்
‡‡புலாலஞ்சிந் திடக்கொல்லினும் மறவேனுன்பாதம் —
சித்தமறவாவாதிகர்த்தனே

5. உரமாகியசால்மோ னும்பர்கையெனவுற்று
வரமாகியகர்த்த னின்னன்மகவெனப்பட்டு
மதிதங்கு பதவிங்கிர்த வதிதுங்க கதிரங்க
மருள்துன்றிடு மிருள்வென்றிட வருளென்றுமென்றே—
மறவாதென்னுள மரியதாயரே

6. இருகால்கரநெக்கி யுருவக்குருசறையுண்டு
பெருவானினிற்கண்வைத் திருந்தேனதுபாவக்
கறைதுஞ்ச விரைகஞ்ச மலர்தஞ்ச மருவுஞ்செஞ்
சரண்தந்து அரண்தந்திரு கரந்தந்தெனைமீள—
உனதுகடனெனதுசருவேசனே

**சேவகர் வசனம் :-** கேளும் அதிகாரத் துரையே, நீர் சொன்னகட்டளைப்படிக்குச்சூகைமுட்கொப்பாலடித்து மிளகுதூட்பொடிபோட்டுத்தேசப்பிரதட்சணஞ்செய்து வந்தோம். அவன் யாதொரு கவலையுமின்றித் தங்கள் தெய்வத்தை மன்ருடிக்கொண்டிருந்தான் அறிவீராக.

---

† பதம்—வேஷம் ‡ சங்கம்—கூட்டம்
+ வெறி—பேய் ¶ பொங்கல்—கோபித்தல்
* ஆசி—நிந்தை †† விட்டல்—விள்ளல் ‡‡ புலாலம்—இரத்தம்

## இரண்டாம் அதிகாரி ஆசிரிய விருத்தம்

நீணிலந் தனிலே யிவன்றனைப் போலே
நெஞ்சில்மா வயிரமுற் றவனை
நேமிசூ ழுலக மெங்குநான் காணேன்
நிசமிது விவனுடை சரீரம்

காணிடி லொளிருஞ் செம்பதை யுருக்கிக்
கருவில்வார்த் துடலெடுத் தவனோ
கல்லதைப் பிளந்து உளியினுற் றிருத்திக்
கற்சிலை வடிவெடுத் தவனோ

சேணள வெழும்புந் தீயதை யவிக்கத்
திடனுடு வித்தை கற்றவனோ
செங்கதி ரெறிக்கும் வெயிலனு காமற்
செயலுள தொழிலறிந் தவனோ

வீணிலே யிவனை யிதைவிட வதிக
வினையங்கள் புரியினு மசையான்
விரைவுட னிவனை மூன்று மதிகாரி
வீட்டினிற் கொடுசெல் லுவீரே

**வசனம் :-** கேளும் வீரஉக்கிர்ம கொலைச்சேவகரே, இவனை நான் என்னஆக்கினைசெய்தாலும் இவன்மனது இளகாது போலிருக்கிறது. ஆகையால் இவன்தசை துண்டுதுண்டாய்த் தெறிக்கும்படியடித்து மூன்றும் அதிகாரியிடங் கொண்டுசெல்வீராக.

**சேவகர் வசனம்-:** அப்படியே செய்கிறோம் ஐயா.

**சேவகர் மறுவசனம்:-** அடேவா சற்றுங் கிறுங்கிருயில்லை, நாங்கள் தருகிறதைப் பெற்றுக்கொள்வாயாக.

## தேவசகாயன் கொச்சகம்

உட்*சாட்டுச் சீஷர்களி லொருசீஷன் கூலிபெற்றுக்
†கட்‡சாட்ட அண்டார்தங் கையிலகப் பட்டுஐயோ
எட்§சாட்ட இடமில்லையென் றிரங்கவெமக் காய்க்கொடிய
முட்சாட்டைப் பட்டுடல மூழ்குருதி மறவேனே.

---

* சாட்டு—ஒப்பிக்கை † கள்—பொய் ‡ சாட்டல்—சாட்டிவிடுதல்
§ சாட்டல்—சாரப்பண்ணுதல்.

### சேவகர் விருத்தம்

ஆன்றநஞ்சுகுக்கும் வளையெயிற்றரவி னரும்பொறிதன்பதநெரிய
வூன்றியேயவனி முழுவதும்புகழ ஒருகுடைநிழற்றி யெந்நாளும்
தோன்றுசீர்வஞ்சி வன்மேந்தரராயன் சொற்படியதிகாரஞ்செலுத்தும்
மூன்றெனவுரைக்குமதிகாரத்துரையே முதல்வா நின்னடிபணிந்தோமே

வசனம் :- பற்பநாதபுர மகராச வஞ்சிமார்த்தாண்ட வன்மேந்திர ராசன் வாசற்பிரதானியாகிய மூன்றும் அதிகாரத் துரையே சரணம் சரணமையா.

### மூன்றும் அதிகாரி கொச்சகம்

சந்த விந்தப் புயத்துத் தாரார் வன்மேந்த்ர மன்னன்
சொந்த வந்த வாசல்தனிற் றேன்று ரண்டாம் மந்திரியாய்
வந்த இந்த நீலகண்டன் வடிவி னடிபட் டுதிரஞ்
சிந்த வந்த செய்தி தன்னைச் செப்புவீர் சேவகரே.

வசனம் :- கேளும் சேவகரே, நீங்களிருபேரும் நீலகண்டனுமாய் வந்தசெய்தி நானறியும்படி சொல்வீராக.

### சேவகர் விருத்தம்

குறுகிய புத்தி கொண்டு கொற்றவன் வார்த்தை மீறித்
தறுகணன் போல வீனச் சத்திய வேதம் புக்கி
அறிவற நடந்தான் மற்ற அதிகாரர் வருத்தஞ் செய்தும்
நெறிபிச கிடேன்நா னென்றான் நின்னிடங் கொடுவந் தோமே

வசனம் :- கேளும் எங்கள் அதிகாரத்துரையே, நமது ராசன் கட்டளையைமறுத்துச் சத்தியவேதத்துளாகித் தமிழ் மதத்தைப் புறம்போக்கினபடியால் முதலதிகாரியும் இரண்டாமதிகாரியும் ஆக்கினைசெய்தும் இவன் அசை யாததினல் உம்முடம் அனுப்பினர் அறிவீராக

### மூன்றும் அதிகாரி ஆசிரிய விருத்தம்

இறக்கவென் முன்னய் வருநீல கண்ட
னெனும்பிள்ளை யேயுரைத் திடக்கேள்
ஏந்தல் கட்டளையை மறுத்துநீ யிருக்க
வியல்பல்ல நமதுராச் சியத்தில்

கறக்கின்ற பசுவுங் கற்பனை கேட்கும்
காகமும் பாலருந் தாது
கதிரவ னெளிக்குங் கடல்முழங் காது
கடும்புலி யிரைநுக ராது

பிறக்குங்கைக் குழந்தை முலைகுடி யாது
பேயதும் பயந்துதா னேடும்
பிருதுவி மனுடர் மறுமொழி யெதிர்த்துப்
பேசவும் நாவசை யாது

உறுக்கின்ற மலையு மடியது பேயரும்
உலகெழு புவனமுங் குலுங்கும்
உனதுடை மனது வைரத்தி லதிக
வைரமாந் திருந்திட லரிதே

**வசனம்** :- அகா கேளும் நீலகண்டா, சேடன்முடியசைந்தாலும் மகாமேரு பொடிபடுகினும் உன்னுடைய மனது அசையாதுபோலிருக்கிறது. உன்மனநினைவென்ன சொல்லும் பிள்ளாய்.

## தேவசகாயன் ஆசிரியவிருத்தம்

காரீயம் பகரென் றரசனு முரைத்த
கட்டளை தனைமறுத் தேனே
கனபடை யெதிர்த்த போதெதி ராமற்
கலங்கிப் பின்வாங்கி நின்றேனே

பாரதை யர்ளு மரசன்சொல் லகற்றிப்
பகையொடு நடந்துகொண் டேனே
பட்டண முழுதுங் குடிகளைக் கெடுத்துப்
படுகொலை களவுசெய் தேனே

வீரியத் துடனே மணியங்க ணடத்தி
வெகுபணங் களைப்பறித் தேனே
விரிவுள்ள கோட்டைக் கதவைத் திறந்து
வினைஞரை வரவழைத் தேனே

ஆருரை மறுத்து மனைத்தையும் படைத்த
அற்புதன் கற்பனை தன்னை
அடியனும் மறுத்தல் தகவல் லவேயூ
ரதிகாரி யேயறி வீரே.

## தர்க்கத் தரு

**இராகம் : ஆனந்தபைரவி** **ஏகதாளம்**

**அதி.** சொல்லரியநீலகண்டா வல்லமதியாணதோழா
துரைதனக்குமுன்றனக்கும் வினைவருவதேதோ

தேவ. நல்லமதிபேசுகின்ற வல்ல அதிகாரியாரே
நாடுதனிற்றுரைதனக்கொரு கேடுகள்செய்தேனே

அதி: வேதமென்றும் போதமென்றும் விமலநாதனொருவனென்றும்
பாதகமாய்த்தேவர்களைப் பழுதுசொல்லலாமோ

தேவ. ஆதிசருவேசன்மறை யானதைநானோர்மனதாய்
அஞ்சலித்துநிற்பதல்லா லுன்சொல்லினைக்கேளேன்

அதி. என்னவினைசெய்திடினு முன்னைவினைசெய்வதற்கு
ஏலுமடாநீலகண்டா தாறுமாறுவேண்டாம்

தேவ. சொன்னசொற்றவறிடாத மன்னனதிகாரியேநீ
என்னவினைசெய்திடினு மேகனருளுண்டு

அதி. மெத்தமெத்தவேதுணிந்து புத்திமெத்தப்பேசுகிறாய்
பித்தனேயெனதுகோப மெத்தமிஞ்சுதுபாராய்

தேவ. எத்தனைவருத்தமெனை இத்தரையிற்செய்திடினும்
ஏத்தியேபொய்த்தேவர்களைத் தோத்திரஞ்செய்யேனே.

## அதிகாரி சந்தவிருத்தம்

அந்தநாளில் நாம்வணங்கி ஆசரித்த தேவனை
இந்தநாளில் நீதொழா திருப்பதென்ன நீதியோ
எந்தன்நெஞ் சகத்துவேக மேறியாக மீறினல்
உந்தன்நெஞ் சதைப்பிளந் துயர்கழுவி லேற்றுவேன்.

## தேவசகாயன் விருத்தம்

நெஞ்சதைப் பிளந்தெனை நெடுங்கழுவி லேற்றினும்
பஞ்சபாத கர்கள்மிக்க பாடுகள் படுத்தினும்
துஞ்சியே யுயிர்த்தஞான சோதியேசு நாயகன்
இன்சொல்லான சத்யம்விட் டிழந்துபேயை நம்பிடேன்.

## அதிகாரி ஆசிரியவிருத்தம்

தீர்க்கா யகத்தில்வச் சிரமுற்று எட்டெனுந்
திசைமுட்ட வேயகன்று
திட்டார்ந்த மாயுயர்ந் தட்ட வட்டத்திற்
செறிந்துலகு திக்கிட்டிடப்

பார்க்கு ளூடுருவி வேரிட்டுப் பலத்தகற்
படுமலைக ளலைவுபடினும்
பட்டடிகள் மேலடிகள் பட்டுதிர மோடமிகு
பாடுபட் டலைவிலாத

மூர்க்கனிவ னென்றுக்கு மசைவுரு னிசைவுருன்
மொழியு முரைகளில் நசையுருன்
முன்னுமிவ னுக்குச்செய் யாக்கினை கடம்மிலும்
மும்மடங் காகநீங்கள்

கூர்க்கொள் முட்கொப்பா லடித்துத் துடித்திடக்
கொடுமிளகு தூளுமிட்டுக்
கொடியஆக் கினைசெய்து நாலென்னு மதிகாரிமுன்
கொண்டுசெல் லுவீரே.

வசனம் :- கேளும் சேவகரே, நான்சொன்னபடிசெய்து நாலாமதி காரிமுன் கொண்டுசெல்லுவீராக.

சேவகர் வசனம் :- அப்படியே செய்கிறோமையா.

## சேவகர் கொச்சகத் தரு

### கொச்சகம்

மார்பைப்பார் நெஞ்சின் வடிவைப்பார் கந்தரத்தின்
நேர்வைப்பா ரொய்யார நெளிப்பைப்பார் நீலகண்டா

### தரு

இராகம் : பந்தவராளி தாளம் : ஆதி

பார்பாரடாதுரை கோபமடா—வாடா
பாடாஉனக்கு இறு மாப்பென்னடா
மாயாதகப்பழி போகாதடா—எங்கள்
மன்னதிகாரிமுன் செல்லுவோம்வாடா

### கொச்சகம்

சாலமுரைத்தான்தேவர் தன்னை நகைத்தான்ராசன்
சீலமழித்தானிரத்தஞ் சிந்தநினைத்தானிவனே

### தரு

நீலகண்டாவுரை வேறுமுண்டோ—நெஞ்சில்
நினைவென்னடா சொல்ல மறைவென்னடா
ஆலமுண்டானை நீ தொழுபோடா—அல்லால்
ஆக்கினையதுபடு வாய் வாடா.

13

## தேவசகாயன் தரு

**இராகம் : தேசிகதோடி** **தாளம் : ரூபகம்**

1. பொன்னெனும்வானும் பூவெனும் புவியையும்படைத்து
இன்னும் பூவினில்மனுவாய் வந்து மேவியபரனே

2. மின்னெனுமகமும் பொன்னென விளங்கியமுகமும் — சோர்ந்து
விழுவதுபெரிதோ உயிரந் தழுவதுமரிதோ

3. கங்கங்கள்சூழ அங்கங்கள் களத்தினில்வீழச் — சேவகர்
கட்டியடித்தாலும் மன்னனென்னை வெட்டிமுடித்தாலும்

4. சங்கங்கொளுலகை யரசெனத் தவறுசெய்யலகை — கையாற்
றுனைமைமீள வருமெந்தை தாளிணைமறவேன்

5. கண்கண்ணீர்சொரிய என்னிரு கரங்களும்நெரியப் — பிடித்துடல்
கனசோரிவிரிய மிளகுதூள் கனலெனவெரிய

6. தண்கண்ணீரில்லார் சேவகர் தான்மிகுபொல்லார் — என்னைத்
தவறுசெய்தாலும் என்மன நிலைதவறேனே.

## தேவசகாயன் கொச்சகம்

தாப்பிட் டெமக்காய்த் தரையில்வந்த உம்மை ஒல்லார்
காப்பிட் டிழுத்துக் கழுக்குரு சேற்றும் போது
சேப்பிட்ட மெய்யுதிரஞ் சிந்திட வானம் பார்த்துக்
கூப்பிட்ட சத்தக் குறிப்பென் னுளம்நீங் காதே.

## சேவகர் தரு

**இராகம் : கேதாரகௌளம்** **அடதாளம்**

1. தந்தரமாய்ச்சாலம் பகர்ந்தாய்—பொல்லாச்
சத்திய வேதத்துட்புகுந்தாய் — இப்போ
சுந்தரமன்னன் சொல்துறந்தாய் — உனைச்
சூழ்ந்துதடா வினையறிந்தாய்

2. விளக்கமாயெவர்களுமடக்கம் — எங்கள்
வேந்தனுமென்கைக்குளடக்கம்
அளப்பல்லஎனக்கேதுந்தாடா—அல்லால்
அதிகாரிமுன் செல்வோம்வாடா

1. குறுகுறென்றுவிழியாதே—உன்றன்
கோலமெனக்கொழியாதே
அறிவின்றித்தமிழ்பழியாதே—மெத்த
ஆரம்பமாய் நெளியாதே

2. அரிமுன்னேகரிகள் நின்றிடுமோ — புலி
யதுமுன்னேபுருவைசென்றிடுமோ
எரிமுன்னேயிலவம்பஞ்சுறுமோ — இப்போ
என்னசொன்னாலும் நீ பெறுமோ.

## நாலாம் அதிகாரி வெண்பா

சொல்லுவீர் சேவகரே சுந்தரமா மன்னனுக்கு
நல்லமதி மந்திரியாய் நாடோறும்—வல்லமைசேர்
நீலகண்டன் ருனும் நிகழ்த்தரிய பாடுபட்டுக்
கோலம்வே றுனதென்கூறீர்.

வசனம்:- கேளும் சேவகரே நீலகண்டனுடைய அவயவங்களெல்லாம் வேறுகூருயிருக்கிறதென்ன சொல்லுவீராக.

## சேவகர் கலிப்பா

பாலதா மொழிப்பங் காளனே விட்டுப்
பண்பதாய்க் கத்தன் றன்பாத மேதொழும்
மாலதாகிய நீல கண்டன் றன்னே
மன்ன ஞகிய வன்மேந்திர ராசன்ருன்

மேலதா கியவெங் கோபந் தன்னினல்
மிகுந்த ஆக்கினே செய்தடங் காததால்
நால தாமதி காரியே யாக்கினே
நல்கு மென்ன நவின்ரு னறிவிரே.

வசனம்:- கேளும் அதிகாரத்துரையே, சத்தியவேதத்திற்புகுந்த இந்த நீலகண்டனே ஒவ்வொரு அதிகாரிமாரிடத்துங் கொடுத்து ஆக்கினே செய்வித்தும் அடங்காததினல் உம்மிடம் அனுப்பினர் அறிவீராக.

## நாலாம் அதிகாரி ஆசிரிய விருத்தம்

நடந்திடு முயிரும் பறந்திடு முயிரும்
நானிலத் தூர்ந்திடு முயிரும்
நாலுகால் கொண்டு தவழ்ந்திடு முயிரும்
நாசிகண் செவி முதலாகி

அடர்ந்திடு முயிரு மதிற்சிறி தாகு
மாவியும் பூவின்மே லொருநா
ளாகிலும் வாழ வேணுமென் றெண்ணி
ஆருயிர் பேணியே யமர்வார்

கடந்தமெய்ஞ் ஞான கத்தன்றன் பதத்தைக்
கருதிய நீலகண் டாகேள்
காவலன் சொன்ன கட்டளை மறுத்துக்
கனவின முளதையும் வெறுத்து

தொடர்ந்திடு பித்த குணத்தர்போ லுயிரைத்
தொலைவுசெய் யாமலே யரசன்
சொன்னசொற் கேட்டு வாழ்ந்திடுன் றனக்குச்
சொன்ன நன்மதி யறிவாயே

## தேவசகாயன் ஆசிரிய விருத்தம்

பொன்னிருந் தென்ன பூவிருந் தென்ன
பூவின்மின் ஞரிருந் தென்ன
புரவிதேர் சிவிகை பரிகரி காலாட்
புரவல ராயிருந் தென்ன

என்னதோ ராவி தானிருந் தென்ன
யினங்கன மாயிருந் தென்ன
எத்தனை சமயந் தானிருந் தென்ன
இரும்புய வலியிருந் தென்ன

தன்ஞெரு தேவ வுருவினை விடுத்துத்
தரையினில் மனுவுரு வெடுத்துச்
சரணமா மலரு மெமக்காக யூதர்
தமதிடங் கொடுத்தகை மலரும்

பன்னிரு மன்னர் தருரூ சமலரும்
பரிந்தென் நெஞ்சிருந் திடவேணும்
பசாசெனு நஞ்சை யிருத்திடேன் நெஞ்சிற்
படுத்திடு மடுத்த ஆக்கினையே.

## நாலாம் அதிகாரி ஆசிரிய விருத்தம்

அரண்மனை தனிலே யரசனின் கரும
மதிதிற மாகவே பார்த்தாய்
ஐயையோ நீல கண்டனே யுன்ற
னறிவுகே டானதே தறியேன்

பரமனுன் றலையி லெழுதின வெழுத்தோ
பார்த்திபன் மொழிதனை மறுத்து
பரிகரி சிவிகை கனபரி சதிக
பாக்கியங் களையற வெறுத்தாய்

புரவல னருகிற் றளகர்த்த ஞகப்
புகழ்பெற விருந்ததை யிழந்தாய்
புவிதனி லுனது மனைவியை மறந்தாய்
பொன்னவ மணிகளை யிழந்தாய்

தரைதனி லரச னருளுகட் டளையைத்
தயவொடு கேளுமே லான
சதிமத மதனை விடுவுனக் கதிக
தண்டிகை வரிசையுந் தருவார்.

## தேவசகாயன் ஆசிரிய விருத்தம்

தண்டிகை யேறி யுலகதை யாண்ட
தலைவரு மரணம தானுர்
சங்கையாய் மதிமந் திரிகளா யிருந்த
சகலருந் தரைதனி லிறந்தார்

எண்டிசை யறிய மிகுசெல் வமாக
இருந்தவ ரிரப்பவ ரானுர்
இடமுள வீடரண் மனைதனி லிருந்தோ
ரிடுங்குடில் தனிற்கிடந் திறந்தார்

மண்டலத் தல்ர்சேர் மெத்தையிற் கிடந்தோர்
மண்ணிற் கிடந்துருண் டழிந்தார்
மதகரி யானை மீதினி லிருந்தோர்
வலுவிலங் கினிற்கிடந் திறந்தார்

பண்டவ ரிருந்த வரண்மனை யெங்கே
பரிகரி சிவிகை களெங்கே
பார்தனை யாண்ட பவுள்சுக ளெங்கே
பரிசளிந் ததுமறி யாயோ.

## அதிகாரி ஆசிரிய விருத்தம்

பண்டுமுன் னிவனைப் படைத்திடும் பிரமன்
பளிங்குமா மலைதனைப் பிளந்து
பளிரெறி வயிர உளியெடுத் தடித்துப்
பகர்மனு வுருவதாய் வகுத்து

விண்டலத் தெழுந்த சோதியைப் பிடித்து
விழியென வொளியுற வழுத்தி
விரிநிலம் விளையும் மரகத மெடுத்து
வீதமொடு நாசியைப் படைத்துத்

துண்டவெண் பிறையைப் பணிசெய்து திருத்தித்
துடியொடு குடலதாய்ப் பொருத்திச்
சூரிய கதிரி னொளியதைப் பிடித்துத்
துலங்கிடு மேனியா யழுத்தி
மண்டல மீதி லிவனையும் படைத்தான்
மண்கொண்டு படைத்த ரூபலவே
வலுவுட னிவனை வருத்திட வியலா
வகைதனை யெவர்களுக் குரைப்பேன்.

## அதிகாரியுந் தேவசகாயனுந் தரு

இராகம் : அடாணா தாளம் : ஆதி

அதி : ஆழிகடல்சூழுலக மானதையொருகுடையு
ளாளுமரசாதிபதி யாருரையைமீறி
அதிகவீனவேதமது கதியருளுமென்றுரைத்த
ஆடம்பரவாய்கிழித்துப் போடவென்னாலாகும்

இராகம் : பூரிகல்யாணி ஏகதாளம்

தேவ : வீரபிரதாபமுள்ள தேசவதிகாரியேநீர்
வீணிலெனதாருயிர தானதைக்கொன்றாலும்
வேதனையல்லாதுநர காழமதில்வீழுகண
மானதையாராதனைசெய் யேனினிமேல்நானும்

அதி : வாழுமுடலானதைநீ வீணிலிழவாதேசிநீ
ராமனதுதாளிணையை யாவலொடுநேசி
வானபரனுதிசரு வேசன்மறையீதெனநீ
மாபிரியமாகநினை யாதேபடுபாவி

தேவ : நாரியர்கள்சேலைதனை யேயுரிதாமோதரனை
நாடியொருதேவனென வேபகரலாமோ
நாணமிலையோவெகுபெண் ணேடுகாமவாசையினில்
நாடுவோனைத்தேவனென வேபகரலாமோ

அதி : ஏழையல்லநீயொருமே லானபிரதானியல்லோ
ராசனுரைகேழுலக வாழ்வையிழவாதே
ஏதுசெய்யவேணுமென்றென் னேடுரைசெய்தாலதிக
மேறுவெகுமானபவுள் சானதுகள்தாறேன்

தேவ : ஆரமுதமானமுலைப் பாலருளுதாயர்மீது
ஆசைமிகவானவனை நீயுமறியாயோ
ஆருமறியாமலொரு ஆடுதனையேதிருடி
ஆவிமழுமாறியவக் காதையறியாயோ

அதி : நாளுமிதுவேசருவ தேவனதுவேதமென
நாடுவதுநீதியல்ல நானுரைத்தல்கேளாய்
நாகமதைமாலையணி யீசனையென்னுநினை
நாசமணுகாதுவரு தீவினைகள்மாறும்

தேவ : பாரில்மடமாதைச்சடை மீதிலணிந்தேயலைந்த
பாவியையோர்தேவனென வேகபரலாமோ
பாவையரைமேவிநடந் தேகியொருதூதுசென்ற
பாதகனைத்தேவனென வேபணிகுவேனோ

## அதிகாரி விருத்தம்

தொட்ட *காப்பு +நுதல்விழியோன் துணைத்தாள்
வணங்காத் துரோகியைச்சூழ்ந்
திட்ட காப்பி னுடுகொடுபோ யிரும்பா
லியற்று மரும்பெரிய
வட்ட காப்பிட் டதுபோற்கால் வலிக்க
விலங்கு துலங்குடனே
பட்ட வேப்ப மரத்தடுத்தே யடித்து
மட்டுப் படுத்துவீரே

வசனம் :- கேளும் சேவகரே, நிழல்கண்ட இடமெல்லாம் நடத்தி வெய்யில்கண்ட இடமெல்லாம் இருத்தி நன்ருயடித்துக் கொண்டுபோய்ப் பட்ட வேப்பமரத்திற் கட்டி, விலங்கிட்டு ஆக்கினை செய்து பின்னுந் திருந்தாவிடின் இராசனுக்கு அறிவிப்பீராக-

சேவகர் வசனம் :- அகா கேளும் நீலகண்டா, எங்கள் துரை கட்டளைப்படிக்கு பட்ட வேப்பமரத்திற் கட்டுவதற்கு நடவும் பிள்ளாய்.

## தேவசகாயன் தரு

இராகம்: சங்கராபரணம் ஏகதாளம்

1. கன்னிமாமரிபாலனே — ஆதி
கத்தனேபரிசுத்தனே
என்னையுன்கிர்பைதந்திவ்வே — ளையி
லிரங்கியாட்கொள்ளவேணுமே

---

* காப்பு — விபூதி + நுதல்விழியோன் — சிவன்

2. பண்டுநாள்முதலெங்கட்காய் — அடி
பட்டுண்டீர்கரங்கட்டுண்டீர் — இப்போ
தொண்டன்நான்படும்பாடெல்லாம் — வாயாற்
சொல்லவேயெளிதல்லவே

3. மண்ணின்மீதுநான்செய்தமா — பிழை
மாற்றியே என்னைத்தேற்றியே — இப்போ
புண்ணியம்பெறவுன்னருள் — தந்து
புரிகுவீர்கிர்பைசொரிகுவீர்

## பரணி

அருவாக வேயிருந்திர் சிலுவைமீது
அன்றிருந்தே முரைபகர்ந் தீரனாதி யான
ஒருவாதி கையிலுயி ரீந்தீர்பின்பு
உலகறியத் திரிநாளி லுயிர்த்தீ ரிந்தத்
திருவாக மந்தன்னையறி யாவஞ்சர்
செய்யுமிட ரதனில்மனஞ் சினந்து ருமல்
தருவாயுன் னிருபாத கமலம் போற்றித்
தமியனுயிர் விடவருள் செய்தாளு வாயே.

## சேவகர் கொச்சகத் தரு

### கொச்சகம்

வட்டவிலைமுட்படுகழற்சி மரக்கொம்பறுத்துன்வடிவமெல்லாம்
பட்டவடிமேலடியடிக்கப் பாயுமிரத்தப்பரவையைப்பார்

### தரு

இராகம் : மோகனம் அடதாளம்

அட்டமிளகுதூ ளிட்டோமுனக்கிந்த மட்டோ — நெஞ்
சலங்கமலங்க விலங்குதுலங்குசெய் வோமே
தொட்டவிதிமதி கெட்டோஅலகையுட் பட்டோ — இரு
துண்டாயுடல்கெட மிண்டாதேநீநீலகண்டா

### தேவசகாயன் கொச்சகம்

சொரிசெந்நீரு நிணமுமங்கந் துள்ளியடிக்கமுள்வீசி
மரிசமிடுதூட்டடவியென்னை வருத்தாவருத்தம்வருத்துகினும்

### தரு

குரிசிலறைபடு மரிசுதனெங்கள்பாவத்தால் — அடி
கொண்டதுமங்குயிர் விண்டதுமன்றிவேறுண்டோ
அரிசினமேகொண்டு பெரிதின்னமென்னசெய்தாலும் — எங்கள்
ஆதிசுதன்றனக் காயென்னுயிர்விடுவேனே

### சேவகர் கொச்சகம்

பட்டவேப்பமரத்தினைப்பார் பருத்தவிலங்குதுலங்கினைப்பார்
கட்டியடிக்குங்கயிற்றினைப்பார் காட்டுக்கழற்சிக்கவரினைப்பார்

### தரு

நட்டமடர்ந்திடு சுட்டமண்ணலில்நடந்திடு — இனி
நாயுங்கழுகொடு பேயுமுண்ணு முன்றன்காயமே
கிட்டிவிலங்கிடு கட்டியடிபட்டறியவே — உடல்
கீறிமிளகிடு ஏறுமிவன்மதம்மாறவே

### தேவசகாயன் கொச்சகம்

அங்கண்வருஞ்சீடரிலொருவனுறைந்தெனும்வெள்ளிக்ஃகிதர்
தங்கண்காட்டுங்கொடுங்கொடிமை தானென்கொடுமைதானலவோ

### தரு

செங்கண்பசாசி னினங்களடிமைக்கொள்ளாமலே — ஆதி
தேவதிருமரி மாதுதருமகனுகியே
எங்கண்ணிரங்கிமுட் டங்குறுசாட்டையாலங்கமே — லடி
யேற்றதற்காயென தாற்றுமத்தைத்தருவேனே

**சேவகர் வசனம் :-** கேளும் நீலகண்டம்பிள்ளாய், இந்தப் பட்ட வேப்பமரத்திற்கட்டி விலங்குந்துலங்கமிட்டிருக்குது. இனிமேலிதுவெல்லாம் பட்டறிந்துபார்த்துக்கொள்ளும் பிள்ளாய்.

### தேவசகாயன் கொச்சகம்

கனவை *நனவிலுரை காட்டிலரைக் கொல்லவெண்ணுஞ்
†சினவை வினைஅரசன் சிந்தையுறத் தேற்றுதற்குத்
தனதுமன தாற்றனியேல் தானறிந்தங் கோதலுறும்
மனதின்மன தாயுதித்த வானவனை மறவேனே

### ஞானப்பூ கொச்சகம்

வன்கணமொன் றியநரகில் மாளுமெமை மீளவந்த
நன்கணரு மங்கைகொண்ட நர்தர்திருத் தாயாகும்
பொன்கண மின்னிடு மகுடப்புண்யவதி யைப்போற்றி
என்கண வன்தங்கும் இடந்தேடிச் செல்வேனே.

---

ஃ அகிதர் — பகைவர்     * நனவு—மயக்கநீங்கல்.
† சினவு—கோபம்.

## ஞானப்பூ தரு

**இராகம்: கீரவாணி** **அடதாளசாப்பு**

1. ‡கண்ணுரும்வெண்‡ணகையும் — தூய
   காரகில்சந்தந்தக்கோலமெல்லாம்
   விண்ணுடுறச்சிதறிப் — பூவின்
   *வெண்டலேமேற்கொண்டு†வண்டலிடும்

2. மின்னுரருவிபொழி — வெல்லே
   வெற்பிற்பிறந்திடுமற்புதனுர்
   பொன்னுர்பதம்போற்றி — அன்பு
   பூணுமென்னன்பனேக்காணச்செல்வேன்

3. வற்ருதஆரமுதை — ஏற்ற
   மங்கல்யம்பூட்டியமாணிக்கத்தை
   உற்ருரேயூரவரே — கண்டால்
   உண்மையுரைத்திடவொண்ணுதோ

4. வெள்ளித்திருமாடம் — முற்ற
   வெய்யிற்படாதெனேவீட்டில்வைத்து
   அள்ளிப்பசியாறத் — தந்த
   அன்பரைக்காணீரோஅஞ்சுகங்காள்

5. கள்ளவன்நெஞ்சுடைய — நீலி
   காந்தாரியாமென்னேக்கைப்பிடித்த
   வள்ளலேக்கண்டீரால் — சோலே
   வண்டினங்காள்சற்றேவிண்டிடுங்காள்

6. வாலமடஅன்னங்காள் — பாவி
   வாருளென்ருேபயந்தோடுகிறீர்
   காலில்விலங்குடனே — என்
   கணவனுறையிடங்காணீரோ

## ஞானப்பூ கொச்சகம்

மைக்கோலங் கொண்டுவரி வண்டார் ¶தாரண்டலர்கள்
மிக்கோலங் கொண்டடியில் வீழ+விளா கத்தில்வென்று
அக்கோலங் கொண்டுவரு மன்றுகண்ட கண்ணிரண்டால்
இக்கோலங் கண்டேனே என்கணவா என்கணவா

---

‡ கண் — கணு.

‡ நகை — பூமொட்டு * வெண்டு—உட்டுளே † வண்டல் — நீர்ச்சுழி
¶ தார் — மாலே. + விளாகம் — போர்க்களம்.

## ஞானப்பூ தரு

**இராகம் : கரகரப்பிரியை** **ஏகதாளம்**

1. மின்னு*நாயிறு¶திங்கள் தன்னோடே வெள்ளிதங்க
மெய்க்குங்கா லுங்குஞ்சிர சிற்குஞ்சேர்க் குஞ்செவ்வாயார்

2. பொன்னம்பரவமலன் தன்னைத்தருமனந்த
பூரணியேநானிந்தக் காரணங்காணுவேனோ

3. அரசர்கள்மந்திரியே அதிவீரதந்திரியே
அலங்காரமானகாலில் விலங்கானவாறதென்னோ

4. சரசவசனமெங்கே தங்கம்போலங்கமெங்கே
சந்த்ரமுகந்தானெங்கே சங்கைமானே சொல்வீரே

5. அடிக்கடிக்கக்கையேந்தி ஆண்டவனேயுமக்கு
அபயமபயமென்று அழுதுதிடுக்கிட்டீரோ

6. துடிக்குதேயங்கமெங்கும் சோருதென்னுருயிரே
சொல்லீரோஎன்னுடைய செல்வமணவாளனே

## தேவசகாயனும் மனைவியும் தரு

**இராகம் : தேசிகதோடி** **ஏகதாளம்**

தேவ : வண்டலம்புங்குழல்சரிய—வாச
மலரெனுந் தாமரைகரியக்
கண்டலங்கண்ணீர்சொரிய—வந்த
கன்னிகையேகலங்காதே

மனை : மருக்கருக்கிமுடித்தாரோ—உன்றன்
வடிவமெங்கும் அடித்தாரோ
திருக்கரத்தில் பிடித்தாரோ—அந்தத்
தேர்வேந்தன் சேவகர்கள்

தேவ : மாவிலுறைகோகுலமே—மிக்க
வரிசைபெறுமாகுலமே
தாவிநிறையாகுலமே—கொண்டு
தார்குழலேசலியாதே

மனை : செல்லமுகம்வேறுபட—மிகு
செங்குருதியாறுபட
சொல்லமிர்தம்மாறுபட—வந்த
துன்பமென்னோஎன்கணவா

---

* நாயிறு—சூரியன் ¶ திங்கள்—சந்திரன்

தேவ : புல்லணையிலேபடுத்தார்—அன்று
புயத்திலொருகுருசெடுத்தார்
வல்லபரனுயிர்விடுத்தார்—மானே
மானிடர்க்காயறியீரோ

மனை : ஒளியிருக்கவிழிபோமோ—சொல்லும்
உயிரிருக்கவுடல்போமோ
அளியிருக்குந்தார்புயனே—உன்னை
யன்றியின்றுபோகேனே

## தேவசகாயன் இசலி

**இராகம் : செஞ்சுருட்டி** **தாளம் : சாப்பு**

எனதன்புநேச பிரியங்கள்கூரு மிருகண்களான மனைவி
வினைதங்கு லோக பிரபஞ்ச வாழ்வு விழலென்று ஆதிசுதனுர்
தனைநம்பு ஞான செபமுந்தியான தவவன்போ டோதிவரிலோ
கனகங்கொள் ஞான பரமென்றவானக் கதிசென்று பேறுபெறுவாய்

பெறுபேறதான பரலோகவாழ்வு பெறவேணுமாகி லுலகாள்
இறையானராய னநியாயமான விடர்வாந்தயான திடுவான்
அறையாமலாக மலையாமல்வேத மயராமலே துணிவிரால்
பிரகாசமான பரலோகவாழ்வு பெறலாமெய் யாகுமிதுவே.

**வசனம்:-** கேளும்தேவியே, நான் விலங்கிலுந் துலங்கிலுமிருக்கிறதுகண்டு நீர் மிகுந்த வியாகுலப்படவேண்டியதல்ல. அனந்தஞானசருவேசுரனைத்தோத்திரஞ்செய்துகொண்டிருந்தால் வரும் விக்கினங்கள் சகலமும்நீங்கும். சருவேசுரனுடைய சிறீகமலபாதஞ்சேர முழுமனதாயிருந்தேவியே.

## ஞானப்பூ தரு

**இராகம் : இந்துஸ்தான்பியாக்** **அடதாளசாப்பு**

1. கன்னிமரிதருமெய்ச்—சுதனே
கருணாகரனேஅருணே—தயனே
மண்ணிலடியாள்மணமே—புரிந்த
மணவாளனுக்குன்னருளே—புரிவீர்

2. அருநேயகனுகியலா—சறுவுக்
கனந்தநன்மைபுரிந்தீ—ரல்லோ
மருநேசமுள்ளதுணைவன்—உள்ளம்
மலங்காதிருக்கநலஞ்—செய்குவீரே

3. மண்பிறந்தவையந்—தனிலே
மங்கைமார்கள் தங்கள்—முன்னே
பெண்பிறந்தபாவி—யென்று
பேச இடமானே—னையோ

4. கருதரியமடமின்—ஞர்கள்
காசினியின்மீதே—என்னைப்
புருஷனில்லாப்பாவியென்று
புகல இடமானே—னையோ

5. தாலியுடன்வெண்டு—கிலும்
தந்த அன்பர்முந்து—வதால்
நூலிழந்தபாவீ—யென்று
நுவலஇடமானே—னையோ

6: கப்பலில் நோவாத—னக்குக்
கருதிநவஞ்செய்த—துபோல்
செப்பரியகணவன்—மோட்சஞ்
சேரவருள்புரிகு—வீரே.

## பேய் வரவு

வாதொடு பகையும் சண்டை சற்பனையும்
வகையில்லாக் கோபமுங் கொதியும்
சூதொடு வெறியும் வஞ்சகக் கருத்தும்
சூடியே மனிடர்தங் களையே
ஏதமே நிறையப் பண்ணிடும் பாவ
இயல்பெல்லாம் நடத்திட வல்ல
தீதனும் பசாசு சகாயனைத் திருப்பத்
திடமுட னருகில்வந் தனனே.

## பேய் தரு

இராகம் : மோகனம் தாளம் : ஆதி

1. கனலொடுமுந்தியசெந்தீயுடன்
காட்டியவீரபற்காட்டி
அனலில்அமிழ்ந்திடுசேனைகளின்
அதிசுக்ரேந்த்ரன்நானல்லவோ

2. தாயொடுமகளைச்சண்டைசெய்யத்
தங்கைதமக்கையைத்தூறுசெய்ய
மாயமதெல்லாமேபுரியும்
வல்லசுக்ரேந்த்ரன்நானல்லலோ

3. அப்பனுடனனைமக்களுடன்
அடிபிடிப்படவகைசெய்வதல்லால்
செப்பருமாமியும்மருமகளுஞ்
சிகைபிடித்திடச்செய்வோன்நானல்லவோ

4. பத்துஇறைசாற்கொருஇறைசால்
பரிவுடனெவ்வொருமாதமெல்லாம்
தித்திப்புடன்வட்டிவாங்கிடவே
செய்சுக்ரேந்த்ரன்நானல்லவோ

5. பூவின்றிமாலைகோத்திடுவேன்
புருஷனின்றிப்பிள்ளைபெறச்செய்குவேன்
நாவினல்நண்பரின்கூட்டுறவை
நறுக்கிடும்கிறுக்கன்நானல்லவோ

6. குடிவெறியாற்றுயில்கொள்ளச்செய்வேன்
கூட்டங்கள்ஆட்டங்கள்நாட்டிவைப்பேன்
அடியுடன்குடும்பசமாதானம்
அகற்றுசுக்ரேந்த்ரன்நானல்லவோ.

## பேய் மறு தரு

**இராகம் : செஞ்சுருட்டி** **தாளம் : ஆதி**

1. ஏதுநீலம்பிள்ளாயிந்தவேஷம் — இப்போ
ஏமைமறப்பதுன்விசுவாசம்
நாதனின்கிருபையின்பெலமோ — இந்த
நானிலத்தில்நீயீனக்குலமோ

2. மன்றல்செய்யுமாதைமறந்தாயே — அதி
மன்மதரூபம்போற்பிறந்தாயே
என்றும்வேதஞானஞ்சிறந்தாயே — மிகு
எளிமையாய்விலங்கிலுறைந்தாயே

3. இப்படிநீயிருந்திடல்நலமோ — ஐயா
இந்தக்கானமுன்றனின்தலமோ
செப்பமாகவேசெபஞ்செய்யாதே — உன்றன்
சிந்தையில்வேதநெறிவையாதே

4. நாடுநகர்வீடுமுனக்கில்லையோ — யேசு
நாதன்வேதமுமொருநிலையோ
தேடுமார்க்கமானதுமலையோ — எங்கள்
சிவமறையுளத்திற்குத்தொலையோ

5. வஞ்சிமார்த்தாண் டன்பகையாகாது — பெரு
மலையோடெதிர்த்தல்தகாது
அஞ்செழுத்துக்காரணத்தையோது — புத்தி
அறிவுநினைவுமகலாது

6. பற்பநாதபகவதியைத்தேடு — பய
பத்தியாய்ப்பூசித்துக்கொண்டாடு
விற்பனமனைவியுடன்வீடு — தன்னை
விரும்பிப்பவுள்சுகளை நாடு

7. இப்போசொன்னவார்த்தைகள்பொய்யாதே — ஐயா
எம்மீதுகோபம்வையாதே
செப்பியவார்த்தைகளைத்தள்ளாதே — நீயும்
தேவன்யேசுவென்னவிள்ளாதே

## பேய் கொச்சகம்

ஐயையோ நீலகண்டா அரிஅயனை யெஞ்சிவனை
வையகத்தி லேமறந்து மரிமகனைப் போற்றுவையோ
உய்யவகை பார்ப்பாய் உலகிற் றமிழ்மறையை
ஐயமற வேற்றல் அரசா யிருப்பாயே.

வசனம் :- கேளும் நீலகண்டம்பிள்ளாய், மரிமகனைத் தெய்வமென்று சொல்லுகிற பொய்யானவேதத்தைவிட்டு அரிஅயன்சிவனென்கிற கடவுளரடங்கிய மெய்யான வேதத்தை அனுசரிப்பாய், அதனாலுனக்கு இராசஉத்தியோகம் கிடைக்கப்பண்ணுவேன் அறிவாயாக.

## தேவசகாயன் கவி

துஷ்ட நிக்கிரகம் செய்யும் சூரனு மலகை யேநீ
கெட்ட துர்க்குணத்தில் வீழ்த்திக் கெடும்புகள் பண்ண வந்தாய்
இட்ட மாம்பிதாக் குமார னிஸ்பிரீத்துச் சாந்து வென்னும்
சிட்ட நாமத் தாலுனைச் செயித்திட்டேன் அகன்றி டாயே.

வசனம் :- துட்டசத்துராதியான பசாசே தேவதொண்டனுகிய என்மீது வலைவீசவருகின்ருயா? திரீத்துவ சருவேசுர னுடைய திருநாமத்தினுல் உன்னைச் சபித்தேன்; அப் பாலே அகன்ருேடுவாயாக.

## சம்மனசு வரவு

### கலித்துறை

பரமண் டலத்தொடு பூமண்டலமும் பலபொருளும்
நிரைகொண் டளித்தசரு வேசுரனது நேரடியை
அருளுண் டிறைஞ்சிடும் வானுறை ஆஞ்சுஅகமகிழ்வாய்
தரைதங்கு தேவசகாயன் றனதுமுன் தோன்றினுரே

## சபை தரு

இராகம் : சுருட்டி ரூபகதாளம்

1. அகமகிழ்ந்தனுதினமுவந்தரு
ளாதியம்பரநாதனு
ரருள்சிறந்திடவொளிபொருந்திடு
மாஞ்சுவானவர்தோற்றினுர்

2. பூவினுசையின்மேவிடாமலே
பொன்னம்பரன்பாதம்போற்றிடும்
தேவநேசச்சகாயன்றன்னைத்
தேற்றவானவன்தோற்றினுர்

3. நாவினுல்சொலவொண்ணுமுடியுடன்
நனியொளிகொளுமிறகசைந்திட
தாவுதேவசகாயன்றனக்குமுன்
சம்மனசுந்தோற்றினுர்.

## சம்மனசு தரு

இராகம் : பேலகிரி தாளம் : அடதாளசாப்பு

1. ஆதியந்தமில்லா நீததயாபரநாதா—பண்டு
ஆதாமைமண்ணினுல் ஆக்கும்மெய்வாக்கிய — போதா

2. மாதையவனின் வலவிலாவென்பினுலாக்கி—மிகு
வண்மைசேர்கட்டளை வைத்தாய் அவர்களை — நோக்கி

3. கட்டளை மீறிக் கனியையருந்தியேசாபம்—பெற்ருர்
காசினியோரைத் தொடர்ந்ததுவே அந்தப் — பாவம்

4. தொட்டபவத்தை யழிக்கத்தூயன்மனுவானுர்—அத்தால்
துஞ்சியுயிர்த்துச் சுகுணபிதாவிடம்போனுர்

5. அவரதுசேவை யனுதினம்செய்பவர்நாமே—அவர்
அன்பர்தமதிட மின்புடனேசெல்லுவோமே

6. பவவலேவீச பசாசைச்செயித்தோனேத்தேடிச்—சென்று
பற்றெருடுதேற்றம் பகர்ந்திடுவோம்புகழ்பாடி

## சம்மனசு விருத்தம்

கத்தனே வேண்டு கின்ற தூயனே சொல்லக் கேளாய்
பத்திரா சனத்தி ருந்து பரிசுத்த னருளால் வந்தோம்
சத்திய வேத தேவ சகாயனே ஆசீர் வாதம்
எத்தனே யிடர்வந் தாலும் ஏகனே மறந்தி டாதே.

வசனம் :- தேவமகிமைக்குப் பாத்திரமான தேவசகாயம்பிள்ளாய், நீ உலகசெல்வங்களே விரும்பாதே! உனக்காக ஆயத்தம்பண்ணப்பட்ட மோட்ச கிரீடத்தைச் சுதந்தரிப்பதற்காகச் சீக்கிரமாகவருவாய்! பிறந்தமனுடன் இறக்க வேண்டும். சரீரவருத்தங்களேப் பொருட்படுத்தாதே. இது ஆண்டவரின் சித்தம் அறிவாயாக.

## தேவசகாயன் திருவாசகம்

1. தானு யிருக்குங் கடவுளனே
சருவே சுரனே தயைக்கடலே
வானேர் துதிக்கும் பரம்பொருளே
மறையோர் பணிய வருபவனே
மானுர் சரீர மில்லானே
மட்டில் லானே மறைமுதலே
ஏனேக் கெலியாஸ் தனக்கிரங்கு
மிறைவா எனேக்கண் டிரங்குவையே

2. ஆருக் கனலா மனல்மூழ்கி
அவியா தவியுங் கட்டையென
நாரு நாற்றத் தினிளுறும்
நரகக் குழியில் வேகாமல்
பேரு கியபொற் பரகதியைப்
பெறவே யருளும் பிரசாதம்
ஈரு னதிலுன் னருள்புரிந்தே
இறைவா வெனேக்கண் டிரங்குவையே

3. சங்கைக் குரிய ஞேமைநகர்
தனையாள் திறையா னெம்பரதோர்
துங்கன் மணிமா ளிகைவாசற்
றுரையா யிருந்தபிலாசி தென்போன்
கங்குல்வனத் தில்வேட்டை புக்கக்
கலைமான் கோட்டிற் குருசிருந்து
இங்கேவா வெஸ்தாக்கி யென்ற
இறைவா வெனைக்கண் டிரங்குவையே

4. முள்ளு மரத்திற் றீயெரிய
மோசே சுக்குன் னருள்புரிந்தாய்
கள்வன்றனக் கற்புதம் புரிந்து
கதிவான் மோட்ச வீடளித்தாய்
துள்ளுங் குருதி தான்வடியத்
தோண்மேற் சிலுவைத னைச்சுமந்தாய்
எள்ளத்தனை யுன்னருள் புரிந்தே
இறைவா எனைக்கண் டிரங்குவையே.

## மலடி வரவு

### விருத்தம்

*தந்தியென் றுலவி வருவஞ்சி ராச
தளபதி வருத்தவே தளர்ந்து
†சந்திபெற் றிடவே தகையுறத் தேவ
சகாயனென் றுரைதரு செம்மல்
புந்தியென் றுறவே கர்த்தனைப் புகழ்ந்து
பொருவில நவஞ்செயல் கேட்டு
‡வந்தியின் றெனக்கோர் மகப்பேறு வேண்டி
வழங்கெனச் சபையில் வந்தனளே.

### தரு

இராகம் : பூபாளம் தாளம் : ஆதி

1. மந்தாரமாலைசூடி மதித்தகைவளைநீடி
சந்ததித்துயரைநாடிச் சபையில்மலடிவந்தாள்

2. கெற்பஉற்பத்தியில்லாள் கேள்விகிடைக்குமென்று
நற்புத்திகொண்டுசபை நாடிமலடிவந்தாள்

3. தேவசகாயமுறுந் தேவசகாயன்முன்பாய்
தாவிமகவீருப்பாற் சபையில்மலடிவந்தாள்

---

* தந்தி — யானை † சந்தி — சமாதானஞ்செய்துள்ளான்.
‡ வந்தி — மலடி

## மலடி தரு

**இராகம் : லாவணி** **ஏகதாளம்**

1. என்னசெய்வேன் ஏதுசெய்வேன்நானே — உலகில்
எப்படியிருந்துஉய்குவேனே

2. சின்னவயதினிலேமணம்புரிந்தேன் — எனக்கோர்
சிறுவனில்லாதாலேமனங்கரித்தேன்

3. முன்னைவினைசெய்துளதைதேனோ — ஆர்க்கும்
முந்தஅவதந்தரஞ்செய்தேனோ

4. சன்னைபண்ணிஎன்னைநெளிப்பாரே — உலகில்
தானெவரும்பேசிப்பழிப்பாரே

5. பிள்ளையில்லாப்பாவியென்றுதானே — எவரும்
பேசஇடமாகினேன்நானே

6. விண்ணுரும்புதுமைசெய்வோனிடத்தே — நானும்
விரும்பிவழிநடந்திடுவேன் திடத்தே

## மலடி விருத்தம்

ஐயனே போற்றி போற்றி அளவில்லா நவங்கள் செய்யும்
மெய்யனே உங்கள் தெய்வ வேண்டுதல் புரிந்திவ் வேளை
வையக மீதெனக் கோர்மகப் பேறு தரவே வேண்டும்
உய்யவே இந்த நன்மை உதவுவீ ருதவு வீரே.

**வசனம்:-** உமது புதுமைகளை அடியாள்கேட்டு உம்மிடம் ஓடி வந்தேன். நீர் உமது தெய்வத்தைமன்ருடி எனக்கொரு புத்திரபாக்கியங் கிடைக்கப்பண்ணியருளுமையா:

## தேவசகாயன் விருத்தம்

சீர்தங்கு மாதி யேக திருச்சுதா வுமக்கு நானும்
நேர்தங்கு மடிமை யென்று நினைத்தென திடத்தில் வந்தாள்
தார்தங்கு குழலி னுட்குச் சந்ததி யருள வேணும்
ஏர்தங்கு கமல பாத மெந்நாளும் போற்றி னேனே

**வசனம்:-** ஆதிசருவேசுரா உமதுகிருபாகடாட்சத்தை இம்மலடிக் கருளவேண்டுமையா.

## மலடி தரு

இராகம் : பரசு அடதாளம்

1. மானேமடமங்கையரே இந்த மாநிலத்துள்ளேரே — உயர்
வானேனருள்கின்றபுதினம் வழுத்திடக்கேட்டருளும்

2. நானேமணஞ்செய்தொருபிள்ளை நமக்குக்கிடையாதால் — நானும்
ஈனுமலடாகவிருந்து இடைஞ்சல்மிகவாகிப்

3. பண்ணுததவங்கள்புரிந்து பகலிரவில்லாமல்
கண்ணுகியதேவசகாயன் கருதுபதந்தொழுதேன்

4. மெய்யாயவர்கர்த்தனைவேண்டி வெகுவிதம்மன்ருட—இப்போ
பொய்யாதகர்ப்பங் கருக்கொண்டது போலவேகண்டேனே

5. இந்தநவம்போலவேநானே ரிடத்திலுங்கண்டதில்லை — இப்போ
சந்தோஷமாகமனைக்குச் சடுதியிற்செல்வேனே.

## மலடி கொச்சகம்

செய்யாத தருமமெல்லாஞ் செய்தெங்கள் தேவருக்கு
வையாத பலிகளெல்லாம் வைத்துமோர் பலனுமில்லை
பொய்யான தேவராலே புண்ணிய மடையலாமோ
மெய்யான தேவன்றன்னை வேண்டுதல் புரிகுவேனே.

## சபை விருத்தம்

1. அரிவைதன் வீட்டிற் போன தந்தநா டொடங்கி நல்ல
உருவுள்ள கர்ப்பந் தங்கி ஒன்பது மாதஞ் சென்று
சிரசில்முண் முடித ரித்த நேவன்றன் னருளி னலே
கருவுரு வாகப் பிள்ளை காரிகை பெற்றெ டுத்தாள்

2. பெற்றிட்ட மைந்த னுக்குப் பேரிட்ட வகையைக் கேளுஞ்
சத்திய வேத தேவ சகாயர் பேர் மதலைக் கீந்து
சித்திய தாக வந்த செல்வனை வளர்த்துத் தேவ
பத்தியாய்ச் செபங்கள் செய்து பாரினில் வாழ்ந்திட் டாளே

## இடையன் வரவு

### விருத்தம்

மகவிலா மலடி மைந்தனைப் பெற்று
வகுந்துத லொழிந்து வைகிடவே
சகமெலாம் புகழும் நவமுடன் தேவ
சகாயன் வீற்றுறை யிடந் தேடி

தகவிலா விடையன் செத்தவாட் டுயிருந்
தருவரோ வெனப்புயத் தெடுத்து
சுகமிலா நடைகொண் டடிக்கடி யிடறித்
துரிதமோ டெழுந்து வந்தனனே

## சபை தரு

இராகம் : தன்னியாசி அடதாளம்

1. காட்டோரமாடு விட்டே — நீர்
காட்டியருந்தளோ யூட்டிடையன்
ஆட்டுயிர் தாருமென்றே — செத்த
ஆட்டையுங்கொண்டிதோ தோற்றினனே

2. காலோடேகாலிடறி — ஒரு
கைக்கோலூன்றிச் சிக்கெனவே
மாலாடுவினோதமன — துடன்
வந்தானே இடையன்றானே

3. வாலக்கிளிமொழியாம் – மட
மங்கையரைப்படியிங்கிதமாய்
சீலத்தெருவிடையே — செத்த
செச்சையுங்கொண்டிதோ தோற்றினனே

4. பாலாலுடல்புகட்டும் — அவன்
பைந்தொடிசொற்படிஇங்கிதமாய்
கோலைக்கையிற்றூங்கிக் — கதைக்
கோனுனும்வந்து தோற்றினனே.

## இடையன் தரு

இராகம் : பலகம்ச தாளம் : ஆதி

1. காசினிமீதினில்நேசமாகக்
கனங்கொண்டபுருவையினினங்கள்சாய்த்து
நேசமாயடவியில்மேய்க்கும்போது
நிரையுற்றபுருவையொன்றிறந்துதையோ

2. சறந்துநான்பால்குடிக்கின்றபிள்ளை
காசினிமீதினிலிறந்ததாலே
மறந்தெனதறிவுபுத்திகளீதெல்லாம்
மலங்கியேமனம்மெத்தக்கலங்குதையோ

3. ஆம்படிபுத்திசொல்வார்களுண்டோ
அவனியிலுள்ளவர்எவரானாலும்
வேம்படிதேவசகாயன்முன்னே
விரைவுடன்புருவைகொண்டேகுவேனே.

## இடையன் விருத்தம்

விண்ணுறை ஆதிசுதன் னருளால் மேதினி
யடங்கலும் வியப்ப
எண்ணரும் நவங்கள் செய்ததுகேட்டு
யானுமைக் காணவே வந்தேன்
நண்ணுறு மெனது ஆட்டிலோ ராடு
நல்லுயி ரிழக்கநான் கொணர்ந்தேன்
அண்ணலே யுயிரைக் கொடுத்தெடுத் துக்கொண்
டடியேனுக் கருள்புரி வீரே.

வசனம் :- கேளுமையா, அனேகதவங்கள் செய்தீரென்று கேள்விப்பட்டு அடியேன் ஒரு செத்த ஆட்டையுங்கொண்டு வந்தேன். இந்த ஆட்டுக்கு உயிர்கொடுத்து எடுத்துக் கொண்டு அடியேனுக்கு அருள்புரிவீராக.

## தேவசகாயன் விருத்தம்

உண்மையாஞ் சுதனையெண்ணி யுவந்தா சீர்வதித் தேனிப்போ
வண்மையா யிறந்த ஆடு மறுபடி எழுந்த தப்பா
எண்ணமாய்ச் சிறையில் வைகும் எனக்கு வேண்டாம் நீகொண்டு
திண்ணமா யுனதூ ருக்குச் செல்லுவாய் செல்லு வாயே.

வசனம்:- கேட்பாயாக இடையனே, ஆண்டவருடைய கிருபையினால் இறந்தஆடு உயிர்பெற்றது, ஆட்டையுங் கொண்டு உனது ஊருக்குப்போவாயாக.

## இடையன் தரு

இராகம் : இந்துஸ்தான்மாண்டு தாளம் : ஆதி

1. கண்டேனேகண்டேனே — ஒரு
காரணம்நான்கண்டேனே
அண்டருலகத்திலுள்ள — ஒரு
அதிசயம்நான்கண்டேனே

2. தெய்வமென்ருலாதிகர்த்தன் — அவர்
சீஷனென்ருலிவர்சீஷ்ன்
வையகத்திலிவர்போல் — ஒரு
மாதவத்தர்காணேனே

3. ஆகிலிவர்தம்மிடம்போய்ப் — பாதம்
அடிபணிந்துமன்ருடி
ஏகசுதன்ஞானமெனும் — ஞானஸ்
நானமதுபெறுவேனே.

4. செத்திறந்துபோனபள்ளை — இந்தச்
செகதலத்திலுயிர்த்ததிஞல்
நத்தியேஞானஸ்நான – மிப்போ
நான்பெறவேநடந்துசெல்வேன்

## இடையன் விருத்தம்

வன்மையாந் தவத்தின் மிக்க மறுவறு குணத்துள் ளோனே
தன்மையா முங்கள் தேவர் தங்களை வணங்கி யானும்
புன்மையாம் பவங்கள் நீக்கிப் புண்ணியம் பெறவே வேணும்
நன்மையாம் ஞானஸ் நான நல்லருள் தருகு வீரே.

**வசனம்** :- கேளுமையா மூவரொன்ருகிய பரப்பொருளை வணங்கிறதற்கு ஞானஸ்நானம் தரவேணுமையா.

## தேவசகாயன் கொச்சகம்

உரத்த சிலுவை புயத்திருத்தி ஒல்லா ரடிக்கவுன துமெய்யி
லிரத்த மொழுகப் படும்பாட்டி னீனவடி யாற்கவ ருதவு
வரத்தின் மிகுத்த திருஞான மறையை யுனக்குமகிழ்ந் தளித்தேன்
புரத்தின் மிகுத்த தயவுடனே போயங் கிருந்து வாழ்வாயே

**வசனம்** :- பிதாச் சுதன் இஸ்பிரீத்துச்சாந்து இவர்களுடைய நாமத்திஞலே ஞானஸ்நானம்தந்தேன். புத்தியோடே நடந்து உனதுஊருக்குப் போவாயாக.

**இடையன் வசனம்**:- மகாபாக்கியம்|அப்படியேபோய் வருகிறேனையா

## இடையன் தரு

இராகம்: செஞ்சுருட்டி அடதாளசாப்பு

1. வானோன்கிருபைபெறு — மிந்த
மாநிலமீதுறுமானிடரே
நானோர்கதையுரைக்க — வெகு
நாட்டமுடனீங்கள்கேட்டருள்வீர்

2. தேவசகாயமென்பார் — இந்தச்
செத்தவாட்டுக்கேயுயிர்கொடுத்துத்
தாவிக்குழையருந்த — விந்தத்
தாரணிமீதினிற்கண்டேனே

3. கண்டேனிதுபுதினம் — யானுங்
காணரிதாம் ஞானஸ்நானமதைக்
கொண்டேன்பவந்தொலைந்தே — னிந்தக்
கோவிந்தன்மாமறைதான்மறந்தேன்

4. இதுபோலமெய்வேத — மதை
இத்தரைமீதினிற்கண்டதில்லை
பதிமீதிலென்னுடைய — வாட்டுப்
பட்டிதனக்குப்பரிந்துசெல்வேன்

## கிறீஸ்தவர் வரவு

### விருத்தம்

மதுரை பாளையநற் கோட்டை மாநகர் திருநெல் வேலி
பதிபுதுச் சேரி சென்ன பட்டினம் மைலாப் பூரு
மதிலுள்ள சத்திய வேத வாகமங் கற்ற பேர்கள்
கதிர்வடி வான வேத சகாயனைக் காண வந்தார்

## சபை தரு

இராகம் : எதுகுலகாம்போதி அடதாளம்

1. நவசங்கசபைதங்குமாசிலான்—யேசு
நாயகனிருபாதம்போற்றியே — உயர்
சபைமுன்பு ஆரம்பமாகவே — இந்தத்
தரைதனில் கிறீஸ்தவர் தோற்றினர்

2. பதியெங்குந்துதிபொங்கைங்காயனுர் — ஞானம்
   பயில்கின்றதேவசகாயனுர் — வெகு
கதிதங்கிவருபவனிருபதந் – தொழக்
   கருதியேகிறீஸ்தவர் தோற்றினுர்

3. மணிமுடிசிரமீதிலணிந்திடும் — வஞ்சி
   மார்த்தாண்டன்வினேயுட்பணிந்திடும் — வாதை
இணேயின்றிப்படவேதுணிந்திடும் — மந்த்ரி
   யிருபதந்தொழுதிட வருகின்ருர்

4. தலேதனிற்பசுந்தங்கமிலங்கவே — யிரு
   சரணத்திற்சிலம்பொலியலம்பவே — என்றும்
பழமைச்சத்தியவேதந்துலங்கவே — வெகு
   பண்புடன்தொழுதிட வருகின்ருர்

## கிறீஸ்தவர் தரு

இராகம் : மலேயாமி    தாளம் : ஆதி

1. சத்யமெய்ஞ்ஞான சருவேசுரன்றன்னேத்
   தாரணிமீதினிலே
   சந்ததம்போற்றிசெய்சற்குணனேக்காணச்
   சிந்தையாய்ச்செல்வோமே

2. பத்திநிறைவுறு சுத்தநவத்தன்
   பரிவுறுபாதங்களே
   பரவியனுதினம் பரமனருள்பெறப்
   பண்புடன்செல்வோமே

3. மதுரைமைசூர்சென்னே மயிலாப்பூராதிய
   வாய்ந்தவிடங்கள்நின்று
   வந்தடிபோற்றிடச் சிந்தையுற்ருேமுண்
   மகிழ்வுடன் செல்வோமே

4. சதவினேபுரிபவ ராலேநிதமுந்
   தரைதனிலேகனுக்காய்
   தக்கபாடுற்றிடு மிக்கோனுந்தேவ
   சகாயன்முன்செல்வோமே

## கிறீஸ்தவர் விருத்தம்

வந்திடுங் கிறீஸ்தோர் நாங்கள் மாசில்லா னேயுன் பாதஞ்
சந்தித்து விலங்கை முத்தி தான்செய்துன் காலில் வீழ்ந்தோம்
அந்தமாஞ் சிலுவை மீதி லாணிதைத் திறந்த ஞான
எந்தையாம் யேசு நாத இறைவர்க்கு ஸ்தோத்ர மையா.

**வசனம் :-** சருவசீவதயாபர சருவேஸ்பரனுடைய அனுக்கிரகம் எந்நாளும் பெருகி உண்டாவதாக, யேசுக்கிறிஸ்துவைத் துதிக்க ஐயா.

## தேவசகாயன் விருத்தம்

இறையவர்க் கேஸ்தோத்ர மென்றிடுங் கிறீஸ்தோர் கேளீர்
தரைதனிற் செல்வ மெல்லாந் தாமரை யிலையி னீராம்
பிருதுவி வாழ்வ தெல்லாம் பிறையெழுந் தழிந்த வாறும்
மறைமுதற் சத்ய வேதம் மாநிலத் தழிந்தி டாதே.

**வசனம் :-** கேளும்கிறீஸ்தவர்களே, சருவேஸ்பரனுடைய அனுக்கிரகத்தினுலே சரீரசுகம் உங்களுக்குண்டாவதாக. ஆண்டவருக்குத் தோத்திரம்பண்ணி உங்களுருக்குச் சென்று என்றென்றைக்குமழியாத சுக செல்வத்தோடு வாழ்ந்திருப்பீர்களாக.

## சேவகர் வீருத்தம்

காற்றெடு கடல்போல் என்மனத் திணைய
கடுந்திறல் வீரனே கேளுந்
தேற்றிடு மதிக சத்திய வேதந்
தெளிவுறு நீலகண் டனைநாம்

ஆற்றிடா வருத்தஞ் செய்து மிங்கவன்றன்
னளவில்லா நவங்களு மடங்கா
சாற்றிடு வோம்நாம் சென்றுமன் னவர்க்குச்
சடுதியா யெழுந்து வாராயே.

**வசனம் :-** கேட்பாயாக எனதுசினேகிதனே; நீலகண்டனை நாங்கள் எப்படிவருத்தினுலும் எங்கள்சமயத்திலே கட்டுப்பட்டுவருகிறதாகக் காணவில்லை. சகல சனங்களும் வந்து பாதமுத்திசெய்து போகிருர்கள். ஆகையாலிது செய்தியை இராசசமுகத்துக் கறியப்பண்ணுவோம் வருவாயாக.

## சேவகர் தரு

**இராகம்: சங்கராபரணம்** **ஏகதாளம்**

1. தும்பையணிந்திடு களமதெதிர்த்திடு
துட்டர்புறப்பட்டோடிடவே
வம்பவிழ்வாகை புனைந்திடஇங்கெனில்
வல்லவருண்டோதொல்லுலகில்

2. ஆமகளங்கங் கேநடவா
அச்சதுபோலுற உச்சிதமாய்
மாமனிடத்திற் சொன்னேனெனையவன்
மட்டியெனப்பெயர்கட்டினனே

3. வேலெனவாளெனவில்லென *வல்லென
வெற்றிவீரத்தொழிலுற்றதென
நாலெனமேலுறுதானையில்விஞ்சையர்
நண்ணுறவருபவரெண்ணிலரே

4. கொச்சைமகனிவ னென்றெனை யூரவர்
கூப்பிடலால்வெகுவாய்ப்புறவே
அச்சமுடன்கொச் சைத்தரமுற்றவ
ரப்புவெனப்பணிதொப்பையனே.

## சேவகர் விருத்தம்

அய்யனே போற்றி போற்றி அரசிருப் பவனே போற்றி
செய்யதோர் நீலம் பிள்ளை சேர்பதந் தனையிப் போது
வையகந் தனிலுள் ளோர்கள் வந்தடி பணிந்து போற்றுஞ்
செய்தியுன் சமுகந் தன்னில் செப்பநாம் வந்தோ மையா.

வசனம் :- கேளுமையா மந்திரியே, துலங்கிலேயிருக்கிற நீலகண்டனைச் சகல சனங்களும் வந்து பாதமுத்திசெய்து வருகிறார்கள். அவனைக் கட்டிவைத்த வேப்பமரமுந் தளிர்த்தது. மிகுந்த அதிசயங்கள் நடந்துவருகின்றன இனிமேல் இந்தஊரிலே அவனிருந்தால் சத்தியவேதம் எங்கும் பரம்பிவிடும். நமது தமிழ்மறை நடப்பதில்லை ஐயா.

மந்திரி வசனம்:- அப்படியா செய்தி, நீங்கள் அங்குபோய்த் தக்க காவல்செய்திருப்பீர் வீரரே.

## மந்திரி விருத்தம்

திருமருவு நரபதியே யுமது முன்பு
செப்புகின்ற வசனமதைத் தெரிந்து கேண்மோ
மருவலர்பூம் புயசயில வரச ரேறே
மாநிலத்தை ஒருகுடைக் கீழாளும் வேந்தே
பெருமைசெறி கிறீஸ்துமதம் புகுந்த நீலம்
பிள்ளைதனைச் சிறையில்வைத்து வெகுநா ளாச்சு
ஒருபொருளாஞ் சத்யமறை மறந்தி டாம
லுறைத்தவன் போலிருப்பவர் களுண்டோ மன்னா

---

* வல் — சீக்கிரம்

## மறு விருத்தம்

அவனிதனிற் கிறீஸ்துமறை யறிந்த பேரில்
அவனைவந்து காணாத மனுட ரில்லை
எவரெவரும் வந்தவன்கால் விலங்கைத் தொட்டு
இருகண்ணில் வையாத பேர்க ளில்லை
திவசமொவ் வொருநாளுந் தின்னு தற்குச்
சிமிழ்களிலும் வெற்றிலைகள் கொண்டே வாரூர்
இவனுமிந்த நாடதனி லிருந்தாற் சத்திய
மேறிவரும் நமதுமத மிளைக்கு மன்னா.

வசனம் :- கேளும் இராசனே, துலங்கிலேயிருக்கிற நீலகண்டனைச் சகல சனங்களும் வந்து பாதமுத்திசெய்து மிகுந்த அதிசயம் நடந்துவருகுது. அவனும் நமதுதேவரைப் பழிக்கிறுன். இனிமேற் தமிழ்மறை நடப்பதில்லைஐயா.

## இராசன் தரு

**இராகம் : முகாரி** **தாளம் : அடதாளசாப்பு**

1. எண்டிசைமன்னவ ரெல்லவருந்தொழுதேற்றிடும் — ஆல
கண்டனைமந்திரி நிந்தனைபேசவுமாச்சுதோ
2. அன்றுதொட்டின்றள வாயுனை ஆசரிக்கின்றநான் — நீல
கண்டனுக்கஞ்சிக் கலங்கவிதித்தாயோ தெய்வமே
3. மாற்றலர்வந்து வணங்கியடிதொழும்நானே — ராச
கோத்திரமென்ற குறிப்புக்குலைந்துவிட்டேனே
4. கொந்தலர்வீசிய கோமளப்பஞ்சணைமீதினிலே — நானும்
வந்துஉறங்க மனதுவிசாரமுற்றேனே
5. சொல்லரும்நீலனு மெங்கள்சமயந்தொழுதிட்டால் — நானும்
வெல்லம்நற்பால்பழம் மெத்தத்தேடிப்படையேனே
6. தில்லைநடம்புரி தேவனேமாசிவசங்கரா — இந்தப்
புல்லர்சமயமே போக அருள் செய்திரங்குவாய்
7. இத்தரைமீதினிற் சத்தியவேதம்மெய்யானதோ — எங்கள்
இன்பமுறுந் தமிழின் தெய்வமெல்லாம்பெய்யானதோ
8. புத்தியில்லாத பைத்தியகாரனைநானே — இந்தப்
பூதலத்தோர்க ளறியக்கொலைசெய்குவேனே

வசனம் :- கேட்பாயாக மந்திரி, இந்த நீலகண்டன் என் ஆணைக்குள் அடங்குகிறுனில்லை. அங்குநடந்தகாரியங்களைச் சவிஸ்தாரமாய்ச் சொல்லுவாயாக.

## மந்திரி தரு

இராகம் : செஞ்சுருட்டி தாளம் : ரூபகம்

1. சுந்தரஞ்செறியிந்தநகராள் துரையே
   நானென்றுசொல்லிடக்கேளும்
   விந்தைசேர்நீலகண்டனை நீரும்
   மிகுந்தஊரதிகாரரிடத்தில்

2. சொந்தமாகவருத்தஅனுப்பவவர்
   சூழ்ச்சியாய்ப்பலஆக்கினைசெய்து
   பந்தமாகஒருபட்டவேம்பிற்
   பதைக்கவேகட்டிவைத்திருந்தார்காண்

3. வைத்தபோதுமரமுந்துளிர்த்து
   மகாபுதுமைநடந்ததுகண்டு
   சுத்தவீரர்வந்தங்கு நடந்த தொகுதி
   யாவுமுரைசெய்தாரையா

4. கத்தனைத்தொழும் நீலகண்டன் றன்னைக்
   காசினிதன்னில்வைத்தேயிருந்தால்
   பத்தியாய்ச்சத்யவேதம தெங்கும்
   பரம்பியேயூரடங்கிடாதையா.

வசனம் :- நீலகண்டனுக்கு மிகுந்த சங்கைகள்நடக்குது. அவனை இனிவைத்திருந்தால் நமதரசுக்கு ஈனமுண்டாகும் மன்னவனே.

## இராசன் விருத்தம்

அடங்காத வஞ்சனும் நீலம் பிள்ளை
யாரவா மணிக்கோட்டை வாசல் தன்னிற்
கிடங்கதனி லிருக்குமவ னிடத்தே நீபோய்க்
கிளர்த்துநல் வார்த்தைகளைக் கேளா துன்னுள்
மடங்காம லவனிருந்தாற் பிடித்துக் கட்டி
வாரெடுத்தே யடித்தவனை மறிப்பில் வைத்துத்
தடங்காம லெனது சமுகத்தில் வந்தச்
சங்கதியோ டுனதெண்ணஞ் சாற்று வாயே.

வசனம் :- கேளும் மந்திரி, நீலகண்டனிடம்போய் அவனுக்கு உன்னாலியன்ற புத்திமதியைச்சொல்லிப்பார். உன்னுரையையும் மீறுவானாகில் நன்றாயடிக்கச்செய்தும் அதற்குமடங்காவிட்டால் மீண்டும்வந்து தெரிவிப்பாய்; ஆனால் இன்னொரு சங்கதிகேட்பாயாக.

## இராசன் மறு விருத்தம்

ஆரவா மணிக்கோட்டை வாச லுக்கு
அருகிருக்கும் பிரதானி குடும்பம் யாவுந்
தீரனென வருநீலம் பிள்ளை யோடு
சிநேகமா யிருக்கிறதை யறிந்தேன் நானும்
வாரமுள்ள மந்திரியே நீபோய் நானே
வரவழைத்தே னென்றவனை யனுப்பி விட்டுப்
பேரான கிறீஸ்துமறை யறிந்த நீலம்
பிள்ளையிடஞ் சென்றுமொழி பேசு வாயே.

வசனம் :- கோட்டை வாசலிற்கருகிலுள்ள பிரதானியும் அவன் குடும்பமும் நீலகண்டனுடன் சிநேகமாயிருக்கிருர்கள ளாம். அவனை என்னிடமனுப்பிவிட்டு அதன்பின் நீலகண்டனுடன் பேசுவாயாக.

மந்திரி வசனம் :- அப்படியே செய்கிறேன் இராசனே.

## சபை விருத்தம்

தரையாளு மரசனுடை மொழியைக் கேட்டுச்
சதியுடனே மதியமைச்சன் மனமகிழ்ந்து
பிரியமுட னடந்துவந்து கோட்டை வாசற்
பிரதானி யானவனை வரவழைத்துத்
திருமனது கொண்டிறைவன் வரவே சொன்னர்
தீவிரத்தி லேசெனவே யனுப்பிவிட்டுத்
தருமமுள்ள தவப்புனித ஞன தேவ
சகாயன்மறிப் பிருக்குமிடந் தனில்வந்தானே.

## மந்திரி விருத்தம்

மன்னனென்னை யழைத்துன்பா லனுப்பி விட்ட
வளர்பெரிய காரியத்தை வழுத்தக் கேளாய்
இந்நிலத்திற் கிறீஸ்துமறை படித்து நீதா
னிருக்கிறதை யொருகணத்தி லிகழ்ந்து விட்டு
முன்னைமுதல் நாம்வணங்குந் தேவர் தம்மை
முயற்சியுடன் தொழுதுவந்தால் மோச மில்லைச்
சொன்னமொழி தனைக்கேளாய் கேளா விட்டாற்
ருேஷ்ம்வரு மிதுகருமஞ் சொன்னேன் நானே.

வசனம் :- கேளும் நீலகண்டம்பிள்ளாய் அரசன் என்னை ஈற்றில் உன்னிடமனுப்பியிருக்கிருர். நீபற்றிய நவீன மதத்தைவிட்டு எங்கள் புராதன சமயத்தை ஏற்ருல் சுகம் பெறுவாய். அன்றேல் அதிசீக்கிரம் தோஷமுண்டாம் அறிவாயாக.

### தேவசகாயன் விருத்தம்

தோசம்வந்தா லனுபவிப்பே னளவில் லாத
சோதிபரன் றிருமறையை மறப்ப தில்லை
நீசமுள்ள மறையையனு சரிப்ப தில்லை
நீதிபரன் மறையைக் கைநெகிழ மாட்டேன்
யேசுநசர் திருவசன மறக்க மாட்டேன்
எரிநரகப் பேய்களைக்கை யெடுக்க மாட்டேன்
பேசுவதெல் லாமபத்த மாய வார்த்தை
பிதற்றுவரோ வுலகிலுள்ள பெரியோ ரையா

### மந்திரியும் தேவசகாயனும் தரு

இராகம் : எதுகுலகாம்போதி — அடதாளம்

மந் : ஓகோநீலகண்டா ஆகாதகோலம்நீகொண்டாய் — போக
ஒண்ணுமறைதன்னை நண்ணியென்னபலன்கண்டாய்

இராகம் : காம்போதி — அடதாளசாப்பு

தேவ : சாகாவரம்பெற்ருே ராரிப்புவிதனிலையா — இத்
தரையைவிடிற்கதி தன்னிலுறுவேன்நான்மெய்யாய்

மந் : கண்ணுற்கதிதன்னைக் கண்டவன்போலவிள்ளாதே—வேந்தை
எண்ணுமலெய்த லறியாமலேநீதுள்ளாதே

தேவ : விண்ணுடுசேர விருப்பம்மிகவெனக்குண்டு — என்ன
பண்ணுதவாதை பண்ணினும்செய்யேன்பேய்கட்குத்தொண்டு

மந் : தேற்றமுடன்மொழிசாற்றுந்துணிவினைக்கண்டேன் — உன்னை
சீற்றமாயுள்ளந் திகைக்கக்கொல்லமனங்கொண்டேன்

தேவ : ஈற்றிற்செய்வதென்ன ஆத்மாவையும்வதைப்பாயோ — உன
தெண்ணப்படிசெய்ய மண்ணினில்நானெருநாயோ

மந் : இன்னுமெதிர்த்தென்றன் முன்னரறைகிருய்நேராய் — நான்
என்னசெய்வேனென்று இன்றைக்கிருந்துநீபாராய்

தேவ : என்னிறுதிகாண உன்னியிருந்திட்டாய்போலும் — வேறு
புன்மைகளென்ன புரியவுன்னுலினியேலும்

## மந்திரி விருத்தம்

உண்டான வளமையை யானுரைத்தே னெல்லா
முவரிதனிற் கரைத்தவுப்புப் போலே யாச்சு
மண்டலத்திற் பிறந்தகுடி யானோ ராசன்
வார்த்தைதனக் கெதிர்மொழிகள் வழுத்து வோரைக்
கண்டதில்லை இவன்மனது உருக்கோ செம்போ
காசினியில் விளைவயிரக் கல்லுத் தானோ
எண்டிசையு மறியவிலங் கோடே வீர
ரிவனைவெளி தனிற்கொடுவந் தடித்தி டீரே.

வசனம்:- கேளும் வீரரே, இவனைக் கட்டவிழ்த்து வெளியே கொண்டுவந்து நல்லாய் அடித்து ஆக்கினைசெய்வீர்களாக.

சேவகர் வசனம்:- அப்படியே செய்கிறோம் அமைச்சே.

## தேவசகாயன் தாழிசை

அற்புதா பரம கர்த்தனே சுகிர்த
வாரணு சருவ பூரணு
அடியன்மே லுனது கிருபை கூருமென
தவசரத் திலிது சமயமே
பொற்பதா புகழ்கொள் வீற்பனு பரம
புனிதனே மனதி லினிதெனப்
புவியினு சையிலென் னினைவிலா மலருள்
புரிவையே சருவ கடவுளே
சற்பிர சாதமுள தற்பரா வுலக
சருவ சீவர்கள் தயாபரா
தமியன்மே லுனது கிருபை கூருமிது
சமய வேளையருள் புரிவையே
சொற்பனு னவென்மே லற்பமே யருள்செய்
சோதியே யளவில் லாதவா
சுகிர்த சாதுரிய கடவுளே யுனது
சுருதி பேறுதயை யருளுமே.

வசனம்:- பரமகடவுளே! இவர்கள் மிகு கடுமையாய் வாதிக்கிறுர்கள். உமதருட்பிரசாதந் தந்தருளுஞ்சுவாமி!

## மந்திரி விருத்தம்

வெளியதனிற் கொண்டுசென்று புளிய மாருல்
மேனிதனி லடித்தாலும் பயனென் றில்லை
தெளியுமன துள்ளவனைக் காண வாற
செனங்களுக்குக் கட்டிவைத்த விடுதி வீட்டில்
தளைவிலங்கோ டேநடத்திச் சிறையில் வைத்துச்
சாக்கிரதை யாய்க்காவல் காத்தி ருப்பீர்
அளிசெறிதார் மார்பனு மரசன் முன்போய்
அதிவிரைவில் வந்துசெய்தி யறிவிப் பேனே.

வசனம்:- அதோ இருக்கிற விடுதிவீட்டிற் கொண்டுபோய் இவனைக் காவல்செய்திருப்பீர். நான் மறுபடிவந்து சங்கதி தெரிவிப்பேன் வீரரே.

## மந்திரி விருத்தம்

காவலனே யுமதுவள நாட்டி லுள்ளோர்
சற்பனைகேட் டிருப்பதல்லால் மறுப்ப துண்டோ
நாவசைத்தே யெதிர்த்துமொழி சொல்வா ருண்டோ
நகரிலெங்கள் தேவர்களைப் பழித்த பேர்கள்
சீவனுட னிருப்பார்களோ விருந்தா லுன்றன்
சீமைகளுக் கீனங்கள் செய்வார் திட்டம்
ஆவலுட னவனுயிரை வதைத்தா லல்லா
லரும்பொருளார் சத்யமறை யடங்கி டாதே.

வசனம்:- கேளும் இராசனே, அவன் ஒன்றுக்கும் அசைகிருனில்லை. எதிர்த்து மறுமொழி சொல்லுகிருன். உமது பேச்சைக் கேட்பதில்லையென்கிருன், அரசே.

## இராசன் விருத்தம்

மறமிகு விறலதாக மதிப்பின்றி யுன்ற னேடு
திறமது பேசுகின்ற சீர்குலைந் தவனை யிப்போ
கறைபட ஞமலியுண்ணக் கருத்துடன் போடா விட்டால்
இறைவனென் றியம்பார்கைம் பெண்ணெனவுஞ் சொல்லு வாரே

## இராசன் வண்ணத் தரு

**இராகம் : பைரவி** **தாளம் : ஆதி**

1. பானுலா விந்தநகர் தானுமே சொந்தமென
நானுமே நிந்தனைபண் ணுமலே*பிர பந்தமுடன்
பண்புற்றே பற்மநாபுரநக ரன்புற்றே யரசுபுரிந்திட
வென்சொற்கீ ழெவர்களுமடி தொழ வெங்குற்ற முடிமன்னர் சகலரும்
+ஏல்வையதாகவே பாவனையுடனொரு
கோல்முறைதவறலில் லாமலேயெவர்களும்
நாவினுலெதிரிடை யோதுவதின்றியே
நாளுமேதிறைகுறை யாமலேதருவார்

2. பேயனு மிங்கொருவன் நீசனுய்ச் சங்கரனைப்
பேயனு மென்றுவசை பேசநா வந்ததென்ன
பெரியனே வவனுமெனக் கெதிரனே தில்லைநடம்
புரிவோனே என்சமயஞ் சரசமாய்ப் பகர்பவனைப்
பேசரிதாய்நரி நாய்களருந்திட
வூனெழவேகொலை யேபுரிவீரரை
யேவியேதாமதி யாமலேயோர்சண
மானதிலீனம தாய்வதைபுரிவேன்

3. காலகா லன்றனைமா வாலமே யுண்டவனை
நீலமா கண்டன்மிகு காலமாய் மிண்டுபண்ணி
கங்கைசூ முலகிலென்றன் சங்கையைக் குறைப்பவனை
இங்கேயோர் கணமதனிற் சங்கர னுணையவன்
கனநவமறியவே வெகுள்வொடுகொலையது
புரிவதுதிடனினி மனமதுபொறேனினி
கணமதிற்றுணிவோடு காற்முடிமலைமிசை
கைவெடிசுடவகை செய்திடுவேனே.

## இராசன் ஆசிரிய விருத்தம்

மாற்றுயர்ந் திடுதங்க ரத்னமணி வாசலில்
வராது முன்னே மறுத்தான்
மற்றுமென் றன்னுடைய கட்டளைக டம்மையும்
வன்னெஞ்சு கொண்டு மாற்றிப்
பேற்றுயர்ந் திடுமெங்கள் தேவரை யிகழ்ந்தும்
பிராமணர் கடமை வெறுத்தும்
பின்னுமென் னைப்பழித்துஞ் சத்ய வேதப்
பெருந்தகை மையுடை யனுகி

---

* பிரபந்தம்—தொடர்பு † எல்வை — காலம்

ஆற்றரும் புவியெலாந் தன்கைக் குளாக்கவு
மகத்தி னினைந்து ளானே
அறிஞனே யென்னையவ னறிகி லானே
நானுமப் படிமிகச் சிறியனே
சாற்றருந் தவறுபுரி நீலகண் டன்றனைச்
சதிசெய் சேவகரை யேவித்
தங்குகாற் றுடியெனு மலைமே னிறுத்திவெடி
தனைவைத் துவதை செய்வியே.

வசனம்:- கேளும் மந்திரி, எனதாணையை மறுத்து அரசழித்த நீல கண்டனைக் காற்றுடி மலையிற் கொண்டுபோய்க் கைத் துவக்காற் சுட்டுக்கொன்றுவிடும்படி மழுவருக்கறிவிப் பாயாக.

## மந்திரி விருத்தம்

மாற்றலருக் கிடியேறு தன்னை யொத்த
வல்லமைசேர் மழுவர்களே வழுத்தக் கேளீர்
சாற்றரிய தப்பிதஞ்செய் நீல கண்டன்
றனைநீங்கள் சடுதியதிற் கொண்டு சென்று
காற்றுடி மலைதனிற் கரங்கால் கட்டிக்
கள்வனவன் றனைக்கைத் துப்பாக்கி கொண்டு
மாற்றமின்றி யிரங்காமற் சுட்டுக் கொன்று
வந்தெனக்குச் செய்திதனை வழுத்து வீரே.

வசனம்:- கேளும் வீரரே, இராசாவினது கட்டளைப்படி நீலகண் டனைக்கொண்டுசென்று காற்றுடிமலையுச்சியி னிறுத்திக் கைத்துவக்காற் சுட்டுக்கொன்றபின் அச்செய்தியை எனக்குவந்து தெரிவிப்பீராக.

சேவகர் வசனம்:- அப்படியே செய்கிறோம் அமைச்சே.

## சேவகர் விருத்தம்

*நீலாடு †களத்தினனை யிகழ்ந்துரைக்கும்
நீலகண்டா நிகழ்த்தக் கேளாய்
மாலாடு முன்றனுடை வஞ்சநெஞ்ச
மெனுமிரும்பின் வலிமை தீர்க்கக்
காலாடு மலையிலுய்த்துக் கைத்துவக்கால்
வைத்துவெடி கடிதிற் கொன்று
மேலாடு பருந்துவிருந் தருந்தவிட்டு
வாருமென்றூர் விரைவில் வாராய்.

---

* நீல் — நஞ்சு. † களம் — மிடறு.

வசனம்:- கேளாய் நீலகண்டா 'தன்னாலே தான்கெடுவார்' என்று முன்னோர்சொன்னபடி நீகொண்டமதியீனத்தால் உன்னைக் காற்றாடிமலையில்நிறுத்திக் கொன்றுவிடும்படி இராசாவின் கட்டளையாயிற்று, வருவாயாக.

## சேவகர், தேவசகாயன், பெண் ஞானப்பூ தற்கத் தரு

**இராகம் : மோகனம்** **ஏகதாளம்**

சேவ : அண்டாமாயஞ் செய்யுநீல கண்டாநீகேள்
கொண்டமதியாலே — மன்னன்
அடர்ந்துகொல்லச் சொன்னா ருன்னை
நடந்துமலையிடந்தனிற் செல்வாயே

**இராகம் : புன்னாகவராளி** **ஏகதாளம்**

தேவ : வண்டாரும்பூந் தண்டார்சூடும் வன்மேந்திர
மன்னவன் சேவகரே — நடவும்
வாறேன்கொல்லப் போறாரென்னை
மானேநில்லாதேபோம் வீட்டிற்றானே

ஞான : *மண்டார்முந் நீரண்டுபூமேல் மங்கலிக்குள்
நானுமமங்கலியாய் — வைகி
வாழுவேனோ வுன்பின்வந்து மாளுவேனோ
கேள்வனே சொல்வாயே

சேவ : தான்சாகப் போறாய்நீ பெண்டீர்தானுஞ்
சாகப்புத்திசொல்லிவாறாய் — நின்று
தள்ளாடாதே கள்வாவின்றைக் குள்ளாயாவி
கொல்வோம் வருவாயே

தேவ : மான்சாய்கைக் கொம்பினில்வந்து தான்சார்ந்து
பொருனற்கருளீந்தார் — என்தன்
மனையாளே யெனைநினை யாதேநீ
மறந்துமனையுறைந்து வாழுவாயே.

ஞான : கூன்சாய்கைப் பொன்†னீந்தி லூன்றும்
தேன்சாயுஞ்செந்தாமரைத் தாளாளே — உன்றன்
குணமாமைந்த னுடனே யென்றன்
மணமாமைந்தர்க் கருள்செய்யச் சொல்வீரே.

---

* மண்டல் — மிகுதல். † ஈந்து — இந்து (சந்திரன்)

தேவ : மாற்றுடற் பட்டெனை வன்னரகிற்
‡காற்றுடற்கொள்ளலகைகையிற் போடாப்-பூவின்
மனுவான யேசுவேயும்மை மறவாதுறத்
திறமாருன்றுளருளே

ஞான : ஊற்றுடற் பேராறுட்பட்டு உலையுந்
துரும்பாய்நானிருந்துழல — நீரும்
உமக்குவாழ்வு தேடிப்போறீ ரெனக்கு
வாழ்வுதருவாரார்சொல்வீரே.

## தேவசகாயன் கொச்சகம்

மானமுள்ள மடமயிலே மன்னவன்வஞ்சி மார்த்தாண்டன்
கானகத்திற் காற்றுடிக் கரியமலைக் கனுப்பிவிட்டான்
நானுனக்குச் செய்தபிழை நாயகமே நீபொறுத்து
வானபரன் பாதமதை மறவாது துதிசெய்யே.

**வசனம் :-** அகா கேளுந் தேவியே, பரமண்டல மந்திரம் காலை மாலைச் செபம் மறவாதே. தானதருமதவம் புரிந்து தேவநேசமாயிரும் மடமானே.

**சேவகர் வசனம் :-** அடியே இதற்காகத்தான் நீயும் ஒத்துக் கொண்டு அவதிப்பட்டாய்; அம்மட்டில் நில்; எங்களுடன் வரப்படாது. நீலகண்டா இனித்தாமதமென்ன? யாதொன்றும் பேசாமல் விரைவாய்ச் செல்வாயாக.

## தேவசகாயன் வேண்டுதல் (ஒரிசம்)

**இராகம் : சஹானு** **தாளம் : ஆதி**

1. ஆரணமெய்ஞ் ஞானநன்மை யானநாதா
அளவில்லாக் கிருபையுள்ள அமலபோதா
காரணனே யருள்புரியுங் கமலபாதா
கைவிடாதேயுனது கிருபைதாதா

2. இந்தவுல காசைகளை யிழந்தேதீயே
னின்பநித்தி யானந்தத் திற்குள்ளாயே
சிந்தையுவந் தேகதியிற் செல்லநீயே
திருவிரக்க மாய்க்கிருபை செய்குவாயே

3. காரணனே பராபரப் பொருளேதுய்யா
கர்த்தனே யலகையெனைக் கலக்கஞ்செய்யா
ஆரணனே திருக்கிருபை அருளிமெய்யாய்
அளவில்லா மோட்சமதி லழைப்பாயையா

‡ காற்றுடல் — நிலையில்லாமை.

4. இருள்நிறைந்த நடுச்சாம மிடுக்கண்துன்று
மிருகாலில் விலங்கோடு மெடுத்துச்சென்று
கருமலேமே லிருத்திவெடி வைக்கவென்று
கர்த்தனே கொடுபோமுர் அருள்வாயின்று.

## சபை விருத்தம்

முகனை முடிவில் லாத பரம ஞான
முதலவனை நமஸ்கரித்து முடிந்த பின்பு
விகட தலேயா ரிகளு நடந்து சென்று
வெற்பதெனுங் காற்றுடி மலேமே லேற்றி
சகல நன்மை நிறைந்தவீசு வாசன் றேவ
சகாயனைக் கால்விலங் கோடேயிருத்தி வைத்துப்
பகைவ ரைந்து வெடிக்குழலில் மருந்தை யிட்டுப்
பருத்தகுண்டு நிறைத்தவர்கள் பக்கல் வந்தார்.

## தேவசகாயன் தரு

1. வானத்தையும் லோகத்தையும் வரையானதுந் தரையானதுந்
பானுெத்தசெஞ் சுடரானதும் பளிரானவெண் மதியானதும்
மீனுெத்ததா ரகையானதும் விடிவானது மிரவானதும்
தானுெக்கவே யாகட்டெனுஞ் சருவேசுரா சருவேசுரா

2. என்னுதனே கிருபாகரா வெளியேன்வெகு பவகாரனுன்
உன்னுதர வல்லாலெனக் கொருபேர்துணை யிலேயேகனே
சென்னுக்கொலு மலேயானதில் சீடர்க்கருள் புரிதேவனே
தன்னேடெதி ரில்லாதவா கருவேசுரா சருவேசுரா

3. மாகத்திலே வரவேவெகு மனதாகினேன் துணிவாகவே
ஏகப்பரப் பொருளானவா வெளியேனுடை யுயிரானது
தேகத்தையே விட்டேகையிற், றிருவானகம் பெறவாசையாய்
சாகத்தயை புரியேகனே சருவேசுரா சருவேசுரா

4. மரணத்திலே யடியேன்மன மலேயாமலோர் நிலேயாகவே
கிரணத்தொளிர் கதிர்சேர்வது கிருபாகரா திடமாமிது
தருணத்திலென் மனமானது சலியாமலென் னுயிரானதுன்
சரணத்திலே வரவேயருள் சருவேசுரா சருவேசுரா

5. இருள்நேரமே மலேமீதிலென் னிருகாலிலும் தழையாடியே
விரைவாகவே சதிகாரர்கை வெடியென்னுடல் புகுவேளேயில்
திருவானகம் பெறுவேனெனத் திடனுகநா னினேவாகவே
தருவாயுன தருளானதைச் சருவேசுரா சருவேசுரா

## சேவகர் தரு

**இராகம் : நாதநாமக்கிரியை** **தாளம் : ரூபகம்**

1. சங்கராசிவ சம்புவேயிவன் றன்னையேகொல்ல நண்ணியே
தான்துவக்கெடுத் தேமருந்துவைத் தடியடாஅச்சா விடியடா
2. பங்கமாகவே யிங்குள்ளோர்நசை பண்ணவேவகை நண்ணவே
பதறிடாமலே விதறியேலக்குப் பாரடாவெடி தீரடா
3. மத்தகத்தையே யொத்த வஞ்சகன் மடிந்துபோகவே தடிந்துநாம்
வகையதாய்மன்னன் பகருசொற்படி மாட்டடாகுண்டால் வாட்டடா
4. கைத்துவக்கதனுல்வெடிவைக்கத் தைக்குதில்லையென்செய்குவோம்
கந்தமாகிரி வந்ததேவனே களைக்குதேதுயர் விளைக்குதே

**வசனம்:-** இதேதடா இரண்டுகுண்டு தைத்தும் பொய்க்காய மாய்ப்போச்சுதே! அவன் அசைவின்றியிருக்கிருன் பாரடா.

## தேவசகாயன் விருத்தம்

காற்ருடி மலையில்வைத்துக் கைத்துவக்
காந்சுட வெனுயிர் பிரியும்போது
மாற்றமொன் றுமெனக்குவந் தணுகிடாமல்
மாசில்லா யேசுவேமலர்ப் பாதத்தைப்
போற்றிசெய் தனவரத காலமெல்லாம்
புகழ்முனிவ ரோடிருக்கப் போவதற்குத்
தேற்றரவு தந்தென்ற னுத்துமத்தைத்
தேவனே யுமதுகரஞ் சேருமையா

## சபை விருத்தம்

தைக்க வவர்சுட்ட இருகுண்டு தூயன்
சரீத்திரத்திற் சறுகிப்பொய்க் காயமாகக்
கைக்குழற் றுப்பாக்கிகளில் மிகுதி மூன்றைக்
கைப்பற்றிக் கோரவெடி கதியதாக
வைக்கவே நெஞ்சதனில் மூன்றுகுண்டு
வலுவாக்கப் படவைந்து காயத்தோடு
இக்கணத்தி லேயேசு மரிசூசை யிரட்சியு
மென்றித்தரை விட்டே கினுரே.

## சம்மனசு தரு

இராகம் : செஞ்சுருட்டி தாளம் : ரூபகம்

1. தற்பரற்காய் வீய்ந்த தேவ சகாயனேவாராய் — இன்பஞ்
சார்ந்துமோட்சஞ்சேர்ந்துகளி கூர்ந்திடுநேராய்

2. பொற்பதியின் பாக்கியத்தைப் புக்கிநீபாராய் — அங்கு
போய்ப்புகுந்தன் பாய்ச்சுகித்துன் நோக்கத்தைத்தீராய்

3. பூவுலகின் துன்பத்தாலே புடமிடப்பெற்றாய் — உயர்
பொன்னுலகந் தன்னிலுற்றுப் போதனைப்பற்றாய்

4. சாவுபிணி மூப்பென்கிற சங்கடமற்றாய் — மிகு
தக்கவேத சாட்சிமுடி தங்கிடவுற்றாய்

5. தாகமில்லை நோவுமில்லைச் சார்பசியில்லை — அங்கே
சார்ந்துதூய்மை சேர்ந்துவாழ்வோந் தற்பரனெல்லை

6. லோகசுக போகமதா லுற்றிடுந்தொல்லை — விட்டு
ஓடிடுங்கேட் பாய்பரம னோதிடுஞ்சொல்லை

7. மெத்தவருத் தங்கள்பட்டாய் விமலனைத்தேடி — இந்த
மேதினிச்சு கத்தைவிட்டு விண்பதிநாடி

8. முத்தர்குழாம் நித்தமங்கே துத்தியம்பாடி — அன்பாய்
முறைமுறையே அடிபரவ முன்னிற்பாய்கூடி

9. அவனியிற்செல் வசுகத்தை யருவருத்திட்டாய் — துட்ட
அலகையின் மயக்கமெல்லாம் அகற்றியேவிட்டாய்

10. தவமிகுந் தமலன்பாதம் தன்னையேதொட்டாய் — நீயும்
சந்ததமும் ஆனந்தமாந் தலத்தினுட்பட்டாய்

## ஞானப்பூ தரு

இராகம் : பலஹம்ச அடதாளம்

1. யேசு மரியே சூசை ஐயோ
ராச நீதம் என்ன நீதம்
வாச நேச ராச னுமென்
மணவா ளனக்குன் குணவாழ் வருளே

2. கட்டுமடியும் பட்டென் கணவன்
கழரா விலங்காய் உழராத் துலங்காய்
பட்ட வேம்பிற் கட்டி யடித்தார்
பரனே யுமது பாத மருளே

3. கள்ள முள்ள கள்ளி நானே
கன்னி மரிய வென்னுந் தாயே
உள்ளன் பாகி யுன்றன் மகனே
டுரைத்தென் கணவற் குயர்வாழ் வருளே.

## ஞானப்பூ கற்பித்தான் தரு

இராகம்: சௌராட்டிரம் அடதாளசாப்பு

ஞான: அரியநேசத் தலைவனுமென் னன்பனையே வன்பினாலே
அரசனுங்கட் டியடித்தானே — ஆறுதே

கற்: உரியவாதி சுதனையன்று உணர்வில்லாத யூதர்சென்று
உறுக்கிவன்பா யடிக்கவில்லையோ — சலியாதே

ஞான: வனசமலர் நிகர்சரணில் வல்விலங்கிட் டேயெருமை
மாட்டிலேற்றிக் கோட்டிகொண்டாரே — ஆறுதே

கற்: முனைசேர்முள்ளின் முடியழுத்தி முறிந்தநாற்கா லியிலிருத்தி
மோடிசெய்த கதையறியீரோ — சலியாதே

ஞான: சொல்லருமென் னுசைநேசத் துய்யமண வாளன்றன்னை
துட்டர்வெடி யால்வதைத்தாரே — ஆறுதே

கற்: வல்லவாதி சுதனையன்று வலிநிறைந்த யூதர்சென்று
வன்குருசில் வதைக்கவில்லையோ — சலியாதே

ஞான: மாற்றுயந்த முடிதரித்த மன்னவன்சே னுபதியே
முடிந்தவுட லடக்குவாரிலையே — ஆறுதே

கற்: சாற்றரிய உனதுநேசத் தலைவனுடல் தனையடக்கச்
சடுதியென்றன் படையுடன்வாறேன் — சலியாதே

## சபை விருத்தம்

1. இருளிலே கிறீஸ்தவர்கள் குருவினோடு
எஸ்தாக்கி யேவலினு லெங்குந் தேடி
திருவுலவு சரீரமதை யெடுத்துவந்து
திகழுகோட் டாற்றிலே சவேரி யாரின்
அருளுலவு மாலயத் தடக்கிவைத்தார்
அவ்விட மண்ணதையுண்ட யாவ ருக்கும்
பெருமதிசயங்கள் நடைபெறுதல் கண்டு
பீடுறுசத் தியவேதம் பெலத்த தாமே.

2. தாயொடு பந்தினராச னெருக்கத்தாலே
தையல்மெய்ம் மறைநெறியிற் றவறி னாலும்
தூயனரு ளாலரசற் குறுவிபத்துஞ்
துஞ்சினரால் நடக்குமதி சயமுங் கேட்டு
மாயவுல கச்சுகத்தை வெறுத்துராச
வருத்தமற்ற தென்பாண்டி நாட்டிற் கேகி
நேயகன்னி யர்மடத்தைச் சேர்ந்திருந்து
நித்தியா னந்தகதி நேர்ந்திட்டாளே.

---

## மங்களம்

### பல்லவி

மங்களம் மங்களம் — இந்த
மண்ணும் விண்ணும் படைத்தருள்
உண்மைச் சருவேசனுக்கு — மங்களம்

### சரணம்

1. திங்களைப்பதத்தணிந்து சிரத்துடுமுடிசூடி
செங்கதிரையுடுத்திட்ட தேவதாயார்பாதத்திற்கு—மங்களம்
2. மாசில்லாமாமரிதரு யேசுநாதரைவளர்த்த
வாசமலர்விருதேந்துஞ் சூசைமாமுனிவனுக்கு — மங்களம்
3. உன்னருமறைதனக்கா யிந்நிலத்திற்பாடுபட்டுத்
தன்னுயிர்விடுத்ததேவ சகாயசிகாமணிக்கு — மங்களம்
4. மூப்பாய்ரோமாபுரியில் முதல்வனிஸ்தானுபதியாய்ப்
பாப்பாயிருந்துஎம்மைப் பரிபாலிப்பவருக்கு — மங்களம்
5. மெய்மறைபகரவந்த வீரத்தகுருமாருக்கும்
துய்யகற்புநிறைவுள்ள சுகிர்தகன்னியருக்கும் — மங்களம்
6. தேவசகாயன்றனது திருச்சரித்திரத்தினை
நாவாற்புகழ்ந்துபாடும் நல்லகிறீஸ்தவர்க்கும் — மங்களம்
7. நாட்டுக்கூத்தாய்நன்கு நடித்துக்காட்டுகின்ற
கூட்டுநடிகர்குழாம் கூடிவாழஎன்றும் — மங்களம்

## வாழி விருத்தம்

மூவரொன் ருகிய பரனின் மறையிற் சேர்ந்து
முத்திநெறி வழிநடந்தோர் முனைந்து வாழி
காவலர் கள்செங் கோன்மை குன்ரு வாழி
கர்த்தர்மெய்ம் மறைக்குரவர் களித்து வாழி
பாவ சமயங்களையே வெறுத்துத் தள்ளும்
பரிசுத்த கன்னியர்கள் பரந்து வாழி
தேவ சகாயன் றனது சரித்தி ரத்தைச்
சீராகப் பாடியரா டினரும் வாழி.

**தேவசகாயம்பிள்ளை நாட்டுக்கூத்து முற்றிற்று.**

## வடமாகாணத்தில் அரங்கேறிய
## சில நாட்டுக் கூத்துகளும், பாடிய புலவர்களும்

| கூத்துகளின் பெயர் | பாடிய புலவர் பெயர் | இடம் | காலம் |
|---|---|---|---|
| 1. அந்தோனியார் | சுவாம்பிள்ளை | பாஷையூர் | 1810 |
| 2. தொன் நீக்கிலார் | ,, | ,, | ,, |
| 3. கத்தறீனாள் | ,, | ,, | ,, |
| 4. மரிய கரிதாள் | ,, | ,, | ,, |
| 5. கிறிசாந்தப்பர் | ,, | ,, | ,, |
| 6. செபஸ்தியார் | ,, | ,, | ,, |
| 7. நொண்டி | அவுரும்பிள்ளை | கரையூர் | 1815 |
| 8. சம்பேதுரு பாவிலு | ,, | ,, | ,, |
| 9. சூசையப்பர் யாக்கோபு | ,, | ,, | ,, |
| 10. வரப்பிரகாசம் | ,, | ,, | ,, |
| 11. சுளியார் | ,, | ,, | ,, |
| 12. **தேவசகாயம்பிள்ளை** | முத்துக்குமாரு | அராலி | 1836 |
| 13. அதிரூப அமராவதி | ,, | ,, | ,, |
| 14. அலங்கார ரூபன் | ,, | ,, | ,, |
| 15. காந்த ரூபன் ரூபி | ,, | ,, | ,, |
| 16. மீகாமன் (வெடியரன்) | ,, | ,, | 1836 |
| 17. துரோபதை வஸ்திராபரணம் | ,, | ,, | ,, |
| 18. அழகவல்லி | ,, | ,, | ,, |
| 19. வாளபிமன்னன் | ,, | ,, | ,, |
| 20. யூதகுமாரன் | சந்தியோகு | கரையூர் | 1856 |
| 21. சபீன கன்னி | ,, | ,, | ,, |
| 22. மூவிராசாக்கள் | ,, | ,, | ,, |
| 23. என்றிக் எம்பிரதோர் | ,, | ,, | ,, |
| 24. இசிதோர் | ,, | ,, | ,, |
| 25. சந்தியோகுமையோர் படைவெட்டு | ,, | ,, | ,, |
| 26. கனகசபை | தம்பாப்பிள்ளை | பறங்கித் தெரு | 1875 |
| 27. தாவீது கோலியாத்து | ,, | ,, | ,, |
| 28. ஞான சவுந்தரி | சுபவாக்கியம்பிள்ளை | பறங்கித் தெரு | 1895 |
| 29. உடைபடா முத்திரை | ,, | ,, | ,, |
| 30. கற்ப ரூபவதி | தம்பிமுத்து | மாதகல் | 1910 |
| 31. தொம்மையப்பர் | ,, | ,, | ,, |
| 32. பிரான்சீஸ் சவேரியார் | ,, | ,, | ,, |
| 33. திருஞான தீபன் | ,, | ,, | ,, |

தடித்த எழுத்திலுள்ள கூத்துக்கள் அச்சுருவம் பெற்றவை

| | | | |
|---|---|---|---|
| 34. கண்டியரசன் | மிக்கோர்சிங்கம் | பாசையூர் | 1910 |
| 35. கட்டப்பொம்மன் | ,, | ,, | ,, |
| 36. கற்பலங்காரன் | ,, | ,, | ,, |
| 37. சஞ்சுவாம் | பொன்னையா | சுண்டிக்குளி | 1915 |
| 38. மத்தேசு மவுறம்மா | ,, | ,, | ,, |
| 39. எஸ்தாக்கியார் | சூசைப்பிள்ளை | மாதகல் | 1915 |
| 40. சங்கிலியன் | ,, | ,, | ,, |
| 41. கருங்குயில் குன்றத்துக் கொலை | ,, | ,, | ,, |
| 42. இம்மனுவேல் | ,, | ,, | ,, |
| 43. கிறிஸ்தோப்பர் | யாக்கோப்பு | சுண்டிக்குளி | 1915 |
| 44. மெஞ்ஞான வர்த்தகன் | ,, | ,, | ,, |
| 45. தானியேல் | ,, | ,, | ,, |
| 46. மாகிறேற்றம்மா | நீக்கிலஸ் (பரிகாரி) | கரையூர் | ,, |
| 47. மரியதாசன் | மரியாம்பிள்ளை | சுண்டிக்குளி | 1932 |
| 48. விசய மனோகரன் | ,, | ,, | ,, |
| 49. மார்க்கப்பர் | சந்தியாப்பிள்ளை | ,, | ,, |
| 50. தீத்தூஸ் | | கரையூர் | |
| 51. செனகப்பு | | | |
| 52. பங்கிராஸ் | | | |
| 53. ஆட்டு வணிகன் | | | |
| 54. ஊசோன் பாலன் | | | |
| 55. ஞானரூபன் | கிறிஸ்தோப்பர் | பாஷையூர் | |

---

## திரு. மு. வி. ஆசீர்வாதம் ஜே. பி. அவர்கள்
பதிப்பித்து உதவிய

# நாட்டுக்கூத்து நூல்கள்

1. எஸ்தாக்கியார் நாட்டுக்கூத்து 3-00
2. விசய மனோகரன் நாட்டுக்கூத்து 3-00
3. மரியதாசன் நாட்டுக்கூத்து 3-00
4. தேவசகாயம்பிள்ளை நாட்டுக்கூத்து 5-00

ஆசீர்வாதம் அச்சகம் சக புத்தகசாலை
50, கண்டி வீதி
யாழ்ப்பாணம்

தொலை பன்னி: 274